


# இந்தியாவின் சமுதாயச் சீர்திருத்தச் செம்மல்கள்

ஒன்பதாம் வகுப்பு

(துணைப்பாட நூல்)

# இந்தியாவின்
# சமுதாயச் சீர்திருத்தச் செம்மல்கள்

(துணைப்பாட நூல்)

ஒன்பதாம் வகுப்பு



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்
சென்னை

முதற் பதிப்பு—1981

ஆசிரியர் :

டாக்டர் இரா. குமரவேலன்,
தமிழ்ப் பேராசிரியர்,
பச்சையப்பன் கல்லூரி
சென்னை - 600 030

புலவர் புகழேந்தி
தமிழாசிரியர்,
குமாரராசா முத்தையா உயர்நிலைப் பள்ளி,
காந்தி நகர், அடையாறு,
சென்னை - 600 020

மேலாய்வாளர் :

டாக்டர் மா. இராமலிங்கம்,
தமிழ்ப் பேராசிரியர்,
அரசினர் ஆண்கள் கல்லூரி,
கும்பகோணம்

புலவர் தணிகை உலகநாதன்,
துணைத் தலைமையாசிரியர்,
இந்து தியாலாஜிகல் மேல்நிலைப் பள்ளி,
தங்கசாலைத் தெரு,
சென்னை - 600 001

விலை ரூ. 1-30

இந்திய அரசு சலுகை விலையில் வழங்கிய 60 ஜி. எஸ். எம்.
தாளில் இந்நூல் அச்சிடப்பட்டுள்ளது.

அச்சிட்டோர்
முத்துக்குமரன் பிரஸ், சென்னை - 1

# பொருளடக்கம்


| | | பக்கம் |
|---|---|---|
| 1. | தந்தை பெரியார் | ... 1 |
| 2. | மூதறிஞர் இராஜாஜி | ... 17 |
| 3. | இராஜா ராம்மோகன்ராய் | ... 31 |
| 4. | தயானந்த அடிகள் | ... 39 |
| 5. | அன்னி பெசன்ட் அம்மையார் | ... 50 |
| 6. | வீரேசலிங்கம் | ... 60 |
| 7. | கோகலே | ... 71 |
| 8. | அண்ணல் காந்தியடிகள் | ... 80 |
| 9. | அக்காள் சுபலட்சுமி | ... 95 |
| 10. | அன்னை முத்துலட்சுமி | ... 107 |
| 11. | டாக்டர் பீமராவ் அம்பேத்கார் | ... 119 |
| 12. | அறிஞர் அண்ணா | ... 130 |

# 1. தந்தை பெரியார்

தந்தை பெரியார் இராமசாமி அவர்கள் இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற சீர்திருத்தச் செம்மல்; பகுத்தறிவுப் பகலவன்; தன்மான இயக்கத்தின் தனிப்பெரும் தலைவர்; உலகப் பேரறிவாளர்களுள் ஒருவர்; அவர் செயற்கருஞ் செயலாற்றி வெற்றி கண்ட வீரர் ஆவார்.

## இளமையும் கல்வியும்

பெரியார் ஈ. வே. ரா. இன்றைய பெரியார் மாவட்டத்தில் ஈரோடு என்னும் பேரூரில், வேங்கடப்ப நாயக்கருக்கும் சின்னத்தாயம்மாள் என்னும் முத்தம்மாளுக்கும், 1879 செப்டம்பர் பதினேழாம் நாள் இரண்டாம் மகனாகத் தோன்றினார். தமையன் கிருஷ்ணசாமியும், தங்கையர் பொன்னுத்தாய் கண்ணம்மாள் ஆகியோரும் உடன்பிறந்தார் ஆவர்.

இராமசாமி தம் ஆறாம் அகவையில் திண்ணைப்பள்ளியில் சேர்ந்து மூன்றாண்டுகள் தொடக்கக் கல்வி கற்றார். பின்னர், இரண்டாண்டுகள் ஆங்கில முறைப் பள்ளியில் பயின்றார். பள்ளியைச் சூழ்ந்து வாணியச் செட்டியார், வேதக்காரர்கள், முஸ்லிம்கள் ஆகியோரின் இல்லங்கள் இருந்தன. அவ்வீடுகளில் நீர் அருந்த வேண்டா என இராமசாமியிடம் பெற்றோர் எச்சரித்திருந்தனர்; நீர்வேட்கை எடுத்தால் ஆசிரியர் இல்லத்தில் நீர் அருந்தக் கூறியிருந்தனர். இராமசாமி ஒருநாள் ஆசிரியர் இல்லத்தில் நீர்அருந்தச் சென்றார். அங்கு அவ்வீட்டார் செம்பில் நீர் கொணர்ந்து, ஒரு குவளையைக் கீழே வைத்துத் தண்ணீரைத்தூக்கி ஊற்றினர்; நீர் குடித்தபின், குவளையின் மீது தண்ணீர் தெளித்து, எடுத்துச் சென்றனர். அன்றுமுதல் இராமசாமி ஆசிரியர் இல்லத்தில் நீர் குடிப்பதை நிறுத்திவிட்டார். நண்பர்களுடன் சென்று பிற இல்லங்களில் வேறுபாடு கருதாமல் நீர் அருந்தினார். 'தொட்டால் தீட்டு' என்னும் மூட எண்ணம் அவருக்குப் பிடிக்கவில்லை.

### 'தலைவிதி' ஆராய்ச்சி

பெரியார் இராமசாமி தம் பன்னிரண்டாம் அகவையில் தம் தந்தைக்குத் துணையாக வணிகத்தில் ஈடுபட்டார். கல்விடைக் குறிச்சி இராமநாத ஐயர் ஈரோட்டுக் கடைத்தெருவில் கடை வைத்திருந்தார். அவர் கடையைக் கடந்தே இராமசாமி தம் கடைக்குச் செல்ல வேண்டும். தம் கடைக்குப் போகும் போதெல்லாம் இராமசாமி, இராமநாத ஐயரை வம்புக்கு இழுக்காமல் போகமாட்டார். இராமநாத ஐயரோ எல்லா வற்றிற்கும் தலைவிதியே காரணம் என்பவர். பன்னிரண்டே அகவை நிறைந்த பெரியார் ஈ. வே. ரா. 'தலைவிதி என்பது வெறும் புரட்டு' என்று கூறுபவர்; 'தீதும் நன்றும் பிறர் தர வாரா, நோதலும் தணிதலும் அவற்றோரன்ன' என்னும் கொள்கை உடையவர். 'தலைவிதியின்படியே எல்லாம் நடக்கும் என்று நம்புவது அறியாமை' என்று அவர் அடிக்கடி கூறுவார்.

ஒருநாள் அவர், இராமநாத ஐயர் அவர்களிடம், 'எல்லா வற்றிற்கும் காரணம் தலைவிதி என ஒத்துக்கொள்கிறீரா?' என்று கேட்டார். 'ஒத்துக்கொள்கிறேன்' என்றார் இராமநாத ஐயர். உடனே கடையின் முன்பக்கத் தட்டிக்கு முட்டுக் கொடுத்திருந்த கால்களைத் தட்டிவிட்டார் ஈ. வே. ரா. தட்டி 'தடார்' என்று இராமநாத ஐயரின் தலையில் விழுந்தது. சினங் கொண்ட இராமநாதன் ஈ. வே. ரா.வை வைதார். உடனே அவர், 'தலைவிதிதான் உம் தலையில் தட்டியைத் தள்ளி விட்டது. என்னை ஏன் வைகிறீர்?' என்று கேட்டார். இத் தகைய குறும்புத்தனம் பெரியாரிடம் இளமை முதல் இயல் பாகவே காணப்பட்டது.

### திருமணம்

பெரியார் இராமசாமி தம் பத்தொன்பதாம் அகவையில் நாகம்மையாரைத் திருமணம் செய்துகொண்டார்; முப்பத்தைந்து ஆண்டுகள் அன்போடு இல்லறம் நடத்தினார். அவர்கள் அன்பு வாழ்வில் ஒரு பெண்குழந்தை பிறந்தது; பின் இறந்து விட்டது. அதன்பின் மகப்பேறு இல்லை.

### ஒருபுறம் வருத்தமும் மறுபுறம் சிரிப்பும்

இராமசாமி ஒரு சமயம் பெற்றோரிடம் சொல்லாமல் வடநாடு புறப்பட்டார். ஐதராபாத், காசி, கல்கத்தா முதலிய பல்வேறிடங்களுக்குச் சென்று, பல்வேறு துன்பங்களுக்கும்

ஆளானார்; பட்டறிவும் பெற்றார். கைப்பொருள் இன்றி இரந்தும் உண்டார். அந்நிலையிலும் அவர் தம் நகைகளை விற்றுவிடவில்லை. ஒரு கணையாழியைத் தவிரப் பிறவற்றையெல்லாம் பெஜவாடாவில் ஒருவரிடம் கொடுத்து வைத்திருந்தார். கணையாழியை மட்டும் விற்றுச் செலவழித்துவிட்டார். எல்லூரிலிருந்தபோது அவரது தந்தையார் அவரைத் தேடி வந்தார். தம்மிடமிருந்த நகைகளையெல்லாம் தந்தையிடம் தந்தார். 'இத்தனை நாளாக நீ எப்படியப்பா சாப்பிட்டாய்?' என்று கேட்டார் அவர். 'நாம் ஈரோட்டில் செய்யும் தருமங்களையெல்லாம் இங்கே தண்டல் செய்துவிட்டேன்' என்றான் இராமசாமி. தந்தைக்கு ஒருபுறம் துயரமும், மறுபுறம் சிரிப்பும் ஏற்பட்டன.

## பொது வாழ்வு

தந்தை பெரியார் பொதுவாழ்வில் ஏற்றத்தாழ்வின்றி அனைவரிடமும் சமமாகவும் அன்பாகவும் பழகுகின்ற அரிய பண்பைப் பெற்றிருந்தார். ஈரோட்டில் எவ்வகுப்பினர் இல்லத்தில் எத்தகைய நன்மை தீமை ஏற்பட்டாலும் அங்குச் சென்று முதலில் நிற்பார். செய்யவேண்டிய அனைத்து உதவிகளையும் செய்வார். இதனால் அவ்வூரார் அனைவரும் அவரை உற்ற தோழராகக் கருதினர்.

ஒரு சமயம் ஈரோட்டில் 'பிளேக்' நோய் பரவியது. பல பேர் மடிந்தனர்; எண்ணற்றோர் அஞ்சி ஊரைவிட்டே ஓடிவிட்டனர்; செல்வர் அனைவரும் ஒருவரை ஒருவர் முந்திக் கொண்டு அச்சத்தால் ஓடினர்; போக்கிடமற்ற ஏழை மக்களே உள்ளம் நடுங்கி ஊரிலேயே தங்கியிருந்தனர். தந்தை பெரியாரோ ஊரைவிட்டு ஓடாமல், ஏழைமக்களுக்கு உதவினார். அஞ்சா நெஞ்சோடு பல பிணங்களைத் தாமே தூக்கிச் சென்று அடக்கம் செய்தார். அது கண்டு பலரும் அவரைப் போற்றினர்.

## பட்டறிவும் பண்பு நலன்களும்

தந்தை பெரியார் பொதுவாழ்வில் பல பொறுப்புகளை ஏற்றிருந்தார். வாணிகத் தொழிலில் ஈடுபட்டுத் தந்தையின் நம்பிக்கையைப் பெற்றபின் தந்தையிடமிருந்த பல பொறுப்புகள் பெரியாரிடம் வந்து சேர்ந்தன. எத்தகைய செயல்களைச் செய்ய நேர்ந்தாலும் அவற்றை நாணயத்தோடும் பொறுப்புணர்ச்சியோடும் செய்துமுடிப்பவர் அவர்.

அக்காலத்தில் ஈரோடு வட்டத்திலுள்ள கோயில்களின் அறங்காவலர் குழுத் தலைவராகப் பல ஆண்டுகள் இருந்தார். தந்தை பெரியார் உருவ வழிபாட்டை வெறுப்பவர்; கடவுள் நம்பிக்கையற்றவர்; திருவிழாக்கள் வீண் செலவுக்குரியவை. மூடநம்பிக்கையை வளர்ப்பவை எனக் கருதுபவர். ஆயினும் தம் தலைமைப் பொறுப்புணர்ந்து கோயில்களில் நடைபெற வேண்டிய அன்றாடக் கிரியைகளைத் தவறாமல் நடத்திவந்தார்; பல கோயில்களைப் புதுப்பித்தார்; கோயிற் செல்வம் கொள்ளை போகாமல் பேணிப் பாதுகாத்தார். அவர் பல்லாண்டுகள் மதிப்பு நடுவராகவும் (Honorary Magistrate), வட்டக்கழகத் துணைத் தலைவராகவும், நகராட்சித் தலைவராகவும் பணியாற்றினார். அவர் நகராட்சித் தலைவராக இருந்தபோதுதான் ஈரோடு நகருக்குக் குடிதண்ணீர் கிடைக்கும் வாய்ப்பு ஏற்பட்டது. ஈரோட்டுக் கடைத்தெருவை அகலப் படுத்தியமை அவர்தம் அஞ்சாமையையும் செயலாற்றலையும் புலப்படுத்தப் போதிய சான்றாகும்.

## பகுத்தறிவு வேட்கை

அறிவு என்பது அறியாமையின் எதிரி; உண்மையை அறியத் துணைபுரியும் கருவி. இத்தகு அறிவினை ஒருவன் சிறந்த நூல்களைக் கற்பதாலும் தன் வாழ்விற் காணும் துய்ப்புற வாலும் பெறலாம். முன்னது படிப்பறிவு; பின்னது பட்டறிவு. இவற்றுள் தந்தை பெரியாரைப் பொறுத்த வரையில் பட்டறிவே அவருக்குப் பெரிதும் துணைபுரிந்தது எனலாம்.

> 'எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும், அப்பொருள்
> மெய்ப்பொருள் காண்ப தறிவு'

என்னும் வள்ளுவர் வாய்மொழிக்கேற்ப எதையும், 'ஏன்? எதற்கு?' என்று துருவித்துருவிக் கேள்வி கேட்கும் ஆர்வம் அவர்பால் இருந்தது. அடக்கவுணர்வும், பிறரை மதிக்கின்ற அரிய பண்பும் அவர்பால் வளர்ந்தன. அறிவாளர் பலரின் தொடர்பும் அவருக்குக் கிடைத்தது.

## ஆன்றோர் தொடர்பும் அரசியல் விழிப்பும்

கருவூர்ப் பெரும் புலவர் மருதையாப் பிள்ளையின் நட்பும், பா. வே. மாணிக்க நாயக்கர், கைவல்ய சாமியார் முதலிய அறிவாளர்களின் கூட்டுறவும் ஈ. வே. ரா. அவர்களின் சிந்தனையைக் கிளறிச் சாதி, சமயம், சாத்திரம், புராணம், சடங்குகள் முதலானவற்றிலுள்ள புரட்டுகளை உணரவைத்தன.

திரு. வி. க., மறைமலையடிகள் முதலிய தமிழ்ப் பெரியார் களின் தொடர்பும் வ. உ. சி., இராஜாஜி முதலிய தேசியச் சிந்தனையாளர்களின் சேர்க்கையும் அவரைத் தேசிய இயக்கத் தில் பங்கேற்கச் செய்தன. காந்தியடிகள்பால் அவர் கொண்ட ஈடுபாட்டின் பயனாக அவர் தம் பகட்டான வாழ்வைத் துறந்தார். வெண்சுருட்டுப் புகைப்பது, வெற்றிலை பாக்குப் போடுவது போன்ற பல தீய வழக்கங்கள் அவரைவிட்டு விலகின. வெளிநாட்டுப் பொருள்கள்மீது வெறுப்பும், உள் நாட்டுப் பண்டங்களின்மீது பற்றும் தோன்றின. முருட்டுக் கதர்த் துணியை அவர் அணிந்தார்; தாம் மட்டுமன்றித் தம் குடும்பத்தார் அனைவரையும் அணியச் செய்தார்; தீண்டாமை ஒழிப்பு, மதுவிலக்கு முதலிய இயக்கங்களில் தீவிரமாக ஈடு பட்டு, அரசியலிலேயும் சமுதாயத்திலேயும் சிறப்பிடம் பெற்றார்.

அவர் நீதிக்கட்சியைச் சார்ந்த பொப்பிலி அரசர், பனகல் அரசர், தியாகராயச் செட்டியார், முத்தையாச் செட்டியார், எஸ். இராமநாதன், சர் பி. டி. இராஜன், டபிள்யூ. பி. ஏ. சவுந்தர பாண்டியன் முதலியோரின் தொடர்பால் பல்வேறு வகையான பட்டறிவினைப் பெற்றார்.

### சாதிய எதிர்ப்பு

தந்தை பெரியார் தோன்றிய காலத்தில் தமிழகத்திலே சாதி சமயப் பிணக்குகளும், தீண்டாமைக் கொடுமையும் உச்சக் கட்டத்திலே இருந்தன. இவற்றால் சமுதாயத்தின் வளர்ச்சி தடைபடுவதையும், வாழ்வு சீரழிவதையும் கண்டு அவர் உள்ளம் வருந்தினார்.

தம் கண்ணெதிரிலேயே தம்மையொத்த மாந்தர், 'தாழ்த்தப் பட்டவன்,' 'தீண்டத்தகாதவன்,' 'பள்ளன்,' 'பறையன்' எனப் பலவாறு இழித்தும் பழித்தும் பேசப்படுவதையும், அவர்கள் ஊருக்குப் புறத்தே ஒதுக்கி வைக்கப்படுவதையும் கண்டு உள்ளம் குமுறினார்; நாயும் பன்றியும் நடந்து செல்லும் உரிமை படைத்த தெருக்களிலே தம்மையொத்த மனிதன் நடக்கக்கூடா தெனவும் பொதுக் குளத்தில் நீரெடுக்கக் கூடாதெனவும் தடுக்கப்படுகின்ற — தண்டிக்கப்படுகின்ற — கொடுமையினைக் கண்டு அவர் உள்ளம் கொதித்தார். சாதி, சமயம். தீண்டாமை போன்ற கொடுமைகள் ஒழிக்கப்பட்டாக வேண்டு மெனக் குரல் கொடுத்தார்.

சாதியும் சமயமும் சாத்திரங்களிலும், புராணங்களிலும், வேதங்களிலும் கூறப்பட்டிருக்கும் அமைப்பு முறைகள் என்றும், அவரவர் வினையின் அடிப்படையில் விதிக்கப்படு கின்ற விதியே அவை என்றும், பிறப்பினாலே வருகின்ற இத்தகு ஏற்றத்தாழ்வுகளை மாற்ற முயல்வது பேதைமை என்றும் அந் நாளில் கூறப்பட்டது. இது கேட்ட தந்தை பெரியார் அவர்கள் சாதி வேறுபாடு, தீண்டாமை முதலிய கொடுமைகட்குச் சாத்திரங்களும், புராணங்களும், வேதங்களும், கடவுள்களும் பாதுகாப்பளிக்கின்றன வென்றால் அத்தகைய சாத்திரங்களும், புராணங்களும், வேதங்களும், கடவுளர்களும்கூட ஒழிக்கப்பட வேண்டும் என வெகுண்டெழுந்தார்.

## இராஜாஜியின் நட்பு

ஈரோட்டில் 1920 வரையில் தந்தை பெரியாரின் தொடர் பில்லாத பொதுநிலையங்களே இல்லை எனலாம். தந்தை பெரியார், 1919ஆம் ஆண்டு ஈரோட்டில் நகரமன்றத் தலைவ ராயிருந்த போது, மூதறிஞர் இராஜாஜி சேலத்தில் நகரமன்றத் தலைவராயிருந்து பணியாற்றிவந்தார். அப்போதுதான் அவர் களுக்கிடையே நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. இராஜாஜி யும், டாக்டர் வரதராசுலு நாயுடுவும் அடிக்கடி ஈ. வே. ரா.வின் இல்லத்திற்கு வருவது வழக்கம். அவர்கள் தந்தை பெரியாரைத் தேசியக் காங்கிரசுக்கு இழுத்தனர். ரவுலட் சட்டம் கொண்டு வரப்பட்டபோது அண்ணல் காந்தியின் வேண்டுகோளின்படி ஈ. வே. ரா.வும் இராஜாஜியும் ஒரே நேரத்தில் நகரமன்றத் தலைவர் பதவிகளை உதறித் தள்ளினர்.

## தேசியக் காங்கிரசின் தொடர்பு

காந்தியடிகளின் திட்டப்படி 1920-ல் ஒத்துழையாமை இயக்கம் தொடங்கப்பெற்றது. தீண்டாமை ஒழிப்பு, மது விலக்கு, நீதிமன்றப் புறக்கணிப்பு, கல்வி நிலையங்கள் புறக்கணிப்பு, அரசுபணித் துறப்பு முதலியவை தந்தை பெரியாரின் மனத்தைப் பெரிதும் கவர்ந்தன. தீண்டாமை ஒழிப்பைச் செயல்படுத்துவதற்கும், சாதிவேற்றுமையைச் செயலளவில் களைவதற்கும் ஓர் அரிய வாய்ப்புக் கிட்டிய தென்னும் அவாவினால் உடனே காங்கிரசில் சேர்ந்தார். தாம் வைத்திருந்த மதிப்பிற்குரிய பதவிகளையெல்லாம் உதறித் தள்ளினார்; தம் தந்தையார் காலம்முதல் நடந்துவந்த வாணிகத் தையும் நிறுத்தினார்; அவர் தம் பஞ்சாலையையும் நிறுத்தி விட்டார்; ஒத்துழையாமை இயக்கத்தில் பங்கேற்று, தமிழக

மெங்கும் சுற்றுப்பயணம் செய்து, தீவிரமாகத் தொண் டாற்றினார்.

### பேச்சாற்றல்

தந்தை பெரியார் மிகச் சிறந்த பேச்சாற்றல் உடையவர்:

'கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாம் சொல்'

என்னும் வள்ளுவர் வாய்மொழிக்கிணங்க அவர் தம் கருத்தை, அழகாகவும் ஆணித்தரமாகவும், கேட்போரை மீண்டும் கேட்கத் தூண்டும் வகையிலும் பேசுவார். அவர் பேச்சைக் கேட்க, மக்கள் நெடுந் தொலைவிலிருந்தும் வந்து பல மணி நேரம் காத்திருப்பர். அவர் பேசுங்கால் கேட்போரையும்கூட வசைபாடத் தயங்கமாட்டார். எனினும் அவர் பேச்சைக் கேட்க மீண்டும் மீண்டும் மக்கள் வருவர்! பகைவரும் அவர் தம் பேச்சைக் கேட்கத் தவறுவதில்லை. அந்தக் காலத்தில் கதரணிவது பற்றியும் தீண்டாமை ஒழிப்புப் பற்றியும் அவர் பேசிய பேச்சுகள் குறிப்பிடத்தக்கவை.

### கதரியக்கம்

அண்ணல் காந்தியின் எண்ணத்தின்படி, தமிழகத்தில் கதரியக்கம் வலுப்பெற்றதற்குத் தந்தை பெரியாரே உறுதுணை யானவர் எனலாம். அவர் கதர்க் கடைகளை ஏற்படுத்தினார்; கைராட்டையைத் தூக்கிக்கொண்டு ஊரூராய்ச் சுற்றினார். கதர்த்துணிகளைச் சுமந்து சென்று விற்றார். கதரணிவதுபற்றி அவர் செய்த சொற்பொழிவைக் கேட்பவர் சீமைத்துணியாம் மேனாட்டுத் துணியைக் கையினாலும் தொடமாட்டார்; உடனே கதரணியத் தொடங்கிவிடுவார். பெரியார் காங்கிரசிலிருந்து விலகி நீதிக்கட்சியில் பங்கேற்றபோதும் கதரணியவேண்டு மெனத் தீர்மானம் கொணர்ந்து நீதிக்கட்சியினரையும் கதரணியச் செய்தார்.

### கள்ளுக்கடை மறியல்

ஈரோட்டில் நடந்த கள்ளுக்கடை மறியல் புகழ்பெற்ற நிகழ்ச்சியாகும். தந்தை பெரியார் 1921ஆம் ஆண்டில், நூறு தொண்டர்களுடன் தடையை மீறிச் சென்று கள்ளுக்கடை மறியலில் ஈடுபட்டுச் சிறைப்பட்டார். அவர்மட்டுமன்றி அவர் துணைவியார் நாகம்மையாரும், தங்கை கண்ணம்மாளும்கூட மறியலில் ஈடுபட்டனர். கள்ளுக்கு உதவும் மரங்களை வெட்டி

விடவேண்டும் என்று அண்ணல் காந்தி கருத்தறிவித்தவுடனே தந்தை பெரியார், தம் தோப்பிலிருந்த மிக்க வருவாயுடைய ஐந்நூறு தென்னை மரங்களை முதன்முதலாக வெட்டி வீழ்த்தினார். பம்பாயில் நடந்த மாநாட்டின்போது, பண்டித மாளவியாவும், சங்கரன் நாயரும் அண்ணல் காந்தியிடம், "மறியலை நிறுத்திவிட்டு அமைதிப் பேச்சுத் தொடங்கலாம். எனக் கேட்டுக்கொண்டனர். அதற்கு அண்ணல் காந்தி. மறியலை நிறுத்துவது என் கையிலில்லை. அஃது ஈரோட்டிலுள்ள இரண்டு பெண்களிடம் இருக்கிறது. அவர்களைக் கேட்டாக வேண்டும்' என்று விடையளித்தார். அந்த இரண்டு பெண்கள் அன்னை நாகம்மையும் கண்ணம்மாளுமே யாவர் என்பதை நாடு நன்கறியும். இதிலிருந்து தந்தை பெரியார் குடும்பம் மதுவிலக்கில் எந்த அளவிற்கு ஈடுபாடுகொண்டிருந்தது என்பதை நன்குணரலாம். அது மட்டுமன்று, அண்ணல் காந்தியார் முதலிய தலைவர்கள் ஒன்றுகூடிக் 'கள்ளுக்கடை மறியலில் ஈடுபடுவது' என்ற முடிவெடுத்த இடமே தந்தை பெரியார் இல்லத்தில்தான் என்பதும் ஈண்டுக் குறிப்பிடத் தக்கது.

### வைக்கம் வீரர்

மலையாளத்தில் 'வைக்கம்' என்னும் ஊரிலுள்ள ஒரு தெருவில் தாழ்த்தப்பட்டோர் நடக்கக்கூடாதென்ற கட்டுப்பாடு நெடுநாள்களாய் இருந்துவந்தது. அங்கிருந்த தாழ்த்தப்பட்டோர் தன்மான உணர்வின் காரணமாகத் தெருவில் நடக்கும் உரிமைபெற விழைந்தனர். அதற்காகக் கேரள தேசிய இயக்கத் தலைவர்கள் ஒரு கிளர்ச்சியைத் தொடங்கினர். ஜார்ஜ் ஜோசப் முதலிய தலைவர்கள் பலர் சிறைப்பட்டனர். சரியான தலைமை இன்மையால் கிளர்ச்சி நின்றுவிடும்போலிருந்தது. இந்நிலையில் ஜார்ஜ் ஜோசபும், குரூர் நீலகண்ட நம்பூதிரியும் தந்தை பெரியாரைத் தலைமைப் பொறுப்பு ஏற்குமாறு கேட்டுக்கொண்டனர். அவர்களின் வேண்டுகோளை ஏற்று உடனே பெரியாரும் தலைமைப் பொறுப்பை ஏற்றார்; சிறையில் அடைக்கப்பட்டு விடுதலை செய்யப்பெற்றார். வெளிவந்ததும் மீண்டும் மறியலில் ஈடுபட்டுச் சிறைசென்றார். இக் கிளர்ச்சியில் அவர் மட்டுமன்றிக் கோவை அய்யாமுத்து, எஸ். இராமநாதன் முதலியோரும் நாகம்மையார் உள்ளிட்ட எண்ணற்ற தமிழக மலையாளப் பெண்களும் கலந்துகொண்டமை குறிப்பிடத் தகுந்ததாகும். இறுதியில் கிளர்ச்சி வெற்றிபெற்றது; தாழ்த்தப்பட்ட மக்கள் தெருவில் நடக்கும் உரிமை பெற்றனர். இதன்

பின்விளைவாகக் கோயில் நுழைவுக் கிளர்ச்சி ஏற்பட்டது. திருவாங்கூர்க் கோயில்களெல்லாம் தாழ்த்தப்பட்டவர்களுக்குத் திறந்துவிடப்பட்டன. அன்று முதல் தந்தை பெரியார் 'வைக்கம் வீரர்' என அழைக்கப்பட்டார்.

## குருகுலத்தில் பிரிவினையா?

தேசியச் செம்மல் வ. வே. சுப்பிரமணிய ஐயரால் சேரமா தேவியில், 'தமிழ்நாட்டுக் குருகுலம்' என்னும் பெயரில் ஒரு தேசிய நிலையம் ஏற்படுத்தப்பட்டது. தந்தை பெரியார், திரு. வி. க., டாக்டர் வரதராசுலு நாயுடு, கானாடுகாத்தான் வயி. சு. சண்முகஞ்செட்டியார் முதலிய எண்ணற்ற தமிழ்ப் பெருமக்கள் அதன் வளர்ச்சிக்கு உதவினர். தேசியக் காங்கிரசும் ஆண்டுதோறும் அதற்குப் பெருந்தொகையளித்து உதவியது.

குருகுலத்தில் தங்கிப் படிக்கும் மாணவர்களை 'மேற்சாதி மாணவர், கீழ்ச்சாதி மாணவர்' எனப் பிரித்து அவர்கள் வெவ்வேறிடத்தில் உணவு கொள்ளும்படி ஏற்பாடு செய்யப்பட்டது. இம் முறையினைத் தந்தை பெரியார் எதிர்த்தார்; எதிர்ப்பு வலுத்தது. அண்ணல் காந்தியும், இதில் தலையிட்டு, 'தேசிய நிலையத்தில் சாதிப்பிரிவினைக்கு இடந்தரக்கூடாது; சமபந்தி உணவுதான் அளிக்கவேண்டும்' என்றார். அண்ணலின் கருத்தையும் ஐயர் ஏற்க மறுத்துவிட்டார். இதனால் தந்தை பெரியார் காங்கிரசின்மீதும், அந்தணர்மீதும் வெறுப்புற்றார். 'அந்தணர் தீண்டாமைபற்றியும் தேசியம்பற்றியும் பேசுவது வெறும் பேச்சு; அவர்கள் ஒற்றுமைபற்றிப் பேசுவதிலும் பொருளில்லை' எனக் கூறினார்.

## அறநிலையப் பாதுகாப்புச் சட்டம்

தமிழ்நாடு காங்கிரசில், டாக்டர் நாயுடு தலைவராகவும், தந்தை பெரியார் செயலாளராகவும் இருந்த காலத்தில், பன்கல் அரசர் சென்னைச் சட்டமன்றத்தில் அறநிலையப் பாதுகாப்புச் சட்டம் கொணர்ந்தார். அச் சட்டத்தால் கோயில்கள் பாழ் பட்டுவிடும் எனக் கூக்குரல் எழுந்தது. உடனே தந்தை பெரியார், அச் சட்டத்தால் கோயில்களுக்குத் தீங்கில்லை; அதனால், அவற்றின் செல்வம் கொள்ளைபோவது தடுத்துப் பாதுகாக்கப்படும்; கட்சி வேறுபாடு கருதாமல் அச் சட்டத்தை எல்லாரும் ஆதரிக்க வேண்டும் என்று வலியுறுத்தினார். அக் கருத்தை டாக்டர் நாயுடு, எஸ். இராமநாதன், திரு. வி. க. முதலியோர் ஆதரித்தனர்.

## வகுப்புரிமைத் தீர்மானம்

தந்தை பெரியார் காங்கிரசில் இருந்துகொண்டே வகுப்புரிமைக்காகவும் சமுதாய உரிமைக்காகவும் போராடினார். இனவாரி மக்களின் எண்ணிக்கைக்கு ஏற்ப அரசு அலுவல்கள் தரப்படவேண்டும் என வற்புறுத்தினார். திருநெல்வேலியில் 1920-ல் நடந்த காங்கிரசு மாநாட்டில் வகுப்புரிமைத் தீர்மானம் கொணர்ந்தார். மாநாட்டின் தலைவர் எஸ். சீனிவாச ஐயங்கார், 'இது பொதுநலனுக்குக் கேடு பயக்கும்' எனக் கூறித் தீர்மானத்தை ஏற்க மறுத்துவிட்டார். அதேபோன்று தஞ்சை (1921), திருப்பூர் (1922), சேலம் (1923), திருவண்ணாமலை (1924), காஞ்சிபுரம் (1925) ஆகிய இடங்களில் நடந்த மாநாடுகளிலும் அத் தீர்மானம் புறக்கணிக்கப்பட்டது. அதனால் வெறுப்புற்ற தந்தை பெரியாரும், அவர்தம் நண்பர்களும் தனியாகப் பிரிந்தனர். கோவை இராமலிங்கஞ்செட்டியார் தலைமையில் 'அந்தணர் அல்லாதார் மாநாடு' ஒன்றைக் கூட்டிக் காங்கிரசையும் அந்தணர்களையும் எதிர்ப்பது என முடிவெடுத்தனர். அன்று முதல் எந்த இயக்கத்தை வளர்க்க இரவு பகல் பாராது பாடுபட்டாரோ, அந்த இயக்கத்தைக் குலைக்க அரும்பாடுபட்டார்.

## நீதிக்கட்சி புத்துயிர் பெற்றது

தந்தை பெரியார் 1926-ல் நடந்த சட்டமன்றத் தேர்தலில் காங்கிரசை எதிர்த்து, நீதிக்கட்சிக்காகப் பாடுபட்டார். எனினும், நீதிக்கட்சி தோல்வி அடைந்தது. கட்சியினர் சோர்ந்து போயினர். தந்தை பெரியார் மதுரையில் மாநாடு கூட்டி அவர்தம் சோர்வை அகற்ற முனைந்தார். அம் மாநாட்டில் வ. உ. சிதம்பரனார், சாத்தூர் சுப்பிரமணிய நயினார், ஜார்ஜ் ஜோசப் முதலிய பழம்பெருந்தலைவர்கள் கலந்துகொண்டனர். தந்தை பெரியார் அளித்த ஊக்கத்தால் இயக்கம் புத்துயிர் பெற்றது. அம் மாநாட்டில் கதரணியும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது; அன்று முதல் நீதிக்கட்சியினரும் கதரணிந்தனர். தந்தை பெரியாரின் முயற்சியால் நாடெங்கும் நீதிக்கட்சி மாநாடுகள் நடைபெற்றன.

## தமிழகத்தின் 'ரூசோ'

கோவையில் 1927-ல் நடந்த நீதிக்கட்சி மாநாட்டில் சர் ஏ. இராமசாமி முதலியார், தந்தை பெரியாரைப்பற்றி, "ஈ. வே. ரா. நமது இயக்கத்திற்கு உயிர் கொடுத்தவராவார்.

அன்றியும், 1815ஆம் ஆண்டில் ரூசோ என்பவர் பிரெஞ்சு நாட்டின் தன்மானத்தைக் காப்பாற்ற உழைத்தது போல, நமது ஈ. வே. ரா. நம் நாட்டின் தன்மானத்தைக் காப்பாற்ற உழைக்கும் தமிழ்நாட்டின் ரூசோ ஆவார்' எனக் குறிப்பிட்டுப் புகழ்மாலை சூட்டினார். தந்தை பெரியார் தமிழ்மக்களின் தன்மானத்தைக் காக்கவும், சமூக நீதிக்காகவும் பெரிதும் உழைத்தார். 'மூட நம்பிக்கையையும் முட்டாள் தன்மையையும் அகற்றிய பின்னரே நாட்டை ஆட்சிபுரிவதற்கு மக்கள் தகுதி யுடையவர் ஆவர்' என்றார். அவர்தம் பணிகளுக்குக் 'குடியரசு,' 'திராவிடன்' முதலிய இதழ்கள் துணைபுரிந்தன.

### தன்மான இயக்கத்தின் தோற்றம்

நீதிக்கட்சியின் தலைவர் பனகல் அரசர், 1928ஆம் ஆண்டில் திடீரென இயற்கை எய்தியதால் நீதிக்கட்சிக்குப் பேரிழப்பு ஏற்பட்டது. இயக்கம் தளர்ச்சியடையாமல் காக்கும் பெரும்பொறுப்பைத் தந்தை பெரியார் மேற்கொண்டார். செங்கற்பட்டில், 1929ஆம் ஆண்டு டபிள்யூ. பி. ஏ. சவுந்தர பாண்டியன் தலைமையில் தன்மான இயக்கத்தின் முதல் மாநில மாநாடு நடைபெற்றது. தோழர்கள் குத்தூசி குருசாமி, சாமி சிதம்பரனார், அ. பொன்னம்பலனார், கே. வி. அழகிரி சாமி, கோவை அய்யாமுத்து, எஸ். வி. லிங்கம், அருப்புக் கோட்டைக் கருப்பையா, சித்தக்காடு இராமையா, மூவலூர் இராமாமிர்தம் அம்மையார் முதலிய எண்ணற்ற செயல் மறவர்கள் நாடெங்கும் சுற்றிச்சுற்றி இயக்கக் கருத்தினைப் பரப்பினர். அதன் பயனால் எண்ணற்ற கலப்புமணங்களும் கைம்பெண் மணங்களும் நடைபெற்றன. எண்ணற்றவர் சாதிப் பெயர்களைத் தள்ளினர்; சமயக்குறிகளை மறந்தனர்; தீதி கொடுப்பதைக் கைவிட்டனர்.

தந்தை பெரியாரின் தன்மான இயக்கப் பணி தமிழகத்தில் மட்டுமன்றி மலையாளம், பம்பாய் முதலிய மாநிலங்களிலும் எதிரொலித்தது. தந்தை பெரியார் மலேசிய நாட்டுத் தமிழர் களின் அழைப்பை ஏற்று, 1929-ல் அன்னை நாகம்மையார், எஸ். இராமநாதன், சாமி சிதம்பரனார் முதலியவர்களுடன் மலேசியாவுக்குப் புறப்பட்டார். அங்கு ஒரு திங்களுக்குமேல் சுற்றுப்பயணம் செய்து, ஈப்போ நகரில் ஏற்பாடு செய்யப் பட்டிருந்த தமிழர் சீர்திருத்தச் சங்க மாநாட்டிலும், பினாங்கு, சிங்கப்பூர், கோலாலம்பூர், தைப்பிங், மலாக்கா முதலிய ஊர்

களில் நடந்த பொதுக்கூட்டங்களிலும் கலந்துகொண்டார். அவர் பயணத்தால் அந்நாட்டுத் தமிழர்கள் ஒற்றுமையுணர்வும் சீர்திருத்த ஆர்வமும் பெற்றனர்.

## மேனாட்டுப் பயணம்

தந்தை பெரியார் 1931ஆம் ஆண்டு வெளிநாடு புறப்பட்டார். பெர்லின், ஸ்பெயின், இத்தாலி, பிரான்சு, போர்ச்சுகல், கொழும்பு, எகிப்து, கிரீசு, துருக்கி, இரஷியா முதலிய பலவிடங்களில் சுற்றுப்பயணம் செய்து 1932-ல் தாய்நாடு திரும்பினார். தந்தை பெரியார் வெளிநாடு சென்றிருந்த காலத்தில் நாகம்மையாரும் ஈ. வே. கிருஷ்ணசாமியும் இயக்கம் தளர்ச்சியடையாமல் பார்த்துக்கொண்டனர்.

## சமதர்ம இயக்கம்

தந்தை பெரியார் மேனாடு சென்று திரும்பியபின், 1932, திசம்பரில் ஈரோட்டில் நடந்த கூட்டத்தில் தன்மான இயக்கம் சமூக இயக்கமாகவே இயங்கலாம் எனவும், அதற்குள் அரசியலுக்காகச் 'சமவுடைமைக் கட்சி' என்னும் ஒரு தனிப் பிரிவு அமைக்கலாம் எனவும் முடிவெடுத்தார்.

## தமிழர் மாநாடு

இராஜாஜி முதலமைச்சராய் இருந்தபோது 1937-ல் இந்தியைக் கட்டாயப் பாடமாகக் கொணர்ந்தார். தந்தை பெரியார் இதை எதிர்த்தார். திருச்சியில் கி. ஆ. பெ. விசுவநாதன், தெ. பொ. வேதாசலம் ஆகியோர் முயற்சியால் நடந்த தமிழர்மாநாட்டிலும் 1938ஆம் ஆண்டு காஞ்சி மாநகரில் நடந்த மாநாட்டிலும் இந்தி எதிர்ப்புத் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. தந்தை பெரியார், 'தமிழ்நாடு தமிழருக்கே' என்னும் முழக்கத்தைத் தோற்றுவித்தார். இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சி வலுத்தது; ஆயிரக்கணக்கானோர் சிறை சென்றனர். தந்தை பெரியாரும் சிறையிலடைக்கப்பட்டார். 'வெண்தாடி அசைய, மெலிந்த தோல் திரங்க, இரங்கிய கண்கள் ஒளிர, பரந்த முகம் மலர, கனிந்த முதுமை ஒழுக ஒழுக, தாங்கிய தடியுடன் அவர் சிறை புகுந்த காட்சி அவர்தம் பகைவர், நொதுமலர், நண்பர் எல்லாருள்ளத்தையும் குழையச் செய்திருக்கும் என்பதில் ஐயமில்லை, எனத் திரு. வி. க. அவர் சிறைக்கோட்டம் நண்ணிய காட்சியைச் சித்திரித்தார்.

## 'பெரியார்' என்னும் விருது

சென்னையில் 1938-ல் மறைமலையடிகளின் மகளார் திருவாட்டி நீலாம்பிகை அம்மையார் தலைமையில் நடந்த "தமிழ்நாட்டுப் பெண்கள் மாநாட்டில், தந்தை பெரியார் ஆற்றிய செயற்கரிய தொண்டுகளைப் பாராட்டி, அவருக்குப் பெரியார் எனும் பட்டம் கொடுப்பதெனத் தீர்மானித்தனர். தியாகராயச் செட்டியார், நாயர், பனகல் அரசர் முதலியோரின் அரிய முயற்சியால் தமிழர்களின் நலனுக்காகத் தோற்றுவிக்கப் பட்ட நீதிக் கட்சியின் தலைமைப் பொறுப்பு அதே ஆண்டில் தந்தை பெரியாரிடம் வந்து சேர்ந்தது.

'செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்'

என்னும் திருவள்ளுவரின் வாய்மொழிக்கேற்ப, தந்தை பெரியார் அவர்கள் தம் வாழ்நாளில் செயற்கரிய செயலாற்றிய செம்ம லாவார். அவருக்குச் சூட்டப்பெற்ற 'பெரியார்' என்னும் பட்ட மும் மிகமிகப் பொருத்தமானதாகும்.

## மலை கலங்கினும் நிலை கலங்காதவர்

பெரியாரின் அன்புத் துணைவி நாகம்மையார் இயற்கை எய்தியபோது அண்டை வீட்டுக்காரர்கள், உறவினர்கள் எல்லாரும் திரண்டு வந்தனர். தந்தை பெரியார் கைத் தடியுடன் வாயிற்படியில் நின்றுகொண்டு வந்தோரிடம், 'அழாமல் பிணத்தைப் பார்ப்பதாயின் உள்ளே செல்லலாம்; அழுவதாயின் உள்ளே செல்லவேண்டா' என்று கூறினார். அவர்களும் அவ்வாறே அடக்கத்தோடு சென்று கண்டு திரும்பினர். உடல் அடக்கமும் புதியமுறையில் செய்யப்பட்டது. பிணம் பெட்டி யில் வைக்கப்பட்டது; வண்டியில் ஏற்றி மாடு பூட்டி ஓட்டப் பட்டது; சுடுகாட்டில் கொளுத்தப்பட்டது. பெட்டியில் வைத்தல் முஸ்லிம் வழக்கம்; வண்டியில் கொண்டு செல்லல் கிறித்தவர் வழக்கம்; தீக்கிரையாக்குதல் இந்துக்கள் வழக்கம். இம் மூன்று வழக்கமும் அங்குக் கடைப்பிடிக்கப்பட்டன.

## அறிவியக்கம் காணல்

முதலிலே சாதி, சமய வேறுபாடுகளை எவ்வாறு ஒழிப்பது என எண்ணிப்பார்த்தபோது முந்தைய சீர்திருத்தச் செம்மல் களுக்கு நேர்ந்த விளைவுகள் அவர் மனக்கண்முன் தோன்றின.

எனவே, தாம் தனித்துச் செயல்படாமல் ஓர் இயக்கமாகச் செயல்படத் துணிந்தார்; தன்மான இயக்கத்தைத் தோற்று வித்து, அதன் தனிப் பெருந்தலைவராக இருந்து செயல்பட்டார். தந்தை பெரியார் அவர்களின் கட்டளையை ஏற்றுச் செயலாற்ற ஆயிரமாயிரம் ஆற்றல் மிகு செயல்மறவர்கள் அணிவகுத்து நின்றனர். இந்த அறிவியக்கத்தைக் கண்டு, சாதித் திமிர்களும், சமயப் புரட்டுகளும் சடசடவெனச் சரியத் தொடங்கின. தந்தை பெரியார் பகுத்தறிவுப் பகலவனாகச் சுடர் விட்டார்.

1951ஆம் ஆண்டு வகுப்புரிமைக்காகக் கிளர்ச்சி நடத்தி இந்திய அரசியல் சட்டத்தைத் திருத்தச் செய்தார்.

1957-ல் அரசியல் சட்டத்தைத் தீயிட்டுக் கொளுத்திவிட்டு மூன்று ஆண்டுகள் வரை சிறைத் தண்டனை ஏற்றார் பெரியார்.

1957ஆம் ஆண்டு உணவு விடுதிகளின் பெயர்ப் பலகை களிலிருந்து சாதிப் பெயரை நீக்குமாறு கோரி ஒரு போராட் டத்தை நடத்தினார்.

1944, 1959ஆம் ஆண்டுகளில் வடநாட்டில் உள்ள தில்லி பம்பாய் முதலிய பெரு நகரங்களுக்கெல்லாம் சென்று சாதி ஒழிப்புக் கொள்கையைப் பரப்பிப் 'புதிய அம்பேத்கார்' என்னும் பாராட்டையும் பெற்றார்.

## நேருவின் பாராட்டு

பெரியார் தொடங்கிய தன்மான இயக்கத்தின் சீர்த்தி யினைக் கண்ட ஆசியப் பேரொளி, ஜவகர்லால் நேரு அவர்கள் 'தற்கால மேலையுலகப் பகுத்தறிவாளர், நாத்திகர் ஆகியவர் களின் கருத்துகளை எல்லாம், மின்மினிகளென ஒளி மழுங்கி விடச் செய்யும் நாத்திகக் கதிரவன் ஒளியாகப் பாரதத்தின் இந்தப் பண்டைக் கால அறிவியக்கம் விளங்குகிறது' என்று வாயார உளமாரப் பாராட்டினார் என்றால் இதைவிடத் தந்தை பெரியார் அவர்களுக்குச் சூட்ட வேண்டிய புகழ்மாலை வேறென்ன இருக்க முடியும்?

## பெரியார் நெறியில் பாவேந்தர்

காந்தியடிகளின் கொள்கையைப் பாடிய விடுதலைக் குயில் பாரதியைப் போலப் புரட்சிக் குயில் பாரதிதாசன் தந்தை

பெரியார் அவர்களின் கொள்கையை உணர்ச்சி ததும்பப் பாடி மகிழ்ந்தார். குழந்தைக்குத் தாலாட்டுப் பாடுகின்றபோது கூடப் பாவேந்தர் பாரதிதாசன் அவர்கட்குத் தந்தை பெரியாரின் நினைவு வருகிறது.

## பெரியாரின் வெற்றி

இவ்வாறு ஏறக்குறைய ஒரு நூற்றாண்டு வாழ்வாங்கு வாழ்ந்த தந்தை பெரியார், எழுபத்தைந்தாண்டுகளுக்கும் மேலாக இந்த நாட்டின் இழிவொழியப் பாடுபட்டார். சாதி, சமயம், தீண்டாமை, மூடப் பழக்கவழக்கங்கள், பெண்ணடிமை முதலிய இழிவுகள் இல்லாத — ஏற்றத்தாழ்வற்ற — மறுமலர்ச்சி பெற்ற — சமுதாயத்தைக் காணவேண்டும் என்று பெரிதும் விழைந்தார்.

இந்திய நாட்டிலே ஐயாயிரம் ஆண்டுகட்குமுன் தோன்றிய வியாழ முனிவனும், இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னே தோன்றிய வள்ளுவப் பெரியாரும் கௌதம புத்தரும், கிரேக்க நாட்டிலே தோன்றிய சாக்ரட்டீசும், பிரெஞ்சு நாட்டிலே தோன்றிய வால்டேரும் ரூசோவும் புரட்சிக் கருத்துகளை எடுத்துக் கூறித் தங்கள் வாழ்நாளிலே தோல்வி கண்டதோடு தங்கள் வாழ்வையே பணயம் வைத்ததை நாடறியும். ஆனால், தந்தை பெரியார் தம் முயற்சியில் தோல்வி அடையவில்லை; தம் வாழ்நாளிலேயே வெற்றியும் கண்டார். வேறு யாருக்கும் கிட்டாத பெருமை இது.

## இருவகை நெறிகள்

சமுதாய மாற்றத்திற்கு இரண்டு நெறிகள் உள்ளன: ஒன்று மக்கள் உள்ளத்திலே கல்வியை விதைத்து, அறியாமையை ஒழித்துச் சமுதாய மாற்றத்தை உருவாக்குவது. மற்றொன்று உருசிய நாட்டைப் போன்று புரட்சியினாலேயே சமுதாய மாற்றத்தை உருவாக்கிவிட்டுப் பின்னர் அறிவுக் கல்வி தந்து சமுதாய மாற்றத்தை நிலைபெறச் செய்வது. முன்னையதைத் தந்தை பெரியார் முழுமையாக ஏற்றுக்கொள்ளவில்லை. ஏனென்றால், அது தம் காலத்தில் வெற்றியைத் தேடித் தராது என்பது அவருக்குத் தெரியும்.

எனவே, இரண்டாவதாகக் கூறிய புரட்சிவழிச் சமுதாய மாற்றத்தினையே அவர் பெரிதும் விரும்பினார். அதே நேரத்தில் அறிவுக் கல்வியையும் புறக்கணிக்காமல் நாள் தோறும் ஊரூராய்ச் சென்று தமது பட்டறிவையும் படிப்பறி

வையும் கொண்டு மக்களுக்கு அறிவுரை கூறி, அறியாமையை அகற்றும் பணியினையும் மறவாமல் செய்து வந்தார்; மேலும் பல்வேறு போராட்டங்களையும் மாநாடுகளையும் நடத்திப் புரட்சி மனப்பான்மையை வளர்த்து வெற்றிநடையிட்டார். இவ் வகையில் தந்தை பெரியார் ஒரு வகையில் இரு நெறியையும் தழுவிச் சென்றார் எனலாம்.

## பெரியாரின் பெருங்கொடை

சிக்கனத்தில் சிறந்தவர் என்று அழைக்கப்பட்ட தந்தை பெரியார் பயிற்சிக் கல்வி, கல்லூரிக் கல்வி முதலிய கல்வி வளர்ச்சிக்காகவும் பல நூறாயிரக்கணக்கான வெள்ளிப் பணங் களை அள்ளி வழங்கினார். அறக்கட்டளைகள் பல நிறுவினார் என்பது அவர்தம் கொடையுள்ளத்தைக் காட்டுகிறது.

## புகழுடம்பு எய்தினார்

செயற்கருஞ் செயலாற்றிய சீர்திருத்தச் செம்மல், மக்கட் சமுதாயத்தின் மாபெரும் சிற்பி, தமிழினத்தின் தனிப் பெருந் தந்தை, பெரியார் ஈ. வே. இராமசாமி, 1973ஆம் ஆண்டு திசம்பர்த் திங்கள் இருபத்து நான்காம் நாள் மக்கட் சமு தாயத்தைத் துயரக்கடலில் தள்ளிவிட்டு அழியாப் புகழ்பெற் றார். அவர்தம் பொன்னுடல் அரசு சிறப்போடு 25ஆம் நாள் பெரியார் திடலில் அடக்கம் செய்யப்பட்டது. பெரியார் இன்று நம்மிடையே இல்லை; எனினும், நாட்டு நலம் கருதி வகுத்த சீரிய கொள்கைகளாலும், தூய தொண்டுகளாலும் என்றும் மறையாது மாமணியாக விளங்குகிறார் என்பதில் ஐயமுண்டோ?

# 2. மூதறிஞர் இராஜாஜி

மூதறிஞர் இராஜாஜி என அன்போடும் பெருமிதத்தோடும் அழைக்கப்பெறுபவர் சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியார். அவர் இந்திய நாட்டில் தோன்றிய இணையற்ற சான்றோர்களுள் ஒருவராவார்; அரசியலில் நுண்மாண் நுழைபுலமிக்க உலகப் பேரறிவாளர்களுள் ஒருவராகத் திகழ்ந்தவராவார். அவர் இந்த நாட்டின் விடுதலைக்காகவும், சாதி, சமயம், தீண்டாமைக் கொடுமைகளால் தாழ்வுற்றுக் கிடந்த தமிழ்ச் சமுதாயத்தைச் சீர்திருத்தி, அதைத் தலைநிமிரச் செய்வதற்காகவும் பாடுபட்டார்.

## தோற்றம்

இத்தகு செயற்கருஞ் செயலாற்றிய செம்மல், தருமபுரி மாவட்டத்தில் ஓசூருக்கருகில் தென்பெண்ணையாற்றின் கரையிலுள்ள 'தொரப்பள்ளி' என்னும் சிற்றூரில் 1878 ஆம் ஆண்டு திசம்பர் 10ஆம் நாள் சக்கரவர்த்தி ஐயங்காருக்கும், சுந்தரம்மாளுக்கும் மூன்றாம் மகனாகத் தோன்றினார்.

## இளமையும் கல்வியும்

இராஜாஜி தம் ஐந்தாம் அகவையில் உள்ளூர்த் தொடக்கப் பள்ளியிலும், பின்னர் ஓசூர் நடுநிலைப் பள்ளியிலும், பெங்களூர் இலண்டன் மிஷன் பள்ளியிலும் பயின்று, தம் 12ஆம் அகவையில் பள்ளியிறுதித் தேர்வில் வெற்றி பெற்றார். அதன் பின்னர், 'மத்திய இந்துக் கல்லூரியில்' பி.ஏ. பட்டம் பெற்றார்.

## விவேகானந்தரைக் காணல்

இராஜாஜி, சென்னையில் விவேகானந்தர் இல்லம் என்றழைக்கப்படும் இடத்தில் இருந்த மாணவர் விடுதியில் தங்கிப்படித்தபோது, விவேகானந்தர் இராஜாஜியின் அறைக்குள் நுழைந்தார். விவேகானந்தர் கண்ணன் படத்தைச் சுட்டிக் காட்டி, 'கண்ணன் படம் ஏன் நீலவண்ணமாக இருக்கிறது?' என வினவினார். உடனே இராஜாஜி, 'வானமும் கடலும்

எல்லையற்றவை. அவற்றின் நிறம் நீலம். கண்ணனும் எல்லை யற்றவன்; அதனால்தான் அவனை நீலவண்ணமாக வடித்திருக் கிறார்கள்' என்று விடையிறுத்தார். அது கேட்ட அடிகளார் வியந்து, புகழ்ந்து, 'இந்த இளைஞர் எதிர்காலத்தில் சிறந்து விளங்குவார்' என வாழ்த்தினார்.

## வழக்கு மன்றத்தில் இராஜாஜி

சேலத்தில் தொழில் நடத்தச் சென்ற இராஜாஜி, சிறந்த வழக்கறிஞர் ஒருவரிடம் பயிற்சி பெற விரும்பினார். அவர் இவர்தம் இளமை கண்டு இடந்தர மறுத்துவிட்டார். அதனால் இராஜாஜி நேரே தொழில் நடத்தத் தொடங்கினார். அப்போது தம்மைத் தேடிவந்த ஒரு குற்றவழக்கை ஏற்று நடத்தினார். தம்மை ஏற்க மறுத்தவரே எதிர்க்கு வழக்கறிஞர். நடுவருக்கு முன்னே கேள்விமேல் கேள்வி கேட்டு அவரைத் திணற அடித்ததோடு வழக்கிலும் வெற்றி பெற்றார். வழக்குகள் வந்து குவிந்தன; வருவாய் பெருகியது. இராஜாஜி மிக விரைவில் சேலத்தில் பெரிய வழக்கறிஞராக உயர்ந்துவிட்டார். குற்ற வழக்குகளில் தலைசிறந்தவர் எனப் பெரும்புகழ் பெற்றார்.

## புலியோடு மோதிய புலி

இவ்வாறே, சேலம் விஜயராகவாச்சாரியார் என்னும் புகழ் பெற்ற வழக்கறிஞரோடும் மோதித் தம் திறமையை வெளிப் படுத்தியதோடு, 'இந்தச் சிறுபிள்ளை விரைவில் சிறந்து விளங்குவான்' என்னும் நல்வாழ்த்தினையும் பெற்றார். இந்தத் திறமையின் காரணமாகச் சேலம் பெருஞ்செல்வர் இரத்தின சபாபதிக் கவுண்டர் குடும்பத்திற்கும், குமாரமங்கலம் பெரு நிலக்கிழார் டாக்டர் சுப்பராயன் குடும்பத்திற்கும் குடும்ப வழக்கறிஞரானார்.

## அச்சந்தவிர்த்த அண்ணல்

இராஜாஜி இளமை முதலே அச்சமின்றி வாழ்ந்தார். சேலம் சூரமங்கலம் சாலையிலிருந்த 'வளமனை' ஒன்றை வாடகைக்குப் பார்த்தார். 'அதில் பேய் வாழ்கிறது; அங்குப் போகாதீர்' எனப் பலபேர் அச்சுறுத்தினர். இராஜாஜி, 'அந்த வீடுதான் எனக்குப் பிடிக்கும்' எனக் குடியேறி வாழ்ந்தார்.

ஒரு நாள் வழக்குமன்றம் செல்லக் குதிரை வண்டியில் ஏறினார். வண்டியில் பூட்டப்பட்டிருந்தது முருட்டுக் குதிரை. அது வண்டியோட்டி ஏறுவதற்குமுன் வெறிபிடித்தாற்போலத்

தலைதெறிக்க ஓடியது. கட்டுப்படுத்த இயலாதென்றுணர்ந்த இராஜாஜி சட்டங்களை இறுக்கிப் பிடித்துக்கொண்டு, "எவ்வளவு நேரம் ஓடும்; ஒரு கட்டத்தில் களைத்துப்போய் நின்றுவிடும்' என எண்ணி அமைதியாயிருந்தார். கண்டோரெல்லாரும் கலங்கினர். இராஜாஜி எண்ணியவாறே குதிரை களைத்துப்போய் வழக்குமன்றத்திற்கருகில் வந்து நின்றது. இராஜாஜி வண்டியினின்று இறங்கிப் புன்முறுவல் பூத்த முகத்துடன் வழக்கு மன்றத்திற்குள் நுழைந்தார்.

### திருமணம்

மூதறிஞர் இராஜாஜி தம் பதினாறாம் அகவையில் அலர்மேலுமங்கம்மாள் என்னும் அழகிய நங்கையை மணந்தார்; தம் அன்பு வாழ்வில் ஐந்து செல்வங்களுக்குத் தந்தையானார்.

### சாதி ஒழிப்பும் தீண்டாமை ஒழிப்பும்

மூதறிஞர் இராஜாஜி கடவுள் பற்று மிகுந்தவர்; இந்து சமயத்தின்பாலும் நீங்காத பற்றுடையவர்; புராண, இதிகாசங்களை மதித்துப் போற்றுபவர். ஆனால், 'சாதி, தீண்டாமை, மூடப்பழக்கவழக்கங்கள் முதலியன இந்து சமயத்தின் சொத்துகளல்ல; தொற்றுநோய்கள். இவற்றை ஒழித்துக்கட்டினாலொழிய இந்து சமயம் வளர்ச்சி பெறாது; எனவே இத்தகையகளான்களை ஒழித்து இந்து சமயத்தைத் தூய்மைப்படுத்த வேண்டும்' என்னும் எண்ணமுடையவர். அவருடைய வழிகாட்டியான அண்ணல் காந்தியடிகளும் அதே நோக்கமுடையவர்தாம். எனவேதான் மூதறிஞர் இராஜாஜி அவர்கள் அவற்றை ஒழிப்பதில் தீவிரம் காட்டினார். அதற்குக் குறுக்கே நின்றவர்களையெல்லாம் புல்லினும் புல்லராக மதித்தார்; வழக்கறிஞராக ஆன நாளிலிருந்தே அவருக்குச் சமூகச் சீர்திருத்தத்தில் ஈடுபாடு ஏற்பட்டது. தீண்டாமையை ஒழிப்பதிலும் அவர் காட்டிய ஆர்வம் பாராட்டத்தக்கது. தாழ்த்தப்பட்ட மக்களிடத்திலே மிக்க பற்றும் இரக்கமும் கொண்டிருந்தார்.

### சேலம் நகரமன்றத் தலைவர்

சிறந்த வழக்கறிஞர், நேர்மையாளர், ஏழைகளிடம் இரக்கங் காட்டுபவர் என்ற எண்ணத்தின் அடிப்படையில் இராஜாஜி சேலம் நகராட்சிக்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இராஜாஜி அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டதன் வாயிலாகச் சேலம் நகரம் சிறப்புப் பெற்றது எனலாம்.

ஒரு நாள் தாழ்த்தப்பட்ட மாணவர் சிலர் இராஜாஜியிடம் வந்து கல்லூரியில் சேர உதவி கேட்டனர். அவர்கள் வேண்டியவாறே இராஜாஜி கல்லூரி அலுவலாளர்களுடன் தொடர்புகொண்டு அவர்களைச் சேர்த்துக்கொள்ளச் செய்தார். அதையறிந்த உயர்சாதி மக்கள் சீற்றம்கொண்டு ஆரவாரம் செய்தனர். எனினும், சேர்ப்பதை நிறுத்த முடியவில்லை. அதனால் கடுஞ்சினங்கொண்டு இராஜாஜியையும், அவர் குடும்பத்தாரையும் சாதியிலிருந்து விலக்கி வைத்தனர். அக் குடும்பத்துடன் எவ்வித உறவும் வைத்துக்கொள்ளக்கூடாது எனச் சாதிக் கட்டுப்பாடும் செய்துவிட்டனர். இராஜாஜி அதைப்பற்றிச் சிறிதும் கவலைப்படவில்லை.

இராஜாஜி நகரமன்ற ஆளுகையிலுள்ள கல்லூரி மாணவர் விடுதியில் வேலை செய்ய இரண்டு தாழ்த்தப்பட்டவர்களை நியமித்தார். அதைக் கண்டு மேல்சாதியினர் மனம் கொதித்து இராஜாஜியிடம் முறையிட்டனர். 'உடனே அவர்களை வேலையிலிருந்து நீக்க வேண்டும். இல்லையேல் உயர்சாதி மாணவர் விடுதியைவிட்டு வெளியேற நேரிடும்' என்றனர். இராஜாஜி சிரித்துக்கொண்டே 'விடுதியைப் புறக்கணிக்கும் மாணவர்களை நான் கல்லூரியிலிருந்தும் வெளியேற்றலாமன்றோ?' என்றார். அவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டு மெல்ல நழுவிவிட்டனர்.

### சிவப்பு நிறத்தவர் தேவை

இராஜாஜி சேலம் நகரமன்றத் தலைவராக இருந்தபோது மேட்டூரிலிருந்து சேலத்திற்குத் தண்ணீர் கொணரக் குழாய் போடப்பட்டது. அப்போது ஒரு குழாய் இரண்டாம் அக்கிரகாரத்திற்குப் போடப்பட்டது. இராஜாஜி தம் நண்பரான ஏ. வி. இராமன் என்ற பொறியியலறிஞரை அழைத்துச் 'சிவப்பாக இருக்கும் ஆதிதிராவிடர் ஒருவரைப் பிடித்து வா' என்றார். அவரைக்கொண்டு குழாய் திறக்கப்பட்டது. சில நாள்கள் கழித்துக் குழாயைத் திறந்தவர் ஆதிதிராவிடர் என்று தெரிந்தவுடன் ஏ. வி. இராமனைப் பதவி நீக்கம் செய்ய வேண்டுமென நகரமன்றத்தில் தீர்மானம் கொணர்ந்தனர். அப்படி விலக்காமையால் இராஜாஜிமீது கண்டனத் தீர்மானம் கொணர்ந்தனர். கண்டனத் தீர்மானத்தைக் கண்டதும், 'இத் தீர்மானம் நகரமன்ற விதிகளுக்கு முரணானது' என்று விதிகளைப் படித்துக் காட்டித் தீர்மானத்தைத் தள்ளுபடி செய்தார் இராஜாஜி. உயர் வகுப்பினர் தங்கள் முயற்சி தோல்வியுற்றமையறிந்து உள்ளங்கொதித்தனர்.

## சகஜானந்தருக்குச் சமபந்தி விருந்து

சிலர், எதிர்ப்புக் காட்டாத வரையில் சீர்திருத்தம் பேசுவர்; எதிர்ப்பு வந்தவுடனே ஓடி மறைந்துவிடுவர். முதறிஞர் இராஜாஜி அத்தகையவரல்லர். தாழ்த்தப்பட்ட நந்தனார் மரபிலே தோன்றி, வடமொழியும் தென்மொழியும் கற்று, வேதாந்தியாகவும் துறவியாகவும் விளங்கிய சகஜானந்த அடிகளார், சிதம்பரத்திலே 'நந்தனார் கலைக்கழக'த்தை நிறுவிச் சிறந்த சமூகப் பணியாற்றி வந்தார். இராஜாஜி சகஜானந்தரின் உண்மைப் பணியினைப்பற்றிக் கேள்விப் பட்டுப் பாராட்டியதோடு கலைக்கழகத்திற்குப் பொருளுதவி யும் செய்தார். சகஜானந்தரைத் தம் இல்லத்திற்கு அழைத்துச் சமபந்தி விருந்து வைக்கவேண்டுமென எண்ணி இராஜாஜி அவரைச் சேலத்திற்கு வரவழைத்தார். வாயளவில் சீர்திருத்தம் பேசியவர் ஓடி ஒளிந்தனர். போலி நண்பர் சிலர் எதிர்த்தனர். இராஜாஜி யாரைப்பற்றியும் கவலைப்படவில்லை. தம்மோடு எப்போதும் ஒத்துழைக்கும் நண்பர்களை வைத்துக்கொண்டு விருந்தை நடத்தினார்; அடிகளார் இராஜாஜியின் அருகில் அமர்ந்து உணவருந்தினார். அந் நிகழ்ச்சியைக் கண்ட இனத்தவர் ஒன்றுகூடி இராஜாஜியையும், அவரோடு ஒத்துழைத்த நண்பர்களையும் சாதியிலிருந்து விலக்கி வைத்தனர். சாவு, வாழ்வுக்குக்கூட யாரும் போகக்கூடாது என முடிவும் செய்தனர். உறவினர் சிலரும், நண்பர்களுங்கூட இராஜாஜிக்குப் பகைவராயினர். பின்னர், நடந்த நிகழ்ச்சியை இராஜாஜியின் தந்தைக்கு எடுத்துரைத்துத் தந்தை, மகன் இருவருக்கும் மனவேறுபாட்டை உண்டாக்க முயன்றனர்; மன்னிப்புக் கேட்க வைக்கவும் முனைந்தனர். சாதிக் கொடுமைகள் தலைவிரித்தாடிய காலத்திலே முதறிஞர் இராஜாஜி அரிசனங்கள்—தீண்டத்தகாதவர்களைக் தமது இல்லத்திற்கு அழைத்துவந்து, சமபந்தி உணவளித்து வந்தார்.

## இனத்தவரின் புறக்கணிப்பு

இராஜாஜியின் தந்தை தம் மகன் ஒருபோதும் தீய நெறிக்கண் செல்லான் என்ற எண்ணமுடையவர்; சீர்திருத்தப் போக்கிலும் ஓரளவு உடன்பாடுடையவரே. எனினும் மற்றவர்கள் எழுதிய கடிதம் கண்டு மகன்பால் சினம்கொண் டார்; சேலம் வந்தார். தந்தைக்கும் மகனுக்கும் சொற்போர் நடந்தது. இராஜாஜியின் செய்கை 'தவறு தவறு' எனத் திரும்பத் திரும்பக் கூறினார். தம் செய்கை நீதிக்குப் புறம்பானதில்லை என்று இராஜாஜி எடுத்துரைத்தார். பின்னர் இறங்கிவந்த

தந்தை இரக்கத்தோடு, 'இராசகோபாலா, நீ செய்தது சாத்திரத்திற்கு முரணானது என்று சொல்லவில்லை. நம் இனத்தாரின் வீண் பகை ஏன்? நாளை நான் இறந்துபோனால் என் உடலைச் சுடுகாட்டிற்கு எடுத்துச் செல்வதற்கு இனத்தார் இரண்டுபேர் வேண்டாவா?' என்று முடித்தார்.

அவர் அச்சம் வீண் போகவில்லை. அவர் நினைத்தது நடந்துவிட்டது. இராஜாஜியின் தந்தை இறந்தபோது அவர் உடலைச் சுடுகாட்டிற்கு எடுத்துச் செல்ல அவர் இனத்தவர் யாரும் கட்டுப்பாடாக வரவில்லை. ஏனைய இனத்தவர் நண்பர்களின் உதவியோடு தந்தையின் ஈமச் சடங்குகளைச் செய்து முடித்தார் இராஜாஜி.

### கலப்புமணம்

கலப்புமணம் ஒன்றினால்தான் சாதியை ஒழிக்க முடியும் என்பதை இராஜாஜி அவர்கள் தெளிவாக உணர்ந்திருந்தார். 'இளைஞர்களே! நீங்கள் சாதிகளை ஒழிக்க விரும்புகிறீர்களா? தாராளமாகச் செய்யுங்கள். அதற்கு ஒரே வழி கலப்புமணம் செய்துகொள்வதுதான். சாதியின்மீது நீங்கள் நேரடித் தாக்குதல் நடத்த இந்த முறைக்குச் சட்டபூர்வமான ஒப்புதலுமிருக்கிறது. இதைத் தவிரச் சாதியை ஒழிக்க வேறு வழியே இல்லை' என்று தெளிவாகத் தமது கருத்தை வெளிப்படுத்தினார். வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் கலப்புமணங்களை முன்னின்று நடத்தியும் வைத்திருக்கிறார்.

குமாரமங்கலம் பெருநிலக்கிழாரும், நம் மாநிலத்தின் முன்னாள் அமைச்சரும், வேளாளர் மரபைச் சேர்ந்தவருமான டாக்டர் சுப்பராயனும், இராதாபாய் என்னும் பெயருடைய கன்னடிய அந்தணர் மரபைச் சேர்ந்த நங்கையும் ஒருவரை ஒருவர் விரும்பினர். திருமணத்திற்கு எதிர்ப்புத் தோன்றியது. அதையறிந்த இராஜாஜி தாமே முன்னிருந்து துணிவோடு திருமணத்தை முடித்து வைத்தார்.

அதேபோன்று அவர் குடும்பத்திலேயும் ஒரு நிகழ்ச்சி நடந்தது. தம் இளைய மகள் இலட்சுமிக்கும் வணிக மரபைச் சேர்ந்த காந்தியடிகள் மகன் தேவதாஸ் காந்திக்கும் தாமே முன்னின்று கலப்புமணம் செய்வித்தார்.

### இல்லற வாழ்வில் ஏற்பட்ட திருப்பம்

1915ஆம் ஆண்டு இராஜாஜியின் துணைவி அலர்மேலு மங்கம்மாள் உயிர்நீத்தார். குழந்தைகள் நலனுக்காக மறுமணம்

செய்துகொள்ளப் பலர் வற்புறுத்தியும் இராஜாஜி மறுத்து விட்டார்.

## அரசியல் ஈடுபாடு

இராஜாஜி அவர்கள் தம் தொழிலில் மட்டுமன்றிப் பொதுப் பணிகளிலும் கருத்துச் செலுத்தி வந்தார்; தாராள மனப் பான்மையுடையவராகவும் இருந்தார். வ. உ. சி., சுப்பிரமணிய சிவா, சுப்பிரமணிய பாரதியார் முதலிய தீவிர தேசியப் போராட்ட மறவர்கட்கெல்லாம் வள்ளலாக இருந்து உதவினார். சுதேசிக் கப்பல் குழுவிற்கு நிறையப் பங்குகள் சேர்த்துக் கொடுத்தார். தாமும் ஆயிரம் ருபாவுக்குப் பங்குகள் வாங்கி உதவினார்.

தொடக்கத்தில், பாலகங்காத திலகரின், 'தன்னாட்சி எனது பிறப்புரிமை' என்னும் கோட்பாட்டால் ஈர்ப்புண்டார். அன்று திலகரின் கருத்துகள் கற்றோரனைவரையும் பெரிதும் கவர்ந்தன. திலகரின் தீவிரப் போக்கினை உட்கொண்டு டாக்டர் அன்னி பெசன்ட் அம்மையார் 1916-ல் தன்னாட்சி இயக்கத்தைத் (Home Rule Movement) தோற்றுவித்தார். அவ்வியக்கம் படித்தவர்களிடையே பெரிய பரபரப்பை ஏற்படுத்தியது. இராஜாஜியின் உள்ளத்திலும் தீவிரக் கொள்கைகள் வேரூன்றின. டாக்டர் அன்னி பெசன்ட், டாக்டர் அருண்டேல், திரு. வாடியா ஆகிய மூவரும் சிறை வைக்கப் பட்டபோது பெருங்கிளர்ச்சி செய்து விடுதலை செய்யப் பாடுபட்டார்.

சிறையிலிருந்து திரும்பியபின் அன்னி பெசன்ட் அம்மையார் மிதவாதப் போக்கினை மேற்கொண்டார். இராஜாஜியின் அரசியல் உணர்ச்சி மேலும் தீவிரமடைந்தது. அரசியல் துறையில் தென்னிந்தியாவை முதன்மைபெறச் செய்யவேண்டு மென்னும் எண்ணமும் அவருக்கு உண்டாயிற்று. ஒரு குழு வைச் சேர்த்துப் பின்னிருந்து உதவ எண்ணினார். டாக்டர் வரதராசுலு நாயுடு, டாக்டர் டி. எஸ். எஸ். இராசன், திரு. வி. கலியாணசுந்தரனார், திரு. ஈ. வே. இராமசாமிப் பெரியார். சேலம் ஆதிநாராயண செட்டியார், மதுரை ஜார்ஜ் ஜோசப், திருவரங்கம் கே. வி. அரங்கசாமி ஐயங்கார், ஆரணி சுப்பிரமணிய சாஸ்திரி முதலியோர் உள்ளிட்ட ஒரு குழுவை உருவாக்கினார்.

1917-ல் டாக்டர் பெசன்ட் அம்மையார், டாக்டர் அருண் டேல், திரு. வாடியா என்னும் மூவரையும் பாதுகாப்புக் கைதி

யாக்கிச் சேலம் வழியாகக் கூனூருக்கு அழைத்துச் சென்ற போது, சேலம் தொடர்வண்டி நிலையத்தில் அவர்களுக்கு இராஜாஜியும் நண்பர்களும் மாலையணிவித்து வழியனுப்பி வைத்தனர்.

1918ஆம் ஆண்டில் காஞ்சிபுரத்தில் கவிக்குயில் சரோஜினி நாயுடு தலைமையில் நடந்த காங்கிரசு மாநாட்டில், அன்னி பெசன்ட் அம்மையார் 'உலகப் போரில் ஈடுபட்டிருந்த பிரிட்டன் அரசுக்கு உதவவேண்டும்' எனத் தீர்மானம் கொணர்ந்தார். இராஜாஜியும் சத்தியமூர்த்தியும் கலந்துபேசி அத் தீர்மானத்தை முறியடித்தனர். அன்று முதல் இராஜாஜியின் புகழ் ஓங்கி வளரத் தொடங்கியது.

அதன் பின்னர் நடந்த கல்கத்தா மாநாட்டிலும் கலந்து கொண்டு குழப்பநிலையிலிருந்த தீர்மானத்தைத் திருத்தி வடிவமைத்துக் கொடுத்துப் பல்லோராலும் பாராட்டப்பெற்றார்.

## சென்னை வாழ்வு

இராஜாஜியின் அறிவு நுட்பத்தையும் செயலாற்றும் திறனையும் நன்குணர்ந்த 'இந்து' நாளேட்டின் ஆசிரியர் திரு. கஸ்தூரிரங்க ஐயங்காரின் வேண்டுகோட்கிணங்க, இராஜாஜி சேலத்திலிருந்து சென்னைக்கு வந்து மயிலாப்பூர் எட்வர்டு எலியட்சு சாலையிலுள்ள 'சபர்மதி' என்னும் பெயருடைய வளமனையில் குடியேறித் தொழில் நடத்தலானார்.

## காந்தியடிகளும் இராஜாஜியும்

அண்ணல் காந்தியடிகள் தென்னாப்பிரிக்காவில் ஆற்றிய பணிகளைப்பற்றியும் அறப்போர் நடத்திப் பெற்ற வெற்றி பற்றியும் இராஜாஜி அறிந்திருந்தார். சென்னை வந்தபின் அண்ணல்பால் வைத்திருந்த அன்பும் நன்மதிப்பும் மேலும் வளர்ந்தன. இந்நிலையில் அண்ணல் அறப்போர் முறைபற்றி உரையாடவும், அவரைப் பேச வைக்கவும் விரும்பிக் காந்தியைச் சென்னைக்கு வரவழைத்தார். அண்ணல் காந்தியடிகளும், இராஜாஜி குடியிருக்கும் கஸ்தூரிரங்க ஐயங்கார் இல்லத்திலேயே தங்கினார். அடக்கமும் நாணமும் உடையவராய் ஓடிஆடிப் பணி செய்துகொண்டிருந்த இராஜாஜியை மகாதேவ தேசாய் அண்ணல் காந்திக்கு அறிமுகப்படுத்தியதோடு, அவர் அழைப்பினாலேயே அவர்கள் வந்திருப்பதாகவும் நினைவூட்டினார்; அண்ணல் காந்தி வியந்தார்.

## 'ரவுலட்' சட்டம்

காந்தியடிகள் சென்னையிலிருந்தபோது 1919 ஆம் ஆண்டு மார்ச்சு 18 ஆம் நாள் அன்று செம்ஸ்போர்டு பிரபுவால் ரவுலட் சட்டம் என்னும் அடக்குமுறைச் சட்டம் கொண்டுவரப்பட்டது அந்த நேரத்திலிருந்து அண்ணல் காந்தி ஒரு கிளர்ச்சிக் காரராகவே மாறிவிட்டார் எனலாம்.

அன்றே நடந்த படிப்பாளிகள் கூட்டத்தில் அறப்போர் முறையான ஒத்துழையாமைபற்றி விளக்கமும் விடையும் தந்து விட்டுக் காந்தியடிகள் விடைபெற்றார். சென்னையில் அறப் போர் நடத்துவதற்கான குழுவொன்று அமைக்கப்பட்டது. அதன் செயலாளராக இராஜாஜி தேர்ந்தெடுக்கப்பட்டார்.

## அண்ணல் காந்தியின் அடிச்சுவட்டில்

1919 ஏப்பிரலில் இந்திய தேசியக் காங்கிரசின் தலைமைப் பொறுப்பையும் 1920 ஏப்பிரலில் தன்னாட்சி இயக்கத்தின் தலைமைப் பொறுப்பையும் அண்ணல் காந்தியடிகள் ஏற்றுக் கொண்டார். கிலாபத் இயக்கமும் ஒத்துழையாமைக் கொள் கையை ஏற்றுக்கொண்டது.

ஒத்துழையாமை இயக்கத்தின் கோட்பாடுகளின்படி அண்ணல் காந்தியின் அடிச்சுவட்டிலே நின்று திங்கள்தோறும் பத்தாயிரம் ரூபா அளவில் வருமானத்தைத் தந்துகொண்டிருந்த வழக்கறிஞர் தொழிலை இராஜாஜி கைவிடுவதாக அறிவித்தார்; கல்லூரியில் படித்துக்கொண்டிருந்த தம் மக்களைக் கல்வி நிலையங்களுக்கு அனுப்பாமல் நிறுத்திவிட்டார்.

தமிழகத்திலேயே முதன் முதலாக அண்ணலின் கொள்கை யைச் செயல்படுத்திக் காட்டிய அந்தத் தியாகச் செம்மல் தமிழகமெங்கும் சுற்றித்திரிந்து இரவுபகல் பாராது ஒத்துழை யாமை இயக்கம் வெற்றிபெறப் பாடுபட்டார். நூற்றுக்கணக் கான வழக்கறிஞர்கள் வழக்குமன்றத்தைப் புறக்கணித்தனர். பல்லாயிரக்கணக்கான மாணவர்கள் கல்வி நிலையங்களை விட்டு வெளியேறினர். நாடே செயலிழந்தது; ஆட்சி நிலை குலைந்தது.

## செயல்வீரர்

1920-ல் கல்கத்தாவில் நடந்த காங்கிரசு மாநாட்டில் ஒத்துழையாமைபற்றிய தீர்மானம் வந்தது. தேசபந்து தாஸ்,

மோதிலால் நேரு, சத்தியமூர்த்தி முதலானோர் அத் தீர்மானம் தோல்வியுறப் பாடுபட்டனர். முதறிஞர் இராஜாஜி, அவர்களைத் தோல்வியுறச் செய்து தீர்மானம் வெற்றிபெறச் செய்தார்.

1920 கடைசியில் நாகபுரியில் நடந்த மாநாட்டிலும் ஒத்துழையாமையை ஏற்கச் செய்தார். அங்கு இராஜாஜி பொதுச் செயலாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

வேலூரில் அவர் அறப்போர் முறைப்படி தடையை மீறிப் பேசச் சென்று சிறைக்கனுப்பப்பட்டார்.

கயையில் நடந்த பேரவையிலும் காந்தியடிகளின் திட்டம் வெற்றி பெறச் செய்தார். 1930ஆம் ஆண்டு அண்ணல் காந்தியடிகள் தண்டியை நோக்கி உப்புப் பயணத்தைத் தொடங்கினார். அதேபோன்று திருச்சியில் டி. எஸ். எஸ். இராசன் இல்லத்திலிருந்து இராஜாஜியின் தலைமையில் தொண்டர்கள் பலர் திருமறைக்காட்டுக் கடற்கரையை நோக்கிப் புறப்பட்டனர். தஞ்சை மாவட்ட ஆட்சியாளர் தார்ன் (Thorn) துரை, கடற்கரையை அடைவதற்குள் இராஜாஜியைச் சிறைப்படுத்திவிடத் திட்டமிட்டார். ஊர்கள்தோறும் மேள தாளத்தோடு வரவேற்பு விருந்து முதலியன நடந்தன. விடியற் காலையில் காவலர் நெருங்குவதற்குள் கடலில் மூழ்கிக் கரைக்குவந்து உப்பெடுத்தார் இராஜாஜி. பின்னர்ச் சிறை செய்யப்பெற்று ஓராண்டு சிறைக்குள் இருந்தார்.

தனித் தொகுதி முறையை எதிர்த்து அண்ணல் காந்தி சிறையிலே உண்ணாநோன்பிருந்தார்; நாள்கள் கடந்தன. தனித்தொகுதி முறையை வற்புறுத்திய அம்பேத்கார் அதைக் கைவிட விரும்பாததே இதற்குக் காரணம். அவரை யாராலும் சரிக்கட்ட முடியவில்லை. அண்ணலின் உயிர் ஊசலாடிக் கொண்டிருந்தது. இராஜாஜி அம்பேத்காரைக் கண்டு அரை மணி நேரம் பேசித் தனித்தொகுதி முறையைக் கைவிட ஒப்புக் கொள்ளச் செய்துவிட்டுத் திரும்பினார். அண்ணலுக்கு என்ன நேருமோ என நாடே எதிர்நோக்கியிருந்தது. தேவதாஸ் காந்தி, 'ஏதாவது முடிந்ததா?' என்று கேட்டார். முதறிஞர் இராஜாஜி, 'வேலை முடிந்தது' என்றார். எல்லோரும் மகிழ்ந் தனர். காந்தியின் உயிரைக் காப்பாற்றிய செம்மல் என்று சிலர் நன்றிப் பெருக்கோடு பாராட்டினர்.

இவ்வாறு செயற்கரும் செயலாற்றிய முதறிஞர் இராஜாஜி அவர்கள் தமிழகத்தில் தலைமை அமைச்சராக வந்தபோது,

தீண்டத்தகாதவர் கோயில் நுழைவுக்கெனச் சட்டத்தைக் கொணர்ந்தார்; மதுவிலக்குச் சட்டத்தைக் கொணர்ந்தார்; மலைச்சாலையில் (அண்ணா சாலை) இருந்த கர்னல் நீலன் சிலையை அகற்றிப் பொருட்காட்சியில் இடம்பெறச் செய்தார்; உழவர் கடன்நிவாரணச் சட்டம் கொணர்ந்தார். மற்றும் சென்னை மாநகரமும் திருத்தணியும் தமிழ்நாட்டிற்குக் கிடைக்கச்செய்த பெருமை மூதறிஞர் இராஜாஜியையே சாரும்.

## தேடிவந்த பதவிகள்

மூதறிஞர் இராஜாஜி அவர்கள் பதவிகளால் பெருமை பெற்றார் என்பதைவிட இராஜாஜியால் பதவிகளே பெருமை பெற்றன எனக் கூறுவதே பொருத்தமாகும். இராஜாஜி 1937ஆம் ஆண்டு ஆந்திரம், கேரளம், மைசூர் உள்ளிட்ட சென்னை மாநிலத்தின் தலைமை அமைச்சராகப் பொறுப் பேற்றார். 1946 ஆம் ஆண்டு அமைந்த இடைக்கால அமைச்சரவையில் அமைச்சராகவும், 1947ஆம் ஆண்டு, ஆகஸ்டு 15 ஆம் நாள் மேற்கு வங்க ஆளுநராகவும், 1948 ஆம் ஆண்டு இந்தியாவின் ஆளுநர் தலைவராகவும் (கவர்னர் ஜெனரல்), 1952ஆம் ஆண்டு தமிழக முதல்வராகவும் பொறுப் பேற்றுச் சிறப்புறத் தொண்டாற்றினார்.

## பெரியாருடன் உறவு

இராஜாஜியும் தந்தை பெரியாரும் கருத்து வேறுபாடுகட்கு அப்பாற்பட்ட நண்பர்கள் ஆவர். இராஜாஜி சேலம் நகர மன்றத் தலைவராயிருந்தபோதும், தேசியக் காங்கிரசில் தொண் டாற்றியபோதும் பெரியாருடன் நெருங்கிப் பழகினார். கருத்து வேறுபாட்டின் காரணமாக இரு வேறு இயக்கங்களில் தொண் டாற்றிய மாறுபட்ட சூழ்நிலையிலும் அவர்களின் நட்புத் தேயவில்லை.

இராஜாஜி மறைவுற்று, அவர் பொன்னுடல் எரியூட்டப் பட்டபோது, தந்தை பெரியார் தம் தள்ளாத அகவையிலும் தட்டுத் தடுமாறிவந்து அருகிருந்து கலங்கிக் கண்ணீர் உகுத்த காட்சியே அவர்கள் கொண்டிருந்த சிறந்த நட்பிற்கோர் எடுத்துக்காட்டாகும்.

## தமிழிலக்கியப் பணி

அரசியல் வானிலே பன்முகத் திறமைசாலியாக விளங்கிய மூதறிஞர் இராஜாஜி இலக்கிய வானிலேயும் முழு நிலவாகக்

காட்சியளித்தார் எனலாம். அரசியலிலேயும் இலக்கியத்திலே யும் ஒரே நேரத்தில் புகழ்பெற்று விளங்குவது என்பது உலக வரலாற்றிலே எளிய செய்கையன்று. இவ்வகையில் இந்திய இலக்கிய வளர்ச்சிக்குப் பாடுபட்டவர்களிலே இராஜாஜி முதலிடம் பெறக்கூடியவராவார். இராஜாஜி இலக்கியத் துறை யில் அழியாத இடம் பெற்றவர் ஆவார்.

நாட்டுக்காகச் சிறையிலிருந்தபோது சோக்ரதர் என்னும் முதல் நூலை எழுதினார். எளிய இனிய தமிழ் நடையில் நிறைய எழுதிக் குவித்தார். சக்கரவர்த்தித் திருமகன், வியாசர் விருந்து, கண்ணன் காட்டிய வழி, மற்றும் உபநிடதப் பலகணி, சிறு கதைத் தொகுதி முதலான நூல்கள் சிறப்பிடம் பெற்றவை எனலாம். திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்பும் போற்றத் தக்க முறையில் அமைந்துள்ளது.

### உலகக் குடிமகன்

தமிழகத்துச் சிற்றூரான தொரப்பள்ளியிலே தோன்றிய இராஜாஜி தம் அறிவு நுட்பத்தினாலும், செயலாற்றலினாலும், அரிய தொண்டினாலும், அண்ணல் காந்தியடிகளின் அருள் ஒளியாலும் உலகப் பேரறிவாளர்களுள் ஒருவராகத் திகழ்ந்தார். அவருள்ளம் சூயஸ் கால்வாய்ப் பிரச்சினைபற்றியும் ஆராய்ந் தது; அணுகுண்டைப்பற்றியும், உலக அமைதிபற்றியும் ஆராய்ந்து, உலக வல்லரசுகளுக்கு அறிவுரை கூறியது. அவர் உலக அரசியல் வல்லுநர்களுள் ஒருவராக உலகக்குடிமகனாகத் திகழ்ந்தார்.

### சபர்மதியும் திருச்செங்கோடும்

தென்னாப்பிரிக்காவிலே அறப்போர் நடத்தி வெற்றி கண்டு, தொண்டுக்காகவே தம்மை ஒப்படைத்த துறவியாக—ஆன்ம நேயத்து அறவோனாக இந்தியாவிற்குத் திரும்பிவந்த அண்ணல் காந்தி – இல்லை – ஆன்மா காந்தி, குடியிருக்க இடம் பார்த்தார். குசராத்து மாநிலத்தில் சபர்மதி ஆற்றோரத்தில் ஓர் இடம் கிடைத்தது. அங்கே துறவிக் குடிலமைத்துத் தொண்டர் களோடு தங்கி, அரசியல் பணிகளையும் சமுதாயப் பணிகளை யும் ஆற்றிக்கொண்டிருந்தார். உலகம் அந்தத் துறவியின் குடிலைச் சுற்றி வலம்வந்தது. இந்திய மக்கள் அந்த ஓலைக் குடிசையைக் கோயிலெனக் கும்பிட்டனர்.

அதேபோன்று, தென்னாட்டிலே ஒரு துறவுக் குடிலமைத்து காந்தியை அங்குக் குடிவைத்து வழிபடவேண்டும் என்று ஓர் எளிய உள்ளம் விரும்பியது. அந்த உள்ளத்திற்குரிமையுடையவர் வேறு யாருமல்லர்; தென்னாட்டுக் காந்தி முதறிஞர் இராஜாஜியே. திரு. இரத்தின சபாபதிக் கவுண்டர் திருச்செங்கோட்டிற்கருகிலே உள்ள புதுப் பாளையத்தில் நிலந்தந்து உதவினார். குடில்கள் அமைக்கப்பட்டன. சபர்மதியில் நடைபெறுவது போன்று இங்கும் சிறந்த முறையில் தொண்டு செய்தல் வேண்டுமென்பதற்காக 1923-ல் தம் மகன் திரு. சி. ஆர். நரசிம்மனையும், மகள் நாமகிரியையும் சபர்மதிக்கு அனுப்பிப் பயிற்சி பெறச் செய்தார். தாமும் அந்தக் குடிலில் பத்தாண்டுகள் தங்கி, தீண்டாமையொழிப்பு, மதுவிலக்கு, கதரியக்கம் முதலிய செயல்திட்டப் (நிர்மாணப்) பணிகளிலே கருத்துச் செலுத்திவந்தார்.

### வடநாட்டுக் காந்தியும் தென்னாட்டுக் காந்தியும்

அண்ணல் காந்தியடிகளைப் போலவே இராஜாஜியும் மதுவிலக்குக் கொள்கையில் உறுதிப்பாடு உடையவராக இருந்தார்; மதுவிலக்கு என்பது மக்களின் நல்வாழ்வுத் திட்டம் என நம்பினார்; அதற்காகச் சில் செயல்திட்டங்களை வகுத்துச் செயல்படுத்தினார். நேரு அவர்கள் இராஜாஜியை, 'மதுவிலக்கு இயக்கத்தின் தந்தை' என்றே பாராட்டினார். இதே போன்று தீண்டாமை ஒழிப்பிலும் தொடக்க கால முதல் பணியாற்றியுள்ளார்; நமது ஏழைநாட்டில் கதரியக்கத்தின் மூலம் பன்னூறாயிரம் ஏழை மக்களுக்கு வேலைதந்து அரைவயிற்றுக்காவது கஞ்சிவார்க்க முடியும் என்று அண்ணல் காந்தியடிகளும் இராஜாஜியும் நம்பிச் செயற்பட்டனர். பட்டினி கிடந்த பாமர மக்கள் கதரியக்கத்தால் பசி நீக்கப்பட்டதையும், இங்கிலாந்திலுள்ள மான்செஸ்டரிலே பல்லாயிரக்கணக்கான ஆலைத் தொழிலாளிகள் வேலையிழந்து துன்புற்றதையும் அண்ணல் காந்தியடிகள் கண்கூடாகக் கண்டார்.

இவ்வாறு மனித உணர்வோடு இந்தியாவைப் பல்வேறானும் தூக்கி நிறுத்தப் பாடுபட்ட இருபெருந் தலைவர்களையும் நாடு எண்ணி எண்ணி நன்றி பாராட்டக் கடமைப் பட்டுள்ளது.

முதறிஞர் இராஜாஜி எளிமையும், அடக்கமும், எல்லாரும் பின்பற்றற்கேற்ற நல்லியல்பும் வாய்ந்தவர்; எளிய இனிய தமிழில் எழுதக்கூடிய சிறந்த எழுத்தாளராகவும் நகைச்சுவை

யோடு, மெதுவாகப் பேசும் சிறந்த பேச்சாளராகவும் திகழ்ந்தவர். பெரும்பான்மையோர் பாராட்டவேண்டும் என்பதற்காக ஒரு கருத்தைப் பேசாமல், தம் உள்ளத்தில் சரியென்று பட்ட கருத்தை யாருக்கும் அஞ்சாமல் துணிவோடு சொல்லக்கூடியவர். அதனால் அவரைச் சிலர் இரும்பு நெஞ்சம் படைத்தவர் என்பர். ஆனால் அவர், ஏழைகட்காக இரங்கும் இளகிய நெஞ்சமும் பகைவரும் பாராட்டும் நற்பண்பும் படைத்திருப்பதைக் கண்டு சிலர் அவரை மலர் போன்ற மென்மை உள்ளம் வாய்ந்தவர் எனக் கூறுவதுமுண்டு. ஆனால், இராஜாஜியின் ஆளுமையானது, இரும்பின் வன்மையும், நிலத்தாமரை (ரோஜா) மலர் இதழின் மென்மையும் ஒருங்கமைந்த இணையற்ற குறியீடாகத் திகழ்வது எனலாம்.

## 'பாரத ரத்தினா' பட்டம்

அணுக் கருவியின் ஆய்வைத் தடுக்க அமெரிக்கா சென்று குடியரசு தலைவர் ஜான் கென்னடியோடு உரையாடினார் இராஜாஜி. ருசிய நாட்டுக் குருசேவோடும் உரையாடி ஒப்புதல் பெற்றார். இத்தகு உலக அமைதிப் பணியாற்றினமைக்காக இந்திய அரசு 'பாரத ரத்தினா' எனும் உயர்ந்த பட்டத்தையளித்துச் சிறப்பித்தது. அவர்தம் இலக்கியப் பணிக்காகச் சாகித்திய அகாதமியும் பரிசு வழங்கிப் பாராட்டியுள்ளது.

## ஒளிவிளக்கு அணைந்தது

மூதறிஞர் இராஜாஜி குடிசையிலிருந்து அரண்மனைக்குச் சென்ற கோமகனாக மட்டுமன்றி, அரண்மனையிலிருந்து குடிசைக்குச் சென்ற புத்தனாகவும் விளங்கினார். அவர் அரசியலில் சூழ்திறன் வாய்ந்த சாணக்கியனாகவும், உலகப் பேரறிவாளர்களுள் ஒருவராகவும், எளிமை, தூய்மை, கூரிய அறிவாற்றல்களின் இருப்பிடமாகவும், சிறந்த இலக்கியச் சிந்தனையாளராகவும், சீர்திருத்தச் செம்மலாகவும் திகழ்ந்தவராவார். அத்தகைய 'தென்னாட்டுக் காந்தி.' பெரியார் போற்றும் பெரியார், 1972ஆம் ஆண்டு, திசம்பர்த் திங்கள் இருபத்தைந்தாம் நாள், தமது 94ஆம் அகவையில் இயற்கை எய்தினார்; நாடே துயரக்கடலில் மூழ்கியது. இராஜாஜியின் புகழ், குன்றின்மேலிட்ட விளக்கென — கோபுரத்துக் குடமென என்றென்றும் நின்று நிலவும் என்பதில் ஐயமில்லை.

# 3. இராஜா ராம்மோகன்ராய்

'மாரத வீரர் மலிந்தநன் னாடு
மாமுனி வோர்பலர் வாழ்ந்தபொன் னாடு'

எனப் புதுநெறி காட்டிய புலவர் பாரதி பாடியதுபோல, இந்திய நாடு ஆண்மைமிக்க மறவர்களையும், அறிவிற் சிறந்த மேதைகளையும் ஈன்றெடுத்துப் புகழ்படைத்த பொன்னாடாகும்; இத்தகைய பொன்னாட்டில், தொன்றுதொட்டு வாழ்ந்து வரும் மக்கட் சமுதாய வாழ்விலே எத்தனையோ நன்மைகள் ஏற்பட்டன; இடையிடையே சிற்சில தீமைகளும் ஏற்பட்டன. இச் சீர்கேடுகளை அகற்றிச் செம்மைப்படுத்தி, 'இப்படித்தான் வாழவேண்டும்' என்று அறிவின் மிக்க சான்றோர்கள் வழிமுறைகளை வகுத்து வரன்முறைப்படுத்தி வந்துள்ளனர். அத்தகைய சான்றோர்களுள் ஒருவரே இராஜா ராம்மோகன்ராய்.

## இந்துசமயமும் இராம்மோகனும்

'சமயம்' என்பது மக்களைச் சிறந்த சமுதாய வாழ்விற்குப் பக்குவப்படுத்தி நெறிப்படுத்தும் ஓர் அமைப்பாகும். அது காலத்திற்குக் காலம் சிற்சில புதுப்புது புனைவுகளை மேற்கொள்வது இயல்பு. மிகப் பழையதும் பெரியதுமான இந்து சமயமும் காலமாறுதல்களுக்கேற்ப இறைவழிபாட்டு முறையிலும், சமுதாயக் கட்டுப்பாட்டு முறையிலும், பழக்கவழக்கங்களிலும் பல்வேறு மாற்றங்களைப் பெற்று வந்துள்ளது. எனினும் சிற்சில சீர்கேடுகளும், மூடப் பழக்கவழக்கங்களும், தொடர்ந்து நிலைபெற்று வருவதையும் காணலாம். இதனால் கல்வி அறிவும் பகுத்தறிவும் இல்லாத பாமரமக்கள் கடவுளின் பெயராலும், வேதங்கள், புராணங்கள் முதலானவற்றின் பெயராலும் இழித்தும் பழித்தும் பேசப்பட்டனர்; பல்வேறு இழப்புகளுக்கும் இன்னல்களுக்கும் உள்ளாயினர்.

சாதி, சமயம், தீண்டாமை, மூடப் பழக்கவழக்கங்கள் முதலானவற்றைக் கண்டு வெகுண்டெழுந்த இராம்மோகன் காலங்காலமாய் வேரூன்றி, நிலைத்துக் கிளைத்துள்ள இவற்றை மேற்பூச்சு மருந்தால் அகற்றிவிட முடியாது. அறுவை மருத்துவம் போன்று புரட்சிகரமான செயல்களினாலேயே போக்க இயலும் எனக் கருதினார்; உருவ வழிபாட்டையும் பலதெய்வ வழிபாட்டையும் வெறுத்தார்; 'ஒன்றே குலம், ஒருவனே தேவன்' என்னும் முடிவினையே உள்ளத்தில் தேக்கினார். எல்லாவற்றினும் மேலாகத் தம் உள்ளத்தை வருத்திய உடன்கட்டை ஏறும் (சதி) வழக்கத்தை ஒழித்தார். இத்தகைய விரிந்த மனமும் தெளிந்த சிந்தனையும் உடைய இராம்மோகன் சமுதாயச் சீர்திருத்தப் பணிகளிலே துணிவோடு இறங்கிப் பீடுநடை போட்டார்.

## இராம்மோகன் பிறப்பு

இராம்மோகன் வங்கத்தில் பர்துவான் மாவட்டத்தில் இராதா நகரம் என்னும் ஊரில் 1772ஆம் ஆண்டு இராமகாந்தருக்கும், தாரணி தேவிக்கும் மகனாகத் தோன்றினார். குழந்தைப் பருவத்திலேயே மணம் புரிந்து கொண்டார். முதல் மனைவி இறந்ததால் மீண்டும் ஒரு பெண்ணை மணந்தார். மகப்பேறு இன்மையால் மூன்றாம் திருமணமும் செய்துகொண்டார். அதன் பின்னர் இரண்டாம் மனைவிக்கு ஆண் குழந்தை பிறந்ததைக் கண்டு அகமகிழ்ந்தார்.

## பெற்றோருடன் சொற்போர்

இராம்மோகன் இளமையிலேயே இராமாயணம், மகா பாரதம், பாகவதம் முதலிய நூல்களைக் கருத்தூன்றிப் படித்தார். எனினும், பெற்றோரைப் போல இராமனையும், கண்ணனையும், சக்தியையும், சிவனையும் நம்பவும் வழிபடவும் மறுத்துவிட்டார். 'கடவுள் ஒருவரே. அவருக்கு உருவம் இல்லை என்னும் கருத்தை வைத்து நான் நூலெழுதுகிறேன்' என்றார், பன்னிரண்டே அகவை நிறைந்த இராம்மோகன். 'இவர் பெரிய மேதை, நூலெழுதுகிறார்! ஆயிரக்கணக்கான ஆண்டுகளாய் உருவ வழிபாடு செய்கிறோம். நம் முன்னோர் எல்லாம் முட்டாள்களா?' என்றார் தந்தை. 'ஆயிரம் ஆண்டுகளாய் நம் முன்னோர்கள் நம்பியதால் அது உண்மையாகி விடாது. உருவ வழிபாடு பகுத்தறிவுக்கு ஒவ்வாதது' என்றார் தனயன். 'நாங்கள் சொன்னபடிதான் நீ கேட்க வேண்டும்';

இல்லையேல் இவ் வீட்டில் உனக்கு இடமில்லை' எனக் கூறி விரட்டினார் தந்தை; வெளியேறினார் மகன்.

## இல்லம் திரும்புதல்

இளமை முதலே தாம் கற்ற நூல்களிலிருந்தே இராம் மோகன் அறிவுக்கூர்மை பெற்றார். பகுத்தறிவுக்கு ஒவ்வாத குருட்டு நம்பிக்கையிலே அவர் உள்ளம் ஒருப்படவில்லை. ஊர் ஊராய்ச் சென்று கோயில் குளமெல்லாம் சுற்றினார்; அறிவாளிகளுடன் உரையாடினார்; ஒரு சமயம் திபெத்தை அடைந்து புத்த சமய உண்மைகளைக் கற்க விரும்பினார். அங்கு பௌத்தர்கள் தலாய்லாமாக்களை வழிபடுவதைக் கண்டு உளம் சோர்ந்தார். புத்தர் கடவுளைப்பற்றியே பேச வில்லை. அவ்வாறு இருக்கத் தலாய்லாமாக்களைக் கடவுளைப் போல வழிபடுவது தவறு என்று இராம்மோகன் போகுமிட மெல்லாம் பேசினார். இதைக் கேட்டு ஆத்திரமுற்றவர் இராம்மோகனைக் கொன்றுவிடத் துணிந்தனர். திபெத்திய மாது ஒருத்தியின் உதவியால் தப்பிப் பிழைத்து ஊர் திரும்பி னார். பெற்றோர் அன்போடு அவரை வரவேற்று மகிழ்ந்தனர். 1786 முதல் நான்காண்டுகள் காசியில் பயின்று இந்து சமயத்தின் அடிப்படை உண்மைகளை உணர்ந்து திரும்பினார். பின் தம் தமையன் ஜகன்மோகனைப்போல வாணிகத்தில் ஈடுபட்டுப் பெரும் பொருளீட்டினார்; நூல் வெளியிட்டார்; பேரும் புகழும் பெற்றார்.

## புரோகிதர்களின் எதிர்ப்பு

1815-ல் கல்கத்தா வந்து சேர்ந்ததும், தாம் வங்க மொழியிலே எழுதிய **வேதாந்த சாரம்** என்னும் நூலையும் **கேனோபநிடதம், ஈசோபநிடதம்** என்னும் நூல்களையும் ஆங்கிலத்திலே மொழி பெயர்த்து வெளியிட்டு இலவசமாக வழங்கினார். இங்கிலாந் திலும் அமெரிக்காவிலும் இந்த நூல்கள் ஏராளமாய் விற்பனை யாயின. பாரத நாட்டுப் புரோகிதர்கள் வெகுண்டனர். இந்து சமயத்திற்கு அடிப்படையான வேதங்களும் உபநிடதங்களும் சாத்திரங்களும் வடமொழியில் இருக்கின்றன. பெரும்பாலும் அந்தணர்கள் மட்டுமே வேதம் முதலான நூல்களைப் பயின்று அறிஞர்களாகவும், இந்து சமயக் கருத்துகளுக்கும் ஒழுக்க விதிகளுக்கும் அடிமையுடையவர்களாகவும் இருந்தனர். எனவே, வேற்று மொழியில் மொழிபெயர்த்தால் தங்கள் செல்வாக்குப் போய்விடும் எனக் கருதினர். அந்தணர்களைத் தவிர்த்துப் பிற வகுப்பினர் அந் நூல்களைத் தொடுவதும்

பாவம் எனக் கூறினர். 'சமஸ்கிருதம் தேவமொழி; சாத்திரங்கள் கடவுளால் அருளப்பட்டவை; ஆங்கிலமோ இழிமக்களின் மொழி. அம் மொழியில் எழுதுவதாலும் அந்தணர் அல்லாதவர் படிப்பதனாலும் தம் சாத்திரங்கள் இழுக்கடையும்' எனக் குறை கூறினர். இராம்மோகன் 'இந்து சமயம் மிகவும் அரிய உண்மைகளை அடிப்படையாகக் கொண்டுள்ளது. அதன் பெருமையையும் உயர்வையும் உலகறியச் செய்ய வேண்டும்' என்றார்.

உருவ வழிபாட்டைக் கண்டிக்கும் இராம்மோகன் ஒரு நாத்திகர்; இந்து சமயத்தின் பகைவர் என்றெல்லாம் புரோகிதர் பழித்தனர். உண்மைகளைப் பிறர் அறியாதவாறு மறைப்பது பாவம்; யாருடனும் பழகக் கூடாது; சேர்ந்து உண்ணக் கூடாது என்று இந்து சாத்திரங்கள் தடுக்கவில்லை என்றார் இராம் மோகன்.

சென்னையைச் சேர்ந்த சங்கர சாஸ்திரி இராம்மோகனைக் கடுமையாகக் கண்டித்தெழுதினார். அவருக்கு மறுப்பாக இந்து தெய்வக் கொள்கையின் பாதுகாப்பு என்னும் நூலையே எழுதினார் இராம்மோகன்.

தம் சீர்திருத்தக் கருத்துகளை ஆதரித்த நண்பர்களைக் கொண்டு ஆன்மீக மன்றம் என்னும் அமைப்பை உருவாக்கினார் இராம்மோகன். பின்னர் டேவிட் ஹேர் என்பவர் உதவியால் பெருந்தொகை திரட்டி ஒரு பள்ளிக்கூடம் தொடங்கினார் இராம்மோகன் ஆங்கிலத்திலும் வங்காளியிலும் பேச்சாற்றலும் எழுத்தாற்றலும் பெற்றுத் திகழ்ந்தார். பள்ளிகளில் ஆங்கிலக் கல்விதர வேண்டுமென வற்புறுத்தியவரும் அவரே.

## இராம்மோகனும் பிற சமயத்தாரும்

இராம்மோகன் இந்து சமயத்தினரிடையே இருந்த குறைபாடுகளைக் கண்டித்ததோடு கிறித்தவ சமயத்தினரிடம் காணப்பட்ட குறைபாடுகளையும் கண்டிக்கத் தவறவில்லை.

அவர் முஸ்லிம்களிடத்தில் அன்புகொண்டிருந்ததால் அவரையும் ஒரு முஸ்லிம் என்று சிலர் ஏளனம் செய்தனர். அவர் நண்பர்களான வில்லியம் கேரி, ஜோஷ்வா மார்ஷமன் என்பார் அவரைக் கிறித்தவராக்க முயன்றனர். தாம் எல்லாச் சமயங்களையும் ஆராய்ந்தவரென்றும், எல்லாவற்றிலும் நல்லதும் கெட்டதும் கலந்திருக்கின்றன என்றும், ஒரு வலுவற்ற

சமயத்திலிருந்து மற்றொரு வலுவற்ற சமயத்திற்குத் தாம் மாறுவதால் பயன் ஏதும் இல்லை என்றும் கூறினார். இவர்கள் தங்கள் சமயத்தை வலுவற்றது எனக் கூற அவருக்கு என்ன துணிச்சல்! என்று பேசிக் கொண்டனர்; அன்றுமுதல் பகைவர்களாயினர். (ஏசுநாதரின் அருள் ஒளி என்னும் இராம் மோகனின் நூலை மறுத்து மார்ஷ்மன் இந்தியாவின் நண்பன் என்னும் கடிதத்தை வெளியிட்டார். விரிவான கட்டுரை ஒன்றையும் எழுதி வெளியிட்டார். இராம்மோகன், கிறித்தவப் பொதுமக்கட்கு இறுதிக் கோரிக்கை என்னும் பெயரில் நூல் ஒன்றை வெளியிட்டார்.)

## உடன்கட்டை ஏறல்

ஆடவர் எத்தனை முறை வேண்டுமானாலும் மணம்செய்து கொள்ளலாம். பெண்டிரோ அவ்வாறு செய்துகொள்ளக் கூடாது எனும் கொள்கை அந்நாளில் இருந்துவந்தது. (கணவன் இறந்து போனால் மனைவியும் அவனோடு இறக்க வேண்டும். அவனுடல் தீப்பற்றி எரியும்போது அவளும் தீயில் பாய்ந்து உயிர்விட வேண்டும்)என்னும் கொடியமுறை வங்காளத்திலே இந்து சமயத்தினரிடையே பெருவழக்கில் இருந்தது. அதனை உடன்கட்டை ஏறல் (சதி) என வழங்கினர். (உடன்கட்டை ஏற விரும்பாமல் ஓடும் பெண்ணை இழுத்து வந்து எரியும் தீயில் தள்ளி எரித்துவிடுவார்கள்) தீயின் கொடுமையினால் அவள் துடிதுடித்துச் சாவாள். ஆனால், மற்றவரோ அவ்வாறு எரிக்கப் பெற்ற பெண்களைக் கற்பரசியர் என்று போற்றிப் புகழ்வர்.

இளமை மணம் மட்டுமா? பொருந்தாத மணத்திற்கும் எல்லையே இல்லை. அறுபது அகவைக் கிழவனைப் பதினைந்து அகவையுடைய ஒரு பெண் மணப்பாள். அவர் இறந்தால் அவளும் உடன்கட்டை ஏறுவாள். ஆனால், சாத்திரங்களில் இவற்றிற்கு ஆதாரம் இல்லை என்று இராம்மோகன் விளக்கினார். (வங்காளியிலும் ஆங்கிலத்திலும் சிறுசிறு நூல்கள் எழுதி, மக்களுக்கு இலவசமாக வழங்கினார்) புரோகிதர்களும் பழமை விரும்பிகளும் அவருக்கு எதிராகவே பேசி வந்தனர்.

## ஒழிந்தது உடன்கட்டை

அக் கொடிய பழக்கத்தை எப்படியும் நிறுத்திவிட வேண்டும் என இராம்மோகன் உறுதி பூண்டார். அதற்கு இன்னொரு காரணம், அவர் கண்ட ஒரு நிகழ்ச்சியாகும். (அவர் தமையன் ஜகன்மோகன் காலமானபோது, அவர்தம் அன்பான

அண்ணியை உடன்கட்டை ஏற்றியதை அவர் கண்கூடாகக் கண்டார். அந்த மெல்லியலாள் உடலில் தீப்பிழம்புகள் பட்டதும் கதறிக்கொண்டே ஓட முயன்றாள். சுற்றியிருந்தவர்கள் அவளை நெருப்பில் தள்ளி வதக்கிய காட்சி அவர் நெஞ்சைவிட்டு அகலவில்லை.) அக் கொடிய வழக்கத்தை ஒழிக்கச் சட்டம் செய்யுமாறு ஆட்சியாளரை வற்புறுத்தினார். (1829-ல் அரசப் பிரதிநிதியாக இருந்த வில்லியம் பென்டிங் பிரபு இராம்மோகனின் கருத்தை ஏற்று அவ் வழக்கத்தைச் சட்டத்தின்வழித் தடுத்தார்.

## கைம்பெண் மணம்

அன்று வங்காளத்தில் இளம் கைம்பெண்களின் எண்ணிக்கை மிகுதி. மறுமணம் புரிந்துகொள்ள அவர்கட்கு வாய்ப்பளிக்க வேண்டும் என வற்புறுத்தினார் இராம்மோகன்; பெண்களுக்கும் சொத்துரிமை வழங்கவேண்டும் என வற்புறுத்தினார்; ஓர் ஆடவன் பலரை மணந்துகொள்ளும் வழக்கத்தை எதிர்த்தார். ஒரு மனைவி உயிரோடு இருக்கும்போது மற்றொரு மனைவியை ஏற்பதை இந்து சமயம் அனுமதிக்கவில்லை என்று அவர் மக்களுக்கு எடுத்துச் சொன்னார். கணவன் இறந்தபின் அவன் உடைமை முழுவதும் மனைவியையே சேர வேண்டும் என்று அவர் பெருங் கிளர்ச்சி செய்தார். அப்போதிருந்த பெண்களை விற்கின்ற கொடிய முறையையும் எதிர்த்தார். பொதுவாகப் பெண்கள் விடுதலைக்காகப் பெரிதும் பாடுபட்டவர் அவரைப் போல் அன்று எவருமிலர் எனலாம்.

## பன்மொழி அறிவு

இராம்மோகன் பன்மொழிப் புலவராக விளங்கினார். பார்சி, அரபு, ஆங்கிலம், வங்காளம், ஈப்ரு, கிரேக்கம், இலத்தீன் முதலிய மொழிகளைக் கற்றிருந்தார்.

(வில்லியம் ஆடம் என்பாரின் துணையோடு ஒருவனே தேவன் என்னும் கொள்கையை விளக்கி மக்களிடையே சொற்பொழிவாற்றினார். இக் கொள்கையை அடிப்படையாகக் கொண்டு 1830ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 23ஆம் நாள் 'பிரம்ம சமாஜம்' என்னும் நிறுவனத்தைத் தொடங்கினார்; ஒருவனே தேவன் என்னும் வழிபாட்டுப் பாடல்களை இயற்றினார்.

## புலமையும் பணியும்

அடிமைப்பட்டுக் கிடந்த இந் நாட்டில் தேசிய உணர்ச்சி யூட்டும் ஏடுகளைத் தோற்றுவித்து, தேசிய இதழ்களின் தந்தை என்று போற்றப் பெற்றார். பார்சி மொழியிலும் வங்காளி மொழியிலும் கிழமை இதழ்களை நடத்தினார். அன்றைய அரசு கொணர்ந்த 'இதழ்கள் கட்டுப்பாட்டுச் சட்டம்' இராம் மோகனரின் இடையறாத முயற்சியினால் ஓரளவு தளர்ந்தது.

## கல்வியில் புது நோக்கு

பழங்கதைகள் பேசுவதை விடுத்து, உலகத்தோடு ஒட்டிச் செல்லும் வகையில் பாடத் திட்டங்களை வகுக்க வேண்டும் என்று இராம்மோகன் வலியுறுத்தினார். ஆங்கிலம் உலக மொழியாக வளர்வதை அறிந்து அம் மொழிவழியாக இந்தியர் உலகைப் பார்த்து உயரவேண்டும் என எண்ணினார். இந்தியர் ஆங்கிலம் கற்க ஏற்பாடுசெய்யுமாறு கேட்ட இராம்மோகனுக்கு மெக்காலே பெரிதும் துணையாக இருந்தார். 1835-ல் அரசப் பிரதிநிதி பென்டிங்கு பிரபு ஆங்கிலம் கற்பதற்கு வழிவகுத்தார்.

## இங்கிலாந்துப் பயணம்

நெடுநாள்களாக இங்கிலாந்து செல்ல எண்ணிய இராஜாராம் அவர்களுக்குத் தில்லி பாதுஷா பெரிதும் உதவினார். ஆங்கில அரசினர் பாதுஷாவின் பல அதிகாரங்களைப் பறித்துக்கொண்டனர். அதனை எதிர்த்து முறையீடு செய்ய இராம்மோகனரை இங்கிலாந்து செல்லுமாறு தில்லி பாதுஷா கேட்டுக்கொண்டார். இராம்மோகனரிடம் அன்பும் மதிப்பும் கொண்ட தில்லி பாதுஷா மோகனருக்கு இராஜா என்னும் விருது தந்து பாராட்டினார்.

1830ஆம் ஆண்டு இராம்மோகன் இரு நண்பர்களுடன் இங்கிலாந்திற்குக் கப்பல் ஏறினார்; அடுத்த 1831ஆம் ஆண்டு லிவர்ப்பூல் போய்ச் சேர்ந்தார். ஆங்கிலத்தில் மிகச் சிறந்த எழுத்தாளரான வில்லியம் ரங்கோ என்பவர் நோய்வாய்ப்பட்ட நிலையிலும் இராம்மோகனரைக் காண வந்தார். இங்கிலாந்து அரசரின் முடிசூட்டு விழாவில் இராம்மோகன் அவர்களுக்குச் சிறப்பிடம் தரப்பட்டது. 1832-ல் பிரெஞ்சு நாட்டிலும் அவருக்குச் சிறந்த வரவேற்பு அளிக்கப்பட்டது.

## மறைவு

இங்கிலாந்து திரும்பிய இராம்மோகன் தாம் குடியிருந்த பிரிஸ்டல் நகரத்தை அடுத்த ஸ்டேவல்டன் குரோவ் என்னும்

அழகிய இடத்தில் 1833ஆம் ஆண்டு செப்டம்பர் 27ஆம் நாள் இயற்கை எய்தினார். தாம் இறந்தபின் தம் உடலைக் கிறித்தவ முறையில் அடக்கம் செய்யக்கூடாதெனவும், கிறித்தவர் கல்லறைப் பகுதியில் அடக்கம் செய்யக்கூடாதெனவும் கேட்டுக்கொண்டபடியே அவர் உடல் அடக்கம் செய்யப் பட்டது.

தேவேந்திரநாத தாகூர் ஒரு முறை இங்கிலாந்து சென்ற போது இராம்மோகன் மறைந்த இடத்தில் அழகிய கல்லறை ஒன்றைக் கட்டினார்.

# 4. தயானந்த அடிகள்

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைபபகுதியில் பாரத நாடு மூடப் பழக்கவழக்கங்களில் மூழ்கிக் கிடந்தது; மக்கள் தம் சொந்த மதங்களை விட்டு, வந்தேறிய பிற மதங்களைக் கூட்டம்கூட்டமாகத் தழுவினர். போலிச் சாமியார்களும் பொல்லாத துறவிகளும் நாட்டில் எங்கும் நடமாடிக் கொண் டிருந்தார்கள். உருவ வழிபாடுகள், ஒழுக்கக்கேடுகள், கல்லாமை, கைம்பெண் கொடுமை, பொய் பேசுதல், தீயொழுக்கம் என எங்கும் பிழையான நெறிகள் பின்பற்றப் பட்டன. இவற்றிலிருந்து பாரதத்தைக் காக்கவும், அன்னிய மதத்துக்கு மாறுவதைத் தடுக்கவும், ஒழுக்கத்தை நிலை நாட்டவும், வேத நெறியை நிலைநிறுத்தவும் தோன்றியவரே மாமுனிவர் தயானந்த சரசுவதி ஆவார்.

## பிறப்பும் இளமையும்

குசராத் மாநிலத்தில் கத்தியவார் என்னும் பகுதியில் மோர்வி ஒரு சிறு நாடு; அதில் டங்காரா என்னும் சிற்றூரில் வாழ்ந்து வந்த சிவபக்தரான கிர்சன்ஜிக்கு மகனாக 1824ஆம் ஆண்டு பிறந்தவர் தயானந்தர். அவரது இளமைப் பெயர் மூலசங்கரர். அவருக்குப்பின் இரண்டு தம்பியரும் இரண்டு தங்கையரும் பிறந்தனர். மூத்த மகன் ஆதலால் மிக்க அக்கறையுடனும் பொறுப்புடனும் பெற்றோர் அவரை வளர்த்து வந்தனர். நாட்டைத் திருத்தும் ஒரு நல்லவரை வளர்க்கிறோம் என்னும் உணர்வு அப்போது அவர்களுக்கு இல்லை. ஐந்தாண்டு முடிவதற்குள்ளேயே தயானந்தர் வடமொழியை நன்கு கற் றறிந்து கொண்டார்; கோயில்களில் இறைவனைப்பற்றிச் சொற் பொழிவுகள் நடக்கும் போதெல்லாம் தயானந்தரையும் அவர் தந்தையார் அழைத்துச் செல்வார். தம்மைப்போல அவரும் சிறந்த சிவபக்தராக வேண்டும் என்று அவர் விரும்பினார். வடமொழி, வேதம், தருக்கம் ஆகியவற்றில் பெரும் புலமையை

மிக விரைவில் பெற்றார் தயானந்தர். எட்டாம் ஆண்டில் அவருக்கு உபநயனம் செய்யப்பெற்றது. காயத்திரி மந்திரம் முதலியன அவருக்குக் கற்பிக்கப்பட்டன. தாயாரின் வேண்டு கோளையும் மீறி அவரை விரதங்கள் இருக்கச் செய்தார் தந்தை கர்சன் ஜி.

## நினைவினில் நின்ற இரு நிகழ்ச்சிகள்

தயானந்தருக்குப் பதின்மூன்று வயதானபோது, சிவராத்திரி நாளில் அவரைக் கர்சன்ஜி அருகிலிருந்த சடேசுவரர் ஆலயத் திற்கு அழைத்துச் சென்றார். இரவெல்லாம் கண்விழித்து உண்ணாது விரதமிருந்தால் இறையருள் பெறலாம் எனப் பட்டது. தயானந்தரும் ஆர்வத்துடன் இமைகொட்டாமல் விழித்திருந்தார். நள்ளிரவு நெருங்கும்போது உடனிருந்த அனைவரும் உறங்கிவிட்டனர்; கர்சன்ஜியும் படுத்துவிட்டார். உறுதி படைத்த தயானந்தர் அங்கிருந்த சிவலிங்கத்தை வழி யட்டுக்கொண்டிருந்தார்.

அந்த நேரத்தில் எங்கிருந்தோ சில எலிகள் வந்தன; இறைவனுக்கு வைத்திருந்த படையல்களை அவை உண்டன. பின்னர்ச் சிவலிங்கத்தின்மீது ஏறி விளையாடின. அவற்றின் 'சடுகுடு' ஆட்டத்தைக் கண்டு வியந்த தயானந்தர் எல்லாம் வல்ல இறைவனா? வெறும் கற்சிலையா? என்று தம்மைத்தாமே கேட்க ஆரம்பித்தார்.

தந்தையை எழுப்பிக் கேட்டபோது அவரால் தக்க விடை தர முடியவில்லை. விக்கிரகத்தைச் சிவபெருமானாகக் கொள் வதில் நம்பிக்கை இழந்தார் தயானந்தர்; விரதத்தாலும் பூசை செய்வதாலும் நன்மையில்லை என்னும் முடிவுக்கு வந்தார். வீட்டிற்குத் திரும்பிய தயானந்தர் விரதத்தைக் கைவிட்டு உணவருந்தி உறங்கிவிட்டார். தந்தை காலையில் இதுபற்றிக் கண்டித்தபோது, 'கல்லுக்காக நான் ஏன் பட்டினி கிடக்க வேண்டும்?' என்று பதிலுரைத்தார்.

சில ஆண்டுகள் கழித்து அவருடைய தங்கை இறந்து போனார். வசதிகள் பல இருந்தும் அந்த இறப்பைத் தடுக்க முடியவில்லை. 'பிறந்தோர் அனைவரும் இறப்பது உறுதி. ஒரு நாள் நானும் இறக்கவேண்டி வரும். சாவைத் தவிர்க்க ஒரே வழி முத்தி யடைவதே' என்னும் உண்மையை அவர் இதன் மூலம் உணர்ந்தார். அன்றுதொட்டு முத்தி நெறி நாடி நின்றார்.

## துறவறம்

வடமொழி இலக்கணம் பயிலுதற்குக் காசி செல்ல விரும்பினார் தயானந்தர்; ஆனால் பெற்றோர் அதற்கு உடன்படாது பத்துக் கிலோமீட்டர் தூரத்திலிருந்த ஒரு பண்டிதரிடம் இலக்கணம் கற்க ஏற்பாடு செய்தனர். தயானந்தர் உள்ளம் எப்போதும் துறவுபற்றியும் முத்திபற்றியும் சிந்தித்துக் கொண்டிருந்தது. வெளிப்படையாக இதுபற்றிப் பண்டிதரிடம் பேசினார்; இச் செய்தி தந்தைக்கு எட்டியவுடன் அவருக்குத் திருமணம் முடிக்கக் கருதினார். தயானந்தர் திருமணம் செய்து கொள்ள மறுத்ததை அவர்கள் பொருட்படுத்தவில்லை. இதனையறிந்த தயானந்தர் 1843ஆம் ஆண்டு வீட்டைவிட்டு வெளியேறினார். அப்போது ஓர் உண்மையான யோகியைக் காணவேண்டும் என்பதே அவரது நோக்கமாக இருந்தது. வழியில் கண்ட யோகியருள் சிலர், 'உன் ஆடை அணிகளைக் கொடுத்தால் உனக்கு முத்தி கிடைக்கும்' என்று கூறி; அவற்றைப் பறித்துக்கொண்டனர். போலி யோகியரின் தன்மை உணர்ந்த தயானந்தர், ஆமதாபாத்திலிருந்து பதின்மூன்று கிலோமீட்டர் தொலைவிலிருக்கும் சைலா கிராமத்தில் வாழ்ந்த **லாலாபகத்** என்ற சாதுவைச் சார்ந்தார். தயானந்தர் அவரிடம் பிரமசரிய தீட்சை பெற்றார். 'சுத்த சைதன்யர்' என்னும் பெயரைப் பெற்றுக் காவி உடை அணிந்து கொண்டார்.

பின்னர், சைலாவிலிருந்து கோடகங்கராவிற்குச் சென்றார். துறவிகள் பலர் அங்கிருந்தனர். ஆனால் அவர்கள் ஒழுக்கம் அற்றவர்களாக இருந்ததனால் சித்திபூர் என்னும் இடத்திற்குச் சென்றார். அந்தக் காலத்தில் அவர் பட்டாடையை நீக்கிவிட்டு எளிய ஆடை உடுத்த ஆரம்பித்தார். அவர் தந்தை அனுப்பிய குதிரை வீரர்கள் அவரைத் தேடிக் கண்டுபிடித்து அழைத்துச் சென்றனர்; ஆனால் அவர் பாதி வழியில் அவர்களை ஏமாற்றிவிட்டுப் பரோடாவிற்குச் சென்றுவிட்டார். தந்தை கர்சன்ஜீ அதனையறிந்து மிகவும் வருத்தமுற்றார்.

## தயானந்த சரசுவதி

தயானந்தர் பின்னர்ப் பிரமானந்தர், சச்சிதானந்த பரமஹம்சர் முதலான யோகியர் பலருடன் கலந்துரையாடி யோக நெறிகளை அறிந்து, சாணோத் என்னும் இடம் சென்றடைந்தார். அங்கு, சிருங்கேரி மடத்திலிருந்து துவாரகைக்குச் சென்று கொண்டிருந்த பூரணானந்த சரசுவதி என்பவரைச் சந்தித்தார். அதுவரை பிரமசரிய விரதம் இருந்த தயானந்தர் சந்நியாசம்

பெற அவரை நாடினார். அங்கே மூன்று நாள் கழித்துப் பூரணானந்த சரசுவதி அவருக்குச் சந்நியாச தீட்சை தந்ததோடு 'தயானந்த சரசுவதி' என்னும் பெயரையும் சூட்டினார்.

இவ்வாறு, மூலசங்கரர் என்னும் இயற்பெயர் பெற்று, 'சுத்த சைதன்யர்' என்னும் பிரமசரியப் பெயர் அடைந்து, இறுதியில் 'தயானந்த சரசுவதி' என்னும் 'தீட்சாநாமம்' பெற்றார்.

## இமயத்தில்...

தயானந்தர் யோகப் பயிற்சியில் சிறப்புடைய வியாஸ் ஆசிரமம் சென்றார்; அங்கிருந்து வடமொழி இலக்கணம் பயிலச் சின்னூர் அடைந்தார். அதன் பின்னர் மலையடியில் சில நாள்கள் இருந்தார். முப்பத்திரண்டு வயதடைந்த தயானந்தர் அரித்துவாரம், ரிஷிகேசம், தேரி, ஸ்ரீநகர் முதலான பல இடங்களில் அலைந்தார். தக்க வழிகாட்டியாகச் சிறந்த குருநாதர் ஒருவரை அவரால் பெற இயலவில்லை. இமய மலையின் கடுங்குளிரையும் கொடும்பனியையும் சிறிதும் பொருட்படுத்தாமல் பன்னாள் கழித்தார். வழி தெரியாமல் பல இன்னல்களுக்கு ஆட்பட்டு இறுதியாக ஓதிமடம் வந்தடைந்தார். அங்கிருந்த மடத்தின் தலைவரான மகந்து அவரைத் தம் சீடராகும்படியும் அதனால் மதிப்பும் செல்வமும் கிடைக்கும் என்றும் கூறினார். 'இந்த மடத்தைக் காட்டிலும் செல்வச் சிறப்பு மிக்கவர் என் தந்தை; அதனையே உதறிவிட்டு ஞான குருவை நாடி நான் வந்திருக்கிறேன். ஞானம், சித்தி, முத்தி இவற்றையே நான் விரும்புகிறேன். இதற்காகவே பொன்னையும் பொருளையும் துறந்து வந்திருக்கிறேன்' என்று பதிலளித்தார் தயானந்தர். அதற்குப் பின்னர்ப் பத்ரிநாத் பயணமானார்.

## குருநாதர்

தயானந்தர் தம் முப்பத்தாறாம் வயதில் ஞானகுருவைக் கண்டறிந்தார். அவர்தாம் மதுராவில் இருந்த சுவாமி விரஜானந்த சரசுவதி. 1779ஆம் ஆண்டில் பஞ்சாப் மாநிலத்தில் தோன்றிய விரஜானந்தர் கண்ணில்லாத பெருஞானி; அறிவுக் கொழுந்து; தெய்வக் கனல்; வேதங்களை முற்றக் கற்றவர்; நியம நிட்டைகளைத் தவறாமல் நிகழ்த்துபவர். அவரை அடைந்த தயானந்தர் அவர்தம் சீடரானார். எண்பத்தொரு வயதானவரும் கண்டிப்பு மிக்கவரும் பார்வையிழந்தவருமான விரஜானந்தரின் துணையால் அவர் வேதம், வடமொழி முதலானவற்றில் மேலும் தேர்ச்சியடைந்தார்.

தயானந்தர் செய்த சிறு தவறொன்றைக் கண்டு சினமுற்ற விரஜானந்தர் அவரை அடித்துவிட்டார். ஆனால், தயானந்தரோ தமக்காக வருந்தவில்லை; குருவின் கைகள் மிகவும் வலிக்குமே என்று வருத்தம் கொண்டார். இவ்வாறாகக் குருவிடம் பயின்றபோது பல மனமுருக்கும் செயல்கள் நிகழ்ந்தன. குரு விரஜானந்த சுவாமிகளும் தயானந்தர்பால் மிக்க அன்பு கொண்டவராய் அவருக்கு வடமொழி, வேத தருமம் முதலானவற்றை நன்கு கற்பித்தார்.

பாசமும் நேசமும் காட்டிய குருவுடன் இரண்டரை ஆண்டுக் காலம் பழகிய தயானந்தர் கல்வி முடிந்து பிரிய நேர்ந்தது. தமது தகுதியையும் நிலையையும் உணர்ந்து அனைத்தையும் கற்பித்த குருவுக்கு அவர் விரும்பும் இலவங்கத்தைக் குரு காணிக்கையாக வைத்து வணங்கி நின்றார். அதனைப் பெற்ற விரஜானந்தர், 'நீடு வாழ்க. துறவியாகிய உன்னிடம் காணிக்கையாகப் பணத்தையோ பொருளையோ நான் விரும்பவில்லை. வேதக் கருத்துகளை எங்கும் பரப்பு; பொய்யான நூல்களை எதிர்த்துப் பேசு; உண்மை வேத நெறிகளையே எங்கும் எடுத்துரைப்பேன் என்று சபதம் செய். இதனையே நான் குரு காணிக்கையாகக் கேட்கிறேன்' என்றார். தயானந்தரும் அத்தகைய உறுதி எடுத்துக்கொண்டு, குருவின் நல்வாழ்த்துப் பெற்றுத் தம் திருத்தொண்டினை ஆற்றப் புறப்பட்டார்.

## ஒரு நாள் செயல்கள்

தயானந்தர் நாள்தோறும் காலை நான்கு மணிக்கே எழுந்து வேகமாக நடைபயில்வார்; நீராடி அரைமணி நேரம் தியானம் செய்வார்; காலை யுணவாகப் பால் பருகுவார்; பின் கட்டுரைகள, நூல்கள் எழுதுவதில் அக்கறை காட்டுவார்; தம்மைத் தேடி வருவோரிடம் அன்புடன் உரையாடுவார்; மீண்டும் நீராடித் தனியறையில் தியானம் செய்வார்; பகல் பன்னிரண்டு மணிக்கு உணவு அருந்துவார். கொஞ்ச நேரம் இளைபபாறிய பின்னர் வேதம் முதலானவற்றினை ஆராய்ச்சி செய்வார். மாலை நேரங்களில் உலவி வருவார்; மீண்டும் ஒரு முறை தியானம் செய்வார்; முன்னிரவுகளில் கருத்தாழமிக்க சொற்பொழிவுகள் ஆற்றுவார்; இரவு பத்து மணியளவில் சிறிது பால் அருந்திவிட்டு உறங்கச் செல்வார். இவ்வாறு தம் ஒரு நாள் வாழ்க்கையைச் செம்மையாக வகுத்துக்கொண்டு அருட்பணி புரிந்து வந்தார் தயானந்தர்.

## பாகவத எதிர்ப்பு

ஒரு முறை குவாலியர் அரசர் பாகவதச் சொற்பொழிவாற்ற நூற்றெட்டுப் பண்டிதர்களை வரவழைத்திருந்தார். அவர்கள் பாகவதத்தைச் சொற்பொழிவாற்றியபோது, 'பொய் சொல்லும் இப் புராணங்களைப் படிப்பதால் இடர்ப்பாடுகள் விளையும்' என்றார் தயானந்தர். அவர் கூற்றைப் புறக்கணித்ததால் முதல் நாள் இராணி நோய்வாய்ப்பட்டார்; அடுத்த நாள் ஒரு சாவு நிகழ்ந்தது; இறுதியில் எங்கும் வாந்திபேதி நோய் வந்து ஆயிரக் கணக்கானோர் மடிந்தனர். 'தயானந்தரின் அறிவுரையைக் கேட்டிருந்தால் இந்நிலை வந்திராது' என்றே பலரும் கூறினர்.

## அஞ்சாமை

அச்சமென்பதை அறியாதவர் தயானந்தர். அவர் கிருஷ்ண நகரில் சுகராசர் கோயிலில் இருந்தபோது இந்துக்களின் மூடப் பழக்கவழக்கங்களைச் சாடியும் பாகவதப் பொய்களை எதிர்த்தும் கண்டனம் செய்து பேசினார். வைணவர் சிலரின் தூண்டுதலால் அரசன் அவரை உடனே ஊரைவிட்டுச் செல்லும்படி ஆணையிட்டான். தயானந்தர் அப்பர் அடி களைப் போல் 'நாமார்க்கும் குடியல்லோம், உம் ஆணைக்குக் கீழ்ப்படியோம்; இங்கு இருக்கவோ போகவோ எமக்கு உரிமை யுண்டு' என்று கூறிப் பல நாள்கள் அங்கேயே இருந்தார்.

அவர், 1866ஆம் ஆண்டு கிறித்தவருடனும் இசுலாமி யருடனும் வாதாடி வேத நெறியே சிறந்தது என்று உணர்த்தி னார். கிறித்தவ சமயத்தைக் கண்டித்தபோது ஆங்கிலேயர் ஒருவர், 'இவ்வாறு பேசினால் உமக்குச் சிறை கிட்டும்' என்றார். 'சிறைக்கு நாம் அஞ்சவில்லை; யாம் உண்மையே கூறுவோம், பொய்யை எதிர்ப்போம். வேத நெறியே உயர்ந்தது; உண்மை யானது; பிற சமய நெறிகளைக் கண்டிப்பது எம் உரிமை, கடமை. அதற்காகத் தூக்குமேடை ஏறவும் தயங்கோம்' என்று அஞ்சாது கூறினார்.

## உடல் வன்மை

உள்ளத் திண்மையைப் போலவே உடல்வன்மை உடைய வராகவும் திகழ்ந்தார் தயானந்தர். சீடனாக இருந்த ஓங்கார தாஸ் என்ற பயில்வான் அவரைச் சோதிக்கக் கருதினான். பலமுறை வேண்டி அவர் கால்களைப் பிடிக்க அனுமதி பெற்றான்; தன் பலங்கொண்ட மட்டும் அவரது கால்களை அவன் அழுத்தினான்; ஆனால் அவன் கைகள் அவர்

உடலில் அழுந்தவே இல்லை. சோர்ந்து போன அவன் அவரது உடல் வன்மையைப் பாராட்டினான்.

ஒரு முறை இரண்டு முரடர்கள் கங்கையாற்றங்கரையில் தியானம் செய்து கொண்டிருந்த தயானந்தரைக் கொல்ல நினைத்துக் கை கால்களோடு நெருக்கித் தூக்கினர். அவரோ அவர்களோடு சேர்ந்து கங்கையில் குதித்துவிட்டார். திக்கித் திணறி அவர்கள் நீருக்குமேல் வந்தபோது அவரைக் காண முடியவில்லை. அவரோ பல மணிநேரம் நீருக்குள் மூழ்கியிருந்து அவர்கள் சென்ற பின்னரே வெளியில் வந்தார். இது தயானந்தர் யோக பலத்தால் பெற்ற சாதனை.

கர்ணவாசம் என்னும் ஊரில் தம்மைக் கொல்லக் கரன்சிங் என்பவன் வாளை ஓங்கியபோது, தயானந்தர் அதனைப் பறித்து இரு துண்டாக்கித் தூக்கி எறிந்தார். இவ்வாறு அவரது உடல் வன்மையை உணர்த்தும் நிகழ்ச்சிகள் பல உண்டு.

## ஆன்மாவும் ஆண்டவனும்

சத்ரசிங் என்பவன் தயானந்தரிடம் 'நான் ஆன்மா; நானும் கடவுளும் ஒன்று; எல்லாம் பிரமம்' என்றான். அவனுக்குப் பாடம் புகட்ட நினைத்த தயானந்தர் அவன் கன்னத்தில் பலமாக அறைந்தார். அவன் சினம் கொண்டான். உடனே தயானந்தர், 'நீயே நான், நானே நீ என்றீர்; பிரமம் பிரமத்தை அடித்தது. ஏன் வருந்துகிறீர்' என்றார். அவன் உண்மை உணர்ந்து, 'கடவுள் வேறு, நான் வேறு; அவன் அருளால் எல்லாம் இருக்கின்றன' என்று கூறி, அவர்வழிச் சென்றான்.

கிருஷ்ணானந்தர் ஒரு துறவி; அவர் தயானந்தரிடம் இறைவனைப்பற்றி வாதாடினார். 'அறநெறி கெட்டுத் தீநெறி தலைதூக்கினால் நான் தோன்றி அறத்தை நிலைநிறுத்துவேன் என்று கண்ணன் கீதையில் கூறுகிறான்; அஃது உண்மை! அதனால் அவதாரம் உண்மையாகும்; அவதாரம் உண்மையெனில் உருவங்களும் உண்மையே' என்றார். தயானந்தர், 'கடவுள் பிறப்பதில்லை, இறப்பதில்லை. ஒப்பற்ற ஒருவர் எவ்வாறு மற்றவர் வயிற்றில் பிறக்க முடியும். கடவுள் ஒன்றே. அதற்குப் பெயரோ, உருவமோ இல்லை. அதனைக் கல்லிலோ செம்பிலோ காண இயலாது' என்று அறிவுறுத்தினார்.

## பாவமன்னிப்பு

ஒரு கிறித்தவர் 'பாவத்திற்கு மன்னிப்பு உண்டா?' என்று கேட்டபோது தயானந்தர் தெளிவாகப் பதில் கூறினார். 'ஒருவர் செய்த பாவத்திற்கு மன்னிப்பில்லை; அதன் பலனைப் பாவம் செய்தவர் நுகர்ந்தே ஆகவேண்டும். தீமை செய்தவன் துன்பத்திலிருந்து தப்பமுடியாது. தீங்கில்லாத வழியில் நடந்தால் துன்பத்திலிருந்து தப்பலாம்' என்று எடுத்துரைத்தார்.

## வாதத்திறமை

தயானந்தர் காசி நகரில் இருந்தபோது சமய வாதங்கள் நிகழ்ந்தன. பண்டிதர்கள் பலர் விஷுத்தானந்த பால சரசுவதி என்பவர் தலைமையில் கேள்விக் கணைகளைத் தொடுத்தனர். அனைத்துக் கேள்விகளுக்கும் தயானந்தர் பொறுமையாகவும் விளக்கமாகவும் அனைவரும் ஏற்கத்தக்க வகையில் விடை பகர்ந்தார். தயானந்தர் அன்று நான்கு மணிநேர வாதம் செய்து வென்றாலும், அக் காசிப் பண்டிதர்களின் சூழ்ச்சியினால் அடுத்த நாள் இதழ்களில் அவர் தோற்றதாகச் செய்தி வெளியிடப்பட்டது.

## வேத பாடசாலைகள்

'பழம்பெரு வேதங்கள் மட்டுமே நாட்டுக்கு நலன் விளைவிக்கும்; புராணங்கள், பாகவதம், பொய்ம்மைத் தெய்வக் கதைகள் அனைத்தும் தீங்கினைத் தரும்; இராமாயண பாரதங் களில் இடைச்செருகல்கள் மிகுதியாக இருக்கின்றன' என்று தயானந்தர் மக்களுக்கு எடுத்துரைத்தார்.

'நெற்றிக்கு இட்டுக்கொள்வது சரியில்லை; அதைவிடக் காயத்திரி மந்திரம் கூறினால் பயனுண்டு' என்பது அவர்தம் கருத்து.

மேலைநாட்டு மொழியும் பண்பாடும் இந்தியாவைக் கெடுத்து வந்தபோது தயானந்தர், 'நாடு ஆங்கில மோகத்தில் தடுமாறுகிறது; வடமொழிக் கல்லூரிகளை நிலைநாட்டி, வேத நெறியைப் பரப்பத் தொண்டாற்ற வேண்டும்' என்று கூறினார்.

உயிர்க்கொலையை அவர் பெரிதும் கண்டித்தார். 'பசுக் கொலை கூடாது; பலிகளை நிறுத்தவேண்டும்' என்று அவர் அடிக்கடி கூறுவதுண்டு.

மக்கட் பிரிவுகளைப்பற்றி அவர் உறுதியான கொள்கைகளைக் கொண்டிருந்தார். 'வேதத்தில் சாதி வேறுபாடு இல்லை; பண்புகளாலும் செயல்களாலுமே ஒருவன் மேன்மை அடைகிறான்' என்று அவர் கூறினார். இதுபற்றி அவர் குறிப்பிடும்போது, 'சமையல்காரன் ஒருவன்; அழுக்காகவே இருப்பவன்; நீராடாதவன்; சந்தி ஜபங்கள் செய்யாதவன்; புகையிலை போடுபவன்; இழிந்த நடத்தை உடையவன்; இத்தகைய பண்புடைய அவன் பிராமணனுக்குப் பிறந்ததனால் பிராமணன் ஆக மாட்டான்; அறிவாலும் நல்லொழுக்கத்தாலுமே ஒருவன் அந்தணன் ஆவான்' என்று விளக்கமாகக் கூறியுள்ளார்.

இவ்வாறு பல உண்மைகளை மக்களுக்கு அறிவிக்க வேண்டும் என்று தயானந்தர் கருதினார். அதன் முதற்படியாக 1870ஆம் ஆண்டு மிர்ஜாபூரில் ஒரு வேத பாடசாலை தொடங்கினார். பின்னர், காசிகஞ்ச் என்னும் இடத்திலும் சலேசர் என்னும் இடத்திலும் வேத பாடசாலைகளை நிறுவினார். படிக்க வந்த மாணவர்களுக்கு இலவச உணவும் உறைவிடமும் தர வசதிகள் செய்தார்.

## ஆரிய சமாஜம்

தயானந்தர் 1875ஆம் ஆண்டு ஏப்பிரல் திங்கள் பத்தாம் நாள் பம்பாயில் 'ஆரிய சமாஜம்' என்னும் ஓர் இயக்கத்தை உருவாக்கினார்.

(1) இறைவனே அனைத்திற்கும் முதற் காரணம்;

(2) இறைவன் அறிவின்ப வடிவானவன்; உருவமற்றவன்; அவனை மட்டுமே வணங்கவேண்டும்;

(3) வேதம் மட்டுமே உண்மை அறிவு நூல்;

(4) உண்மையை ஏற்றுப் பொய்யைத் தவிர்க்க வேண்டும்;

(5) அறநெறியில் சரி எது என்பதுணர்ந்து செயல் புரிய வேண்டும்;

(6) பிறர்க்கு உதவி செய்தல் வேண்டும்;

(7) அனைவரிடமும் அன்பும் அறமும் ஒழுக்கமும் இருத்தல் வேண்டும்;

(8) அறிவை வளர்க்க வேண்டும்;

(9) சுயநலம் கூடாது; பிறர்நலமே நாடுதல் வேண்டும்;

(10) சமுதாய நன்மைக்காகச் சட்டங்கட்கு உட்பட்டு நடத்தல் வேண்டும்.

இந்தக் கொள்கைகளின் அடிப்படையில் ஆரிய சமாஜம் நடைபெற்று வந்தது.

நாட்டின் பல பகுதிகளிலும் ஆரிய சமாஜத்தின் கிளைகள் தோன்றின; கல்விப்பணி, நாட்டுத் தொண்டு, சமுதாய சேவை எனப் பல வழிகளில் சமாஜம் சிறந்த தொண்டாற்றியது.

## நூல் வெளியீடு

அலிகாரில் 1875ஆம் ஆண்டு அரசர் ஜெய்கிஷன் தாஸ் என்பவருடன் தங்கியிருந்தபோது அவர் வேண்டுகோளின்படி தாம் சொற்பொழிவுகளில் கூறியவற்றைத் தொகுத்துக் கட்டுரைகளாக்கிச் 'சத்தியார்த்த பிரகாசம்' என்னும் அரிய 'உண்மைப் பொருள் விளக்க' நூலை எழுதினார். பின்னர், பஞ்சமகா யக்ஞவிதி முதலான பத்தொன்பது நூல்களை அவர் இந்தி, வடமொழிகளில் படைத்துள்ளார்.

## சுவாமி சிரத்தானந்தர்

அவரைப் பின்பற்றியவர்களுள் தலைசிறந்தவர் சுவாமி சிரத்தானந்தர். அவர் ஆரிய சமாஜக் கொள்கைகளின் அடிப்படையில் காங்கிரி குருகுலத்தை உருவாக்கினார்; லாகூரில் தயானந்த வேத பாடசாலை தொடங்கினார்; சுபாவில் மேலும் ஒரு குருகுலம் உருவானது.

## இறுதி நாள்

சில அமைப்புகளுக்கு அவரைத் தலைவராக இருக்க வேண்டும் என்று தொண்டர்கள் கேட்டுக்கொண்டார்கள். ஆனால் அவரோ இறுதிவரை எந்தப் பிரிவிலும் தாம் தலைவராக இருக்க முடியாது என்று திட்டவட்டமாகக் கூறிவிட்டார்; தம் படத்தையும் ஆரிய சமாஜத்தில் வைக்க வேண்டா என்று குறிப்பிட்டார். புகழையும் பெயரையும் வேண்டாத உண்மைத் தொண்டு புரிந்தவர் தயானந்தர் என்பதனை இவை காட்டுகின்றன

1883ஆம் ஆண்டு ஜோத்பூரில் தயானந்தர் தமக்கு வரவேற்பளித்த அரசனின் பக்கத்தில் அவன் தேவி உட்கார்ந்திருந்ததைத் தவறு என்று கூறிக் கண்டித்தார். அதனால் சினமுற்ற

நன்னிஜான் என்னும் அவள், உயிருக்கு இறுதி தரும் பொருளைப் பாலில் கலந்து சமையல்காரன் மூலம் அவருக்கு அனுப்பினாள். அதனால் வயிற்றுவலி பெற்றுப் பெரிதும் துன்புற்றார் தயானந்தர். சமையல்காரன் தன் தவற்றை உணர்ந்து சொன்னபோது, தயானந்தர் பேரிரக்கமும் அருள் நோக்கமும் கொண்டு அவனை மன்னித்தார்.

நாடு, சமூகம் என என்றும் நினைத்துத் தொண்டாற்றிய அருள்மிகு தயானந்த அடிகளார் 1883ஆம் ஆண்டு அக்டோபர் முப்பதாம் நாள் தம் முடிவுக் காலத்தை அனைவருக்கும் அறிவுறுத்திவிட்டு மறைந்தார்.

# 5. அன்னி பெசன்ட் அம்மையார்

'யாதும் ஊரே யாவரும் கேளிர்'

என்னும் கொள்கையை நெஞ்சில் நிறுத்தி, மேலை நாட்டி லிருந்து இந்தியாவிற்கு வந்து அரசியல், சமுதாயப் பணியாற் றியவர் அன்னி பெசன்ட் அம்மையார் ஆவார். இந்திய மக்க ளின் விடுதலை இயக்கத்திலும் வாழ்க்கை மேம்பாட்டிலும் அக்கறை காட்டிய அவ்வம்மையார், மாதர் நல உயர்விலும் சமயச் சீர்திருத்தத்திலும் மூடப் பழக்கவழக்க ஒழிப்பிலும் ஈடுபாடு காட்டினார். பெசன்ட் அம்மையாரின் அயரா உழைப்பினால் மனித இனம் பெற்ற நலன்கள் பல. குறிப்பாக, இந்தியர்க்கு அம்மையார் ஆற்றிய தொண்டு என்றும் பாராட்டத் தக்கது.

## தோற்றம்

இங்கிலாந்து நாட்டில் இலண்டன் மாநகரில் வில்லியம் பேஜ் உட் (William Page Wood) என்பாருக்கும் எமிலி மோரிஸ் (Emily Morris) என்னும் அம்மையாருக்கும் மகளாக அன்னி பெசன்ட் 1847ஆம் ஆண்டு அக்டோபர் முதல்நாள் பிறந்தார். அவர் இயற்பெயர் அன்னி உட் (Annie Wood) என்பதே. மருத்துவத் தொழிலில் பணியாற்றிய நடுத்தரக் குடும்பத்தைச் சேர்ந்த தந்தையார், அன்னிக்கு ஐந்து வயதா யிருக்கும்போதே மறைந்தார். குடும்ப வருவாய் குறைந்ததனால் தாய் மிகவும் அரும்பாடுபட்டு அன்னியையும், பிற்காலத்தில் பெரும்புகழ் பெற்ற அவர் அண்ணன் என்றி உட்டையும் (Sir Henry Wood) வளர்த்தார். அவர்கள் முன்னோருள் பலர் உயர்பதவிகளை வகித்தவர்கள். மாத்யூ உட் என்பார் இலண்டன் மாநகரில் 'லார்டு மேயர்' (Lord Mayor) பதவியில் இருந்தவர்; இன்னொருவர் லார்டு சான்சலராகப் (Lord Chancellor) பணியாற்றியவர்.

அக்காலத்தில் சிறந்த எழுத்தாளராக விளங்கிய கேப்டன் மரியாட் (Captain Marryat) என்பவரின் உடன்பிறப்பான செல்வி மரியாட், அன்னியை வளர்ப்பதாகச் சொல்லித் தம் இல்லத்திற்கு அழைத்துச் சென்றார். அவர்களோடு தங்கி அன்னி பெரும்பயன் அடைந்தார்; ஆங்கிலம், ஃபிரெஞ்சு, ஜெர்மன் ஆகிய மொழிகளில் தேர்ச்சி பெற்றார். இசைக் கலையில் ஆர்வம் கொண்டு பயிற்சியும் பெற்றார். அன்னையின் அன்பான இசைவைப் பெற்று, செல்வி மரியாட்டுடன் பல நாடுகளைச் சுற்றிப் பார்த்தார். தம் பதினாறாம் வயதில் மீண்டும் அன்னையாரோடு சேர்ந்து வாழத் திரும்பினார்.

## திருமண வாழ்வு

1867ஆம் ஆண்டு திசம்பரில் அன்னி, ரெவரண்டு பிராங்க் பெசன்ட் என்னும் பாதிரியாரை மணந்துகொண்டார். தொடக்கத்தில் அன்னிக்கு இறைப்பற்றும் மத நம்பிக்கையும் மிகுதியாக இருந்ததனால் அவருடைய தாய் இத் திருமணத்திற்கு ஏற்பாடு செய்தார். ஆனால், தம் போக்கிலிருந்து சிறிதும் விட்டுக் கொடுக்காத இயல்பும் உறுதியும் கொண்டிருந்த அன்னிக்கு இத் திருமணம் பெருந் தடங்கலாகவே இருந்தது. அன்போ காதலோ சிறிதுமில்லாத திருமண வாழ்க்கை மிக விரைவிலேயே கசக்க ஆரம்பித்தது. அவர்கள் திருமண வாழ்வின் பயனாகத் திக்பி (Digby) என்ற மகனும், மாபல் (Mabel) என்ற மகளும் பிறந்தனர்.

ஒருமுறை மிகக் கடுமையான அம்மையும் கக்குவானும் குழந்தைகளைத் துன்புறுத்தின. எவ்வளவோ மருத்துவம் செய்தும் தெய்வத்தை வேண்டியும் உடல்நிலை சீரடையவில்லை. இந்த நிலையில் மனம் உடைந்த அன்னி பெசன்ட் 'கடவுளை வழிபடுவதால் எந்தப் பயனும் இல்லை' என்பதை உணர்ந்தார்.

'இந்தக் குழந்தையை ஏன் இப்படித் துன்புறுத்துகிறாய்? இவ்வளவு துன்பப்பட இந்தக் குழந்தை என்ன தவறு இழைத்தது? ஒரேயடியாகக் குழந்தையைக் கொன்றுவிட்டு அமைதியடையச் செய்யலாமே?...இறைவா, இதனைக் கொடுமைப் படுத்தாதே, நீயே எடுத்துக்கொள்!' என்று பலமுறை புலம்பினார்.

வழிபாட்டினால் பயன் விளையவில்லை; இறைவன் மீதே ஐயம் எழுந்தது. இதைத் தொடர்ந்து பாவ மன்னிப்பு என்பது

பற்றியும், நரபலி என்பதுபற்றியும் அவர் நினைத்துப் பார்த்தார். அவருடைய ஐயம் வளர்ந்தது. ஐயம் என்னும் அலைகடலின் நடுவே நம்பிக்கை என்னும் மரப் பலகையைப் பற்றியவாறு நிலை தடுமாறிக் கொண்டிருந்தார் அன்னி பெசன்ட். ஏழு மாதக் குழந்தையைக் கருணைமிக்க இறைவன் கொடுமைப் படுத்துவானா? இதற்கு விடை கிடைக்கவில்லை. பல பாதிரி மார்களைச் சந்தித்து விளக்கம் கேட்டார்; எவரும் ஐயம் அகற்றவில்லை.

கிறித்தவ மத நம்பிக்கை இழந்த பிறகு அன்பில்லாத பாதிரிக் கணவரோடு அவரால் இணைந்து வாழ இயலவில்லை. அதன் விளைவாக, 1873ஆம் ஆண்டு நீதிமன்றம் வாயிலாக அம்மையார் திருமண விலக்குப் பெற்றுத் தனி வாழ்க்கையைத் தொடங்கினார். ஸ்காட் தம்பதியினர் அன்னி பெசன்டுக்கும் அவர் அன்னையாருக்கும் அடைக்கலம் தந்தனர். இருப்பினும் அடுத்த ஆண்டில் அன்னி தம் அன்னையை இழந்தார். தாயின் மறைவிற்குப் பின்னர்க் கல்வியில் நாட்டம் செலுத்திய அன்னி பெசன்ட் 1879ஆம் ஆண்டில் 'மெட்ரிக்' தேர்வில் வெற்றி பெற்றார். பின்னர் 1888 வரை ஆசிரியப் பணி ஆற்றினார்.

### பெசன்டும் பிராட்லாவும்

1874ஆம் ஆண்டு அன்னி பெசன்ட் நாத்திக இயக்கம் ஒன்றை நடத்திவந்த பிராட்லா (Bradlaugh) என்பவரைச் சந்தித்தார். இச் சந்திப்பு அவர் வாழ்க்கையில் ஒரு திருப்பு முனையாக அமைந்தது. பெசன்டின் நாத்திக மனப்போக்கைத் தூண்டியவரும் வளர்த்தவரும் இவரே. 'நேஷனல் ரிபார்மர்' (National Reformer) என்னும் சீர்திருத்த இதழின் துணை ஆசிரியராக அன்னி பெசன்டைச் சேர்த்துக்கொண்டார் பிராட்லா. 'அஜாக்ஸ்' (Ajax) என்னும் புனைபெயரில் பெசன்ட் பல கட்டுரைகளை இவ்விதழில் தொடர்ந்து எழுதினார்.

பெசன்ட் அம்மையார் சிறந்த எழுத்தாளராகவும் எழுச்சி மிக்க பேச்சாளராகவும் மாறினார். 1875ஆம் ஆண்டு, 'ஒழுக்கத்தின் உண்மையான அடிப்படை' என்னும் தலைப்பில் அவர் பேசிய பேச்சு 70,000 படிகள் விற்பனை ஆயின.

மருத்துவர்கள் அன்னி பெசன்டின் உடல்நிலை சீர்கெட்டு வருவதாகக் கூறியதை அவர் பொருட்படுத்தவில்லை. அம்மையார் இதயநோய்க்குத் திறந்த வெளியில் தொடர்ந்து பேசுவதே சிறந்த மருந்து என்று கருதினார். நிறைய எழுதுவதற்கான

வாய்ப்பையும் சொற்பொழிவிற்கான சூழ்நிலைகளையும் உருவாக்கிக்கொண்டார்.

1877ஆம் ஆண்டில் மக்கள்தொகை குறித்த கருத்துகளை ஆராய்ந்தார். மால்தஸ் கொள்கைகளையும் நியோ-மால்தஸ் கொள்கைகளையும் (Neo-Malthusian) ஆய்ந்து பின்னதை ஏற்றுக்கொண்டார். மக்கள் தொகைக் குறைப்புக்குத் திருமண வயதை உயர்த்த வேண்டும் என்பது முன்னது; திருமண வயதை உயர்த்தாமல் குழந்தை பிறப்பதைக் கட்டுப்படுத்த வேண்டும் என்பது பின்னது. அன்னி பெசண்ட் மக்கள் தொகையைக் கட்டுப்படுத்துவது குறித்துப் பல நூல்கள் எழுதினார். அவை இலட்சக் கணக்கில் ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் விற்பனை ஆயின; பல மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டன.

பிராட்லாவோடு இவ்வாறு பல கொள்கைகளில் ஒன்றுபட்டிருந்து, நாத்திக இயக்கத்தில் அவருக்கு வலக்கரமாகத் திகழ்ந்தவர் அன்னி பெசண்ட் அம்மையார்.

'மதமோ, மடங்களோ மனிதர்க்கு நல்வாழ்வைத் தாரா. உடலுக்கு விடுதலை வாங்கித் தந்ததுபோல நாங்கள் ஆன்மாவிற்கும் விடுதலை தருவோம். மதத்திற்குப் பதிலாக அறிவியலை வழங்குவோம்; சொர்க்கத்திற்குப் பதிலாகப் பூமியில் சுகவாழ்வைத் தருவோம்; நம்பிக்கைக்குப் பதிலாக நல்லறிவைப் புகட்டுவோம்; அச்சத்திற்குப் பதிலாக அன்பைக் கொடுப்போம். இறைவனின் ஆணையினால் அன்று; மக்களின் தேவைக்காக, நல்லொழுக்கத்தை நிலைநாட்டுவோம்' என்றெல்லாம் அம்மையார் கிறித்தவ மதத்தைத் தாக்கி விரிவாக எழுதினார்.

### எழுத்துப் பணி

இந்தப் பருவத்தில் அம்மையார் எழுதிய நூல்கள் மிகப் பலவகையின. அவர் சில நூல்களை மொழிபெயர்த்தார். சிலவற்றைப் பதிப்பித்தார்; சிலவற்றைத் தாமே எழுதினார். பல பொருள்களைப்பற்றி அவர்தம் எழுத்துகள் அமைந்தன. 'ஒளி, நெருப்பு, ஒலி' என்பது ஒரு நூல்; 'திருமணம் நடக்கும் முறையும் நடக்கவேண்டிய முறையும்' என்பது மற்றொரு நூல். ஆப்கானிஸ்தான் போர்பற்றியும் எழுதினார்; அவர் எழுதிய 'தன் வரலாறு' அவருடைய எழுத்தாற்றலுக்குச் சிறந்த எடுத்துக் காட்டாக விளங்குவது.

### தொழிற்சங்கப் பணி

பின்னர், அன்னி பெசன்ட் சட்ட உரிமை இயக்கம் (Law and Liberty League) என்னும் அமைப்பில் உறுப்பின ரானார். அரசியல் காரணமாகச் சிறையில் வாடிய மக்களுக்குச் சட்ட உதவியையும், விடுதலைக்கான வழியையும் கொடுப் பதே இவ்வியக்கத்தின் பணி. இதற்காக 'லிங்க்' (Link) என்னும் சிறிய இதழை நடத்தினார். இயக்கமும் இதழும் நீண்ட நாள்கள் நிலைக்கவில்லை. ஆயினும், இதன் விளைவாக ஒரு தொழிற்சங்கத் தலைவர் ஆகும் தகுதியை அன்னி பெசன்ட் அம்மையார் பெற்றார். அவர் தீப்பெட்டித் தொழிற்சாலையில் பணிபுரிந்த பெண்களுக்கு உறுதியும் ஊக்கமும் கொடுத்து, அவர்களின் வேலைநிறுத்தத்திற்கு வெற்றியைத் தேடித் தந்தார். தொழிற்சங்கப் போராட்டங்களில் ஒரு முன்னோடி யாக அம்மையார் விளங்கினார்.

### சம உடைமைக் கொள்கை

அன்னி பெசன்ட் அம்மையாருக்குச் சம உடைமைக் கொள்கை என்னும் பொதுவறத்தில் மிகுந்த நம்பிக்கை உண்டு. அதன் வளர்ச்சியாக அவர் ஜார்ஜ் பெர்னார்ட் ஷா முதலானோரைப் பின்பற்றி 'ஃபேபியன் சோஷலிசம்' (Fabian Socialism)என்னும் அணியிற் சேர்ந்து சிறிது காலம் சிறப்புடன் பணியாற்றினார். பிராட்லாவிடமிருந்து இந்தக் கால எல்லை யில் அவர் பிரிய நேர்ந்தது. இந்தக் கொள்கையை அவர் ஏற்கவும் இல்லை.

### பிரமஞானக் கொள்கை

பிராட்லாவிடம் இருந்து பிரிந்த பெசன்ட் அம்மையார் 'பால் மால் கெசட்' (Pall Mall Gazette) இதழிலும், 'கார்னர்' (Corner) என்னும் சிறிய இதழிலும் கட்டுரைகள் எழுதிவந்தார். அப்பொழுது ஒரு நாள் பிளாவட்ஸ்கி அம்மையாரின் 'மறை பொருள் கொள்கை' (Secret Doctrine) என்னும் நூலொன்றைப் படிக்கும் வாய்ப்பு அவருக்குக் கிடைத்தது. அவர் வாழ்வில் மற்றொரு திருப்பத்திற்கு இந் நூல் காரணமாயிற்று. பொருள் முதல்வாத உலகின்கண் தம்மால் புரிந்துகொள்ள இயலாத வாழ்வோடு ஒட்டிய பல ஐயப்பாடுகள் அவர் மனத்தை அவ்வப்போது கிளறிவந்தன. பிளாவட்ஸ்கி அம்மையாரின் நூல்விளக்கம் அவருக்கு மகிழ்ச்சியைத் தந்தது. தாம் பின்பற்றிடவேண்டிய பாதை இதுவென அவர் உணர்ந்தார். அவரை உடனே சந்தித்துத் தம் உள்ள நிலையை எடுத்துக்

கூறி, அவர்தம் முதல் சீடராகவே ஆனார். பிளாவட்ஸ்கி அம்மையார் புத்த மதத்தின்பால் ஈடுபாடு கொண்டவர் என்பதனால் அவர் உருவாக்கிய 'பிரமஞான இயக்கம்' அம் மதக் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டதாக விளங்கியது.

## இந்தியா வருகை

1893ஆம் ஆண்டு நவம்பர் பதினாறாம் நாள் அன்னி பெசன்ட் அம்மையார் இந்தியாவின் தென்கோடியான தூத்துக்குடி வந்து சேர்ந்தார். பல இடங்களில் சொற்பொழிவாற்றி 1895-ல் காசி மாநகரில் தங்கினார். அங்குப் பொதுப் பணியில் தீவிரமாக இறங்கினார். பகவத்கீதை அவரைக் கவர்ந்தது. அதனை ஆங்கிலத்தில் மொழிபெயர்த் தெழுதினார். 1898ஆம் ஆண்டு 'மத்திய இந்துக் கல்லூரி' என்னும் பெயரில் காசியில் ஒரு கல்லூரியையும், 1904ஆம் ஆண்டு 'மத்திய இந்து உயர்பள்ளி' என்னும் பெயரில் ஒரு பள்ளியையும் தொடங்கினார்.

## பிரமஞான இயக்கத் தலைவி

உருசிய நாட்டு அம்மையாராகிய பிளாவட்ஸ்கியும் அமெரிக்க நாட்டுத் தொண்டர் கர்னல் எச். எஸ். ஆல்காட்டும் 1875ஆம் ஆண்டு நியூயார்க் நகரில் பிரமஞானம்பற்றிய கருத்துகளைத் தெரிவித்தனர். அவர்கள் 1879ஆம் ஆண்டு இந்தியா வந்தனர். 1883-ல் சென்னை அடையாற்றில் தங்கிப் பிரமஞான சபை (Theosophical Society) அமைத்தனர். 1889ஆம் ஆண்டு பிரமஞான இயக்கத்தில் சேர்ந்ததிலிருந்து இதன் முன்னேற்றத்திற்குப் பெரும்பணியாற்றினார் பெசன்ட் அம்மையார். ஆல்காட் இறந்தபிறகு பிரமஞான இயக்கத்தின் தலைவியாகத் தம் இறுதிக்காலம்வரை இருந்தார்.

## பிரமஞானக் கொள்கை

பிரமஞான இயக்கம் முப்பெரும் நோக்கங்களைக் கொண்டது. முதலாவது, சாதி சமய வேறுபாடின்றி எல்லா மக்களையும் ஒரே சமுதாயமாகச் செய்துகொள்வது; இரண்டாவது, எல்லாச் சமயங்களையும் தத்துவங்களையும் அறிவியலுண்மைகளையும் ஒப்பிட்டுப் பார்த்து ஒற்றுமை காண்பது; மூன்றாவது, மனிதரிடம் வெளித்தோன்றாமல் இருக்கும் சக்திகளையும் இயற்கையில் விளங்காமல் காணப்படும் விதிகளையும் ஆராய்வது. 'உண்மையைத் தேடுதல்' என்பதே இவ் இயக்கத்தின்

அடிப்படைக் கொள்கை. அனைத்துச் சாராரும் சமயப் பூசல்கள் இன்றி இதில் இணைந்து பணிபுரியலாம்; தவறிழைப் போரைத் திருத்தலாமே அன்றித் தண்டித்தல் கூடாது என்பது இவர்களின் கருத்து. 'உயர்ந்த அறம் உண்மையைத் தவிர வேறில்லை' என்னும் உயரிய கோட்பாட்டினை உடைய பிரமஞான இயக்கம் அன்னி பெசன்ட் தலைமையில் மிகவும் சிறப்புற்றுத் திகழ்ந்தது.

## அரசியல் பணி

போராட்ட இயல்பும் உண்மை நாட்டமும் கொண்ட அம்மையார் இந்திய அரசியலில் பெருமுனைப்புடன் தொண்டாற்றினார்.

'இங்கிலாந்து அரசு இந்தியாவிற்கு விடுதலை அளிக்க வேண்டும்; விடுதலை பெற்ற பின்னர் இந்தியா காமன்வெல்த் உறுப்பினராக விளங்குதல் வேண்டும்' என்னும் கொள்கையுடைய அன்னி பெசன்ட் அம்மையார், அதற்காக 'இந்திய ஹோம் ரூல் லீக்' என்னும் இயக்கத்தை 1916ஆம் ஆண்டு செப்டம்பர் முதல் நாள் தொடங்கினார். பல இடங்களில் மக்களிடையே அறிவார்ந்த சொற்பொழிவுகள் ஆற்றினார். 1916-ல் கடலூரில் ஒரு பொதுக்கூட்டத்தில் பேசிவிட்டுத் திரும்பியவுடன், அப்போது ஆளுநராக இருந்த பென்ட்லாண்டு பிரபு, அம்மையார் இந்தியாவைவிட்டுச் சென்றுவிட வேண்டும் என்று வற்புறுத்தினார். அம்மையார் அதற்கு ஒப்புக்கொள்ள வில்லை. தன்னை எதிர்க்கும் எவரையும் ஒடுக்கி அடக்கும் இயல்புடைய ஆங்கில அரசு அம்மையாரை உதகமண்டலத்தை விட்டு வெளியேறக் கூடாது என்று 1917ஆம் ஆண்டு சூன் திங்களில் ஆணையிட்டது. அவரோடு பி. பி. வாடியாவும் ஜி. எஸ். அருண்டேலும் அத் தண்டனையை ஏற்றனர். இதனை எதிர்த்து நாடெங்கும் கிளர்ச்சிகள் நடத்தப் பெற்றன. அரசு பணிந்தது; ஆகஸ்டு திங்களில் அவர்களை விடுதலை செய்தது.

## காங்கிரஸ் தலைவி

1917ஆம் ஆண்டு திசம்பர்த் திங்களில் நடைபெற்ற கல்கத்தாக் காங்கிரசு மாநாட்டுக்குத் தலைவராக விளங்கினார் அன்னி பெசன்ட் அம்மையார். முதன்முதலாகத் தேசியக் கொடியை ஏற்றிய பெருமை இவ் அம்மையாரையே சேரும். மூவண்ணக் கொடியை அமைத்துக் கொடுத்தவர் அம்மையாரே

ஆவார். அன்னி பெசன்ட் அன்று அமைத்துக் கொடுத்த மூவண்ணக் கொடியே இன்று சில மாற்றங்கள் அடைந்து வழங்கப்பெறுகிறது.

## இதழாசிரியர்

தம் அரசியல் பணி சிறக்க வேண்டும் என்று கருதிய அன்னி பெசன்ட் அம்மையார் இந்தியாவில் இருந்தபோதும் பல இதழ்களை நடத்தினார். முன்னரே இங்கிலாந்தில் இதழ் நடத்தி அனுபவம் பெற்றிருந்த அம்மையாருக்கு இது புதுமையாக இருக்கவில்லை. 1914-ல் 'காமன்வீல்' (Commonweal) என்னும் கிழமை இதழைத் தொடங்கித் தம் அரசியல் கருத்துகளை ஆர்வத்துடன் பரப்பினார்; தொடர்ந்து 'மெட்ராஸ் ஸ்டாண்டர்டு' என்னும் நாளிதழை வாங்கிப் 'புதிய இந்தியா' (New India) என்னும் பெயரிட்டு நடத்தினார். 1918-ல் 'யுனைடெட் இந்தியா' என்னும் மற்றுமோர் இதழையும் அவர் நடத்தியுள்ளார். தம் கட்டுரைகளால் மக்களை எழுச்சியுறச் செய்தவர் அன்னி பெசன்ட் அம்மையார்.

## அரசியலிலிருந்து விலகல்

அம்மையார் ஆற்றிய அரசியல் பணி அனைவராலும் பாராட்டப்பெற்றது. ஆனால் ஓரிரு ஆண்டுகளில் அரசியலை விட்டு விலகவேண்டிய சூழ்நிலை உருவாயிற்று. 1918ஆம் ஆண்டு கொண்டுவரப்பெற்ற 'மான்டேகு-செம்ஸ்போர்டு' சீர்திருத்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று அம்மையார் கூறியதைக் காங்கிரசு இயக்கத்தின் முனைப்பாளர்கள் ஒப்புக் கொள்ளவில்லை. பின்னர் 1919ஆம் ஆண்டு காந்தியடிகள் தொடங்கிய ஒத்துழையாமை இயக்கம் அம்மையாரின் ஆதரவைப் பெறாததாக அமைந்தது. இந்த நிலையில் தொடர்ந்து காங்கிரசில் அவரால் பணியாற்ற இயலவில்லை. எனவே, அரசியலிலிருந்து விலகிப் பிரமஞான இயக்கப் பணியில் முழுமையாகத் தம்மை ஈடுபடுத்திக்கொண்டார்.

## சாரணர் இயக்கம்

உலகளவில் சாரணர் இயக்கம் ஆற்றிவரும் பணியைக் கண்ட அன்னி பெசன்ட் அம்மையார், 1917ஆம் ஆண்டு 'இந்தியச் சாரணர் இயக்கம்' ஒன்றைத் தொடங்கினார். இவ்வியக்கம் பின்னர் 1921-ல் 'உலகச் சாரணர் இயக்க'த்தின் உறுப்பாக இணைந்துவிட்டது. சாரணர் இயக்கத்தில் 'இந்தியச் சிறப்பு ஆணையர்'ராக அம்மையார் திகழ்ந்தார்; இவ் இயக்கத்

தின் மிக உயர்ந்த சிறப்பு விருதான 'வெள்ளி ஓநாய் விருது' (Order of the Silver Wolf) இவருக்கு 1932ஆம் ஆண்டு வழங்கப்பெற்றது. அன்னி பெசன்ட் அம்மையாரின் தலை சிறந்த பணிகளுள் ஒன்றாக இவ்வியக்கப் பணி அமைந்தது.

### பிற பணிகள்

கல்வி உயர்வு மக்களனைவருக்கும் கிடைத்தல் வேண்டும் என்னும் கொள்கையுடைய அன்னி பெசன்ட் பல கல்வி நிறுவனங்களை உருவாக்கினார். காசிநகரில் இருந்தபோது ஒரு கல்லூரியையும் ஓர் உயர்பள்ளியையும் முன்னரே தொடங்கிய அம்மையார், 1915 ஆம் ஆண்டில் மதனபள்ளியில் 'தேசியக் கல்லூரி' என்னும் பெயரில் கல்லூரி ஒன்றை நிறுவினார். 'தேசியக் கல்வி வளர்ச்சிக் கழகம்' (Society for the Promotion of National Education) 1917ஆம் ஆண்டு அம்மையாரால் தொடங்கப்பெற்றது.

1918ஆம் ஆண்டு சென்னை அடையாற்றில் 'தேசியப் பல்கலைக்கழகம்' நிறுவியது அம்மையாரின் மிகச் சீரிய பணிகளுள் ஒன்று. இப் பல்கலைக்கழகத்தின் வேந்தராகக் கவிஞர் இரவீந்திரநாத தாகூர் விளங்கினார்; துணைவேந்தராக எஸ். சுப்பிரமணிய ஐயரும் முதல்வராக ஜி. எஸ். அருண்டேலும் பொறுப்பேற்றிருந்தனர்.

அன்னி பெசன்ட் அம்மையார் இதனைத் தொடர்ந்து பல பள்ளிகளைச் சிறுவர் சிறுமியர்க்கெனத் தொடங்கினார்.

மாதர் முன்னேற்றத்தில் அக்கறைகொண்ட அம்மையார் 1918ஆம் ஆண்டு 'இந்திய மகளிர் சங்கம்' (Women's Indian Association) ஒன்றனைத் தொடங்கினார். இதன் கிளைகள் பல இடங்களில் அமைக்கப்பெற்றன. தமிழகச் சட்டமன்ற உறுப்பினர்களுள் முதற் பெண்மணியாக விளங்கிய டாக்டர் முத்துலட்சுமி ரெட்டியும் மார்கரெட் கசின்ஸ் அம்மையாரும் இந்த மகளிர் முன்னேற்றப் பணியில் அன்னி பெசன்டுக்கு உறுதுணையாக விளங்கினர்.

### மறைவு

இறுதிவரை மக்கள் பணியையே தம் மூச்சாகக்கொண்டு தொண்டாற்றி வந்த அன்னி பெசன்ட் அம்மையார் 1936ஆம் ஆண்டு செப்டம்பர் 21ஆம் நாள் மறைந்தார். தாம் இறக்கும்

போது தம் கல்லறையில், 'இவள் உண்மை நெறி செல்ல முயன்றவள்' என்று எழுதுமாறு கேட்டுக்கொண்டது அம்மையாரின் எளிமையை நமக்கு உணர்த்துவதாகும். அவர் மறைவு பிரமஞான இயக்கத்துக்கும், மகளிர் நல முன்னேற்றத்திற்கும் பேரிழப்பாக அமைந்தது.

### அன்னை வசந்தை

இளமைப் பருவத்தில் இறையுணர்வு மிக்கவராய் இருந்து இருபத்தேழாம் வயதில் நாத்திகராக வாதங்கள் புரிந்து, சில ஆண்டுகள் கழித்துச் சமதர்ம இயக்கத்தினராய் (Fabian Socialist) விளங்கி, இந்தியாவிற்கு வந்த பிறகு தேசிய விடுதலை வீரராகத் திகழ்ந்து, இறுதியில் பிரமஞான இயக்கத்தின் தலைவியாக (Theosophist) ஒளிவிட்ட அன்னி பெசன்ட் அம்மையார், மகளிர்குல மாணிக்கங்களுள் தலைமையிடம் பெற்று, இந்திய மக்களின் நெஞ்சங்களில் நீங்காது குடியிருக்கும் சமூகச் சீர்திருத்தப் பெண்மணியாவார். தம்மிடையே பேரோடும் புகழோடும் வாழ்ந்த அன்னி பெசன்ட் அம்மையாரை, 'அன்னை வசந்தை' என்று போற்றி அழைத்தது அவர்மீது தமிழர்கள் கொண்டிருந்த பேரன்பிற்குச் சான்றாகும்.

# 6. வீரேசலிங்கம்

தென்னகத்தில் தோன்றிய தலைசிறந்த சமுதாயச் சீர்திருத்த வாதிகளுள் குறிப்பிடத்தக்க ஒருவர் கந்துகூரி வீரேச லிங்கம் ஆவார். ஆந்திர மாநிலத்தில் இராசமகேந்திரவரம் என்னும் பழம்பெயர் பெற்ற இராசமுந்திரியில் 1848ஆம் ஆண்டு ஏப்பிரல் பதினாறாம் நாள் அவர் பிறந்தார். தந்தை சுப்பராயுடுவுக்கும் தாய் புன்னம்மாவுக்கும் பிறந்த ஒரே மகன் வீரேசலிங்கம். நடுத்தரக் குடும்பத்தைச் சேர்ந்த நியோகி பிராமணரான வீரேசலிங்கம், அவர் பெயருக்கேற்ப வீர சைவ மரபைச் சார்ந்தவர். 'சுந்தரத் தெலுங்கு' மொழிக்குப் புதிய அழகினையும் வடிவினையும் கொடுத்தவர் அவர். பிறந்த நான்காம் ஆண்டிலேயே தந்தையை இழந்த வீரேசலிங்கம் அன்னையாலும் மாமனாலும் வளர்க்கப்பட்டார். அவர் தோற்றத்தில் கரடுமுரடான உருவம் கொண்டவர்; முகத்தில் சிறிய வயதில் வந்த அம்மை நோயின் தழும்புகள்; எப்போதும் இரைப்பு (ஆஸ்துமா) நோயினால் துன்புறும் சீர்கெட்ட நலிந்த உடல்; திடீரென உணர்ச்சிவசப்பட்டுச் செயல்படும் இயல்பு இருப்பினும் இவையனைத்தையும் மீறித் தம்மைப் பொதுவாழ்வில் ஈடுபடுத்திக்கொண்டு சமுதாயச் சீர்கேடுகளை ஒழிக்கத் தன்னலமற்ற வகையில் போராடிய செம்மல் ஆவார் வீரேசலிங்கம்.

## கல்வி

எளிய ஆரம்பப் பள்ளியில் தொடக்கக் கல்வியை மேற்கொண்ட வீரேசலிங்கம், 1860-ல் மாவட்ட அரசு உயர்பள்ளியில் சேர்க்கப்பட்டார். இளமையிலேயே அவர் நுட்ப அறிவாற்றல் கொண்டவராக விளங்கினார். ஒருமுறை கற்றவுடனேயே மனத்தில் பதிய வைத்துக் கொள்ளும் ஆற்றல் அவருக்கு இருந்தது. நிறைந்த மதிப்பெண்களையும் பரிசு களையும் மாணவராயிருந்தபோது அவர் பெற்றுச் சிறந்தார். தாய்மொழியான தெலுங்கில் மிகுந்த அக்கறை கொண்டு பயின்றார்.

## பள்ளியில்

இயல்பாகவே சினம்கொள்ளும் தன்மையுடைய வீரேசலிங்கம், சிறுமையைக் கண்டு பொங்கி எழுபவராக இருந்தார். பள்ளியில் படித்துக் கொண்டிருந்தபோது தலைமையாசிரியர் ஒருவர் ஆங்கிலத்தில் போதுமான புலமை பெறாதவராக இருந்தார். மாணவர்கள் அவரை மாற்றிவிட்டு வேறொருவரை நியமிக்கவேண்டும் என்று மேலதிகாரிகளுக்கு விண்ணப்பம் எழுதினர். ஒரு மாணவர் வாயிலாக இதற்குக் காரணமானவர் யாரென்று அறிந்து அவரைக் கடுமையாகக் கண்டித்தார் தலைமையாசிரியர். வீரேசலிங்கம் இதனைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. தலைமையாசிரியர் தமக்கு வேண்டியவராக இருந்துங்கூட, மாணவர்களை வேலைநிறுத்தத்தில் ஈடுபடச்செய்து போராட்டம் நடத்திப் பள்ளியையே மூடுமாறு செய்து இறுதியில் வெற்றியும் பெற்றார் வீரேசலிங்கம். நீதிக்காக நடந்த இந்தப் போராட்டம் அவருடைய எதிர்கால வாழ்க்கைக்கு ஒரு வெள்ளோட்டமாக விளங்கியது.

## இறையுணர்வு

வீரேசலிங்கத்திற்கு 1856-ல் பூணூல் அணிவித்தனர்; சந்தியாவந்தனத்தைத் தவறாது செய்துவந்தார்; காயத்திரி மந்திரத்தை நாள்தோறும் நூறுமுறைக்குமேல் மிகுந்த பற்றுடன் சொல்வார்; மாலையில் கோதாவரி யாற்றங்கரைக்குச் சென்று சூரிய வணக்கம் செய்வார். ஏகாதசி, சிவராத்திரி முதலிய நாள்களில் விரதம் இருப்பது அவர் வழக்கம். முனிவர்களின் வரலாற்றைப் படித்து, பின் அவர்களைப்போல் பல வரங்களைப் பெற்றுச் சிறத்தல் வேண்டும் என்று கருதுவார்; மகாபாரதம், பாகவதம், புராணங்கள் ஆகியவற்றை ஆர்வத்தோடு படிப்பார்.

## திருமணம்

அந்தக் கால வழக்கப்படி இளம் வயதிலேயே வீரேசலிங்கத்துக்குத் திருமணம் நடந்தேறியது. பாபம்மா என்னும் இயற்பெயர் கொண்ட ஒன்பது வயது பெண்ணைப் பதின்மூன்று வயதான வீரேசலிங்கத்தின் மனைவியாக ஆக்கினர். அவருடைய தாயார் மணப் பெண்ணின் பெயரை இராசலட்சுமம்மா என்று மாற்றினார். திருமணம் காரணமாகவும் வேறு குடும்பச் சிக்கல்கள் காரணமாகவும் அவர் படிப்பு அடிக்கடி தடைபட்டது. 1870-ல் உயர்பள்ளிப் படிப்பை ஒருவாறு முடித்தார்.

### தொழில்

அவர் அரசு அலுவலகத்தில் பணியாற்றுவது மகிழ்ச்சியைத் தாராது என்று அதனை ஒதுக்கிவிட்டுப் பள்ளியாசிரியராக 1871ஆம் ஆண்டு இராசமுந்திரியிலிருந்த மாவட்ட அரசு பள்ளியில் சேர்ந்தார். அப்போது அவருக்கு மாத ஊதியம் ரூபா இருபத்தைந்துதான். ஆங்கிலம், கணிதம், வரலாறு ஆகிய வற்றை மாணவர்களுக்குப் பயிற்றுவித்த வீரேசலிங்கம் 1872-ல் கோரங்கியில் இருந்த ஆங்கிலப் பள்ளியில் தலைமையாசிரிய ராகப் பணி ஏற்றார். பின் 1874-ல் தவளேசுவரம் பள்ளியில் தலைமையாசிரியரானார். இரண்டாண்டுக் காலம் அங்குப் பணியாற்றிவிட்டு, மீண்டும் இராசமுந்திரிப் பள்ளிக்கு ஆசிரிய ராகத் திரும்பி வந்தார்.

### இரண்டு நிகழ்ச்சிகள்

அமாவாசை நாள் தமிழரைப் பொறுத்தவரை நல்ல நாள்; ஆனால் ஆந்திரருக்கோ இது நன்னாளன்று. எந்தச் செயலையும் அமாவாசையில் தொடங்கமாட்டார்கள். வீரேசலிங்கம் கோரங்கிப் பள்ளியில் தலைமையாசிரியர் பணி ஏற்பதைப் பலர் தடுத்தும் கேளாமல் அமாவாசை நாளில் ஏற்றுக் கொண்டார். இறைவன் படைப்பில் எல்லா நாள்களும் ஒன்றே; இவற்றில் நல்லதும் கெட்டதுமாகப் பாகுபடுத்துவது கூடாது என்பது அவர் கொள்கை.

மற்றொரு நிகழ்ச்சி, ஒரு மந்திரவாதியைப்பற்றியது. பேய் பிடித்ததாகக் கருதப்பட்ட அவர்தம் அன்னையாருக்கு, ஒரு யோகி மந்திரங்கள் கூறி வழிபாடுகள் செய்து பேயோட்டுவ தாகச் சொல்லி வீட்டில் ஆரவாரம் செய்து கொண்டிருந்தான். இதில் நம்பிக்கை இல்லாத வீரேசலிங்கம் வீட்டிற்குள் நுழைந்து அன்னையைக் கொடுமைக்கு ஆட்படுத்திக் கொண்டிருந்த மந்திரவாதியை ஏசி, வீட்டைவிட்டுத் துரத்திவிட்டார். அவர் மீது சாபமிட வந்த யோகி உடல்நலங் கெட்டு அஞ்சி ஓடி விட்டான்.

இந்த நிகழ்ச்சிகள் இரண்டும் இளமைக் காலத்திலேயே வீரேசலிங்கம் பகுத்தறிவு அடிப்படையில் செயலாற்றத் தொடங்கியதை நமக்கு உணர்த்துவனவாகும்.

### செயல் வீரர்

'சொன்னால் போதாது; செயல்புரிய வேண்டும்' என்னும் கொள்கையுடையவர் வீரேசலிங்கம். அவர் தவளேசுவரத்தில்

தங்கியிருந்தபோது பெண்கல்விபற்றிப் பேசியும் எழுதியும் வந்தார். அதனோடு நின்றுவிடாமல் பெண்கள் பள்ளி ஒன்றையும் தொடங்கினார். இதனைத் தொடர்ந்து பிற்காலத்தில் பல கருத்துகளைச் செயல்வடிவம் ஆக்குவதில் முனைந்து வெற்றியும் கண்டிருக்கிறார். இவற்றிற்குத் துணையாக நீண்ட நாள்கள் அவருக்கு வலக்கரமாய் விளங்கியவர் அவருடைய அருமை நண்பர் பசவராஜு கவரராஜு என்பவர் ஆவார்.

## விவேகவர்த்தினி

தம் கருத்துகளை வெளியிடுவதற்கு ஓர் இதழ் நடத்த வேண்டும் என்று கருதிய வீரேசலிங்கம் 1874ஆம் ஆண்டு 'விவேகவர்த்தினி' என்ற திங்கள் இதழைத் தொடங்கினார். அதில் நிறையக் கட்டுரைகள் எழுதி வெளியிட்டார். காலப் போக்கில் அதனை மாதமிருமுறை ஏடாக ஆக்கினார். சென்னையில் கொக்கொண்ட வேங்கடரத்தினம் பந்துலு வெளியிட்ட 'ஆனந்த பாஷா சஞ்சீவினி' இதழ் அச்சிடப் பெற்ற இடத்திலேயே அவருடைய இதழும் சிறிது காலம் அச்சிடப்பெற்றது. ஆனால், இருவருக்கும் அடிப்படையான கருத்துவேற்றுமை இருந்து, பின்னர்ப் பகையாகவும் மாறியது. அதனால் அவர் இராசமுந்திரியிலேயே ஓர் அச்சகம் தொடங்கி இதழைச் சிறப்பாக வெளியிட்டார்.

வீரேசலிங்கத்தைத் தாக்கும் நோக்கில் வேங்கடரத்தினம் 'ஹாஸ்யவர்த்தினி' என்ற துணையிதழை வெளியிட, அவர் அதற்குப் போட்டியாக 'ஹாஸ்ய சஞ்சீவினி' என்ற துணை யிதழைப் பதிப்பித்தார். இவ்வாறு அவ்விருவருக்கும் கொள்கை யளவில் கடும்போட்டி இருந்தது. ஆனால், இதற்குமேலே பல அரிய சீர்திருத்தங்களுக்கு இவ்விதழ் பயன்பட்டது என்பதைக் கருத்தில் கொள்ள வேண்டும். சிறந்த இதழாசிரியராக விளங்கியவர் வீரேசலிங்கம் என்பதனை அவர் பணி நமக்குக் காட்டுகிறது. விவேகவர்த்தினி 1890 ஆம் ஆண்டு வரை சிறப்பாக நடத்தப்பெற்றது.

## போர்க்குரல்

தவறு நிகழுமிடங்களில் தலையிட்டுச் சீர்திருத்தும் தகைமை கொண்டவராகிய வீரேசலிங்கம் பல கொடுமைகளை எதிர்த்துப் போர்க் குரல்களைத் தம் இதழ் வாயிலாக எழுப்பினார். 'ஊழலை எதிர்த்தால் ஊர்த்தலைவர்கள் சினம் கொள்வர்; ஒழுக்கக் கேட்டை எதிர்த்தால் ஆடம்பரக்காரர்கள்

கோபிப்பர்; காலத்திற்கு ஒவ்வாத பழக்கவழக்கங்களை எதிர்த்தால் படியாத பாமர மக்கள் வருத்தம் கொள்வர்; சமயக் கொள்கைக்கு மாறானவை என்னும் காரணம் காட்டிச் சடங்குகள் சிலவற்றை எதிர்த்தால் கோயில் குருக்கள் முதலானோர் பெரிதும் வெறுப்பர்; இவ்விதம், தான் மேற்கொண்ட பணிக்கு ஏற்ப நேர்மையாக நடந்துகொள்ள வேண்டுமானால் இத்தகைய பல்வேறுபட்ட சமுதாயப் பிரிவினரை மனம்நோகச் செய்தே தீரவேண்டும்' என்று தம் விவேகவர்த்தினியில் எழுதினார் வீரேசலிங்கம்.

ஊழல், ஒழுக்கக் குறைவு, பொதுமாதர் தொடர்பு, இளமைத் திருமணம், இளம் கைம்பெண் கொடுமை, வீண் சடங்குகள் ஆகியவற்றை இதழ் வாயிலாக மிகவும் கடுமையாக எதிர்த்துப் போரிட்டார் அவர். இதன் காரணமாக ஊர்த் தலைவர்கள், அரசு வழக்குரைஞர், பணக்காரர்கள் முதலான பலருடைய எதிர்ப்புக்கும் கண்டனத்துக்கும் ஆளானார். இருப்பினும் அவற்றைச் சிறிதும் பொருட்படுத்தாமல் சமுதாயச் சீர்திருத்தப் பணியில் தொடர்ந்து செயலாற்றினார்.

### வழிபாட்டு இயக்கம்

இராசமுந்திரிக்குத் திரும்பியவுடன் வீரேசலிங்கம் தம் நெருங்கிய தோழர்களின் கருத்துப்படி ஒழுங்கான வழிபாட்டு இயக்கமாக 1878ஆம் ஆண்டில் 'பிரார்த்தனா சமாஜம்' என்ற ஒன்றனைத் தொடங்கினார். இதன் உறுப்பினர்கள் வாரத்திற்கு ஒருநாள் சேர்ந்து அவர் சொற்பொழிவைக் கேட்டனர்; தெய்வச் சிலைகள் இல்லாமல் இறைவனை வழிபடுதலையும் தனி வாழ்வில் தூய்மையாய் இருக்க வேண்டியதன் இன்றியமையாமையையும் இந்த இயக்கம் வற்புறுத்தியது.

பின்னர் இந்த இயக்கத்தின் பணிகள் பலவாக வளர்ந்தன. வீரேசலிங்கம் ஏழை மாணவர் கல்விக்காக இராசமுந்திரியில் ஓர் இரவுப் பள்ளி தொடங்கினார்; உடல் ஊனமுற்றோருக்குப் பலவகையிலும் நல்லுதவிகளை இவ்வியக்கம் செய்வதற்கு வழிகோலினார். பழமையில் ஊறியவர்கள்கூட இதன் பணிகளைப் பாராட்டினர். வடக்கே தோன்றிய பிரம்ம சமாஜ இயக்கத்தின் தாக்கத்தால் 'பிரார்த்தனா சமாஜ்'ப் பணிகளும் அதன் வழியிலேயே சென்றன; சிறப்படைந்தன.

● வீரேசலிங்கம் இயக்கத்திற்காகவும் தம் பணிகள் செம்மையுடையவும் பொதுமக்களிடமிருந்து பொருள் சேர்த்து 1890

அக்டோபரில் ஒரு பெரிய கட்டடத்தை எழுப்பினார். அவர் பெயரை அதற்குச் சூட்ட வேண்டும் என்று அன்பர்கள் சொன்னபோது அதனை உறுதியாக மறுத்துவிட்டார்; அதன் நிருவாகக் குழுவில் ஓர் அறங்காவலராக இருப்பதற்குக்கூட அவர் ஒப்புதல் தரவில்லை.

## கைம்பெண் திருமணம்

வீரேசலிங்கம் அவர்களின் சமுதாயச் சீர்திருத்தப் பணி களுள் மிகவும் குறிப்பிடத்தக்கது இளம் கைம்பெண்களுக்கு மறுமணம் செய்விக்கும் முயற்சியாகும். மிகச் சிறிய வயதிலேயே திருமணம் செய்துகொண்டு பருவமடைவதற்கு முன்னரே கைம்பெண்களாகிவிடும் பலருக்குப் புதிய எதிர் காலத்தை உருவாக்குவது மக்கள் கடமையாகும் என்று கூறி அத்தகைய திருமணங்களுக்குத் தாம் முன்னின்று ஏற்பாடு களும் செய்தார். இச் செயல்பற்றித் தம் இதழில் மிகவும் ஆணித் தரமாகச் சான்றுகளோடு விளக்கி எழுதினார். வேதங் களிலிருந்தும் ஸ்மிருதிகளிலிருந்தும் எடுத்துக்காட்டுகளைக் கொடுத்து இத்தகைய திருமணங்களுக்கு அவை எதிர்ப்புத் தெரிவிக்கவில்லை என்பதையும் விளக்கினார். பெண்கள் உயர்வடைய வேண்டும் என்று கருதியதனால் இக் கருத்துகள் பற்றிப் பெண்கள் உயர்பள்ளிக்கூடங்களில் சொற்பொழிவு களை நிகழ்த்தினார். இதற்காக 1880 ஆம் ஆண்டு ஒரு சங்கத்தையும் தொடங்கினார்.

1881 ஆம் ஆண்டு திசம்பர் பதினோராம் நாள் இராச முந்திரியில் முதல் விதவைத் திருமணத்தை வீரேசலிங்கம் நடத்திவைத்தார். ஊர் மக்களில் பெரும்பாலோர் இதனை எதிர்த்தனர். மரபுகளையும் பழமையையும் மீறும் இந்தச் செயலைக் காண அனைவரும் வரத் தயங்கினர். ஆனாலும் அவர் மேற்கொண்ட முயற்சியில் வெற்றி பெற்றார். தொடர்ந்து இத்தகைய பல திருமணங்களை நடத்திவைத்து இளம் பெண்கள் பலரைக் கொடிய துன்பங்களிலிருந்து மீட்டார்.

வங்கத்தில் ஈசுவர சந்திர வித்தியாசாகரரும், மராத்தி யத்தில் மகாதேவ கோவிந்த இரானடேவும் செயலாற்றியது போல் ஆந்திரத்தில் வீரேசலிங்கம் சிறந்த சமுதாயத் தொண்டு ஆற்றினார்.

உடல்நலம் குன்றிய நிலையிலும், பணத்தொல்லை மிகுந்த போதிலும், தம் நெருங்கிய நண்பர் கவரராசு இறந்த கட்டத்

திலும் மனம் தளராது தம் பொதுநலப் பணியை அவர் கைவிடவில்லை.

### நகரமன்ற உறுப்பினர்

வீரேசலிங்கம் சிறிது காலம் நகரமன்ற உறுப்பினராக இருந்து சீரிய பணிகளை ஆற்றினார். நகரமன்ற வருவாயைப் பெருக்குவதிலும், நல்ல முறையில் செலவழிப்பதிலும் அக்கறை காட்டினார். ஆங்கில அரசின் அரவணைப்பை விரும்பியவர் என்று அவர்மீது குற்றம் சாட்டப் பெற்றாலும், அவர்கள் சொல்வதற்கெல்லாம் தலையசைத்துக் கைகட்டி நடக்க வில்லை. தம் கொள்கைக்கு மாறாக எவர் நடந்தாலும் எதிர்ப்ப வராகிய வீரேசலிங்கம் ஆங்கில அதிகாரியையும் விட்டு வைக்க வில்லை. ஊழலைக் கடுமையாக எதிர்த்தார்; ஒழுங்கும் நேர்மையும் அவர் உடன்பிறந்தவை. சிறந்த பணிகள் ஆற்றி வந்த வீரேசலிங்கம் தம் நண்பர் கவரராசுவின் மறைவினால் மனமுடைந்தவராய் நகரமன்ற உறுப்பினர் பதவியிலிருந்தும் வேறு சில பொது இயக்கப் பொறுப்புகளிலிருந்தும் விலகிக் கொண்டார்.

### வேறு இதழ்கள்

1891ஆம் ஆண்டு நீதிபதி சுப்பராவ் பந்துலு தாம் நடத்திய 'சிந்தாமணி' இதழை வீரேசலிங்கம் ஆசிரியராக இருந்து வெளியிட வேண்டும் என்று கேட்டுக்கொண்டார். அதனை ஏற்றுக்கொண்ட வீரேசலிங்கம் பல அரிய கட்டுரைகளை அதில் எழுதினார். வழிபாட்டு இயக்கத்திற்காகச் 'சத்திய சம்வர்த்தினி' என்னும் இதழையும் சிறப்பாக நடத்தினார். இவ்விதழில் சமுதாயச் சீர்திருத்தக் கொள்கைகளை விளக்கி எழுதினார்.

### இராவ் பகதூர்

வீரேசலிங்கத்தின் பொறுப்பும் கடுமையும் மிக்க சிறந்த பணிகளைப் பாராட்டும் வகையில் 1893 புத்தாண்டு நாளன்று அவருக்கு 'இராவ் பகதூர்' என்னும் பட்டம் வழங்கப்பெற்றது. பொதுவாக ஆங்கில அரசின் கொள்கைகளை அப்படியே பின்பற்றிப் பாராட்டும் மேல்நிலையினருக்கு மட்டுமே வழங்கப்பட்ட இவ் விருது, முதன்முதலாக ஓர் ஏழைப் பள்ளி ஆசிரியரும் சமுதாயத் தொண்டருமான வீரேசலிங்கத்திற்குக் கிடைத்தது. இந்த விருது பெற்றமைக்காக நாட்டின் நாற் புறங்களிலிருந்தும் பாராட்டுகள் வந்து குவிந்தன. இதனால்

வீரேசலிங்கத்தின் பெருமை நாடெங்கும் பரவிற்று. இராச முந்திரியில் மட்டுமன்றி இந்திய நாடு முழுமைக்குமே உரிய பொதுத் தொண்டராக வீரேசலிங்கம் விளங்கினார்.

## சென்னை வாழ்க்கை

பெயரும் புகழும் பெற்று விளங்கிய வீரேசலிங்கம் தம் பணியைப் பரவலாக்கிட முனைந்து சென்னைக்கு வந்து சேர்ந்தார். நல்ல நண்பர்கள் பலரை இங்குப் பெற்றார்; சிந்தாமணியைச் சிறந்த முறையில் நடத்தினார்; தம்முடைய நூல்களைப் பத்துத் தொகுதிகளாக வெளியிட்டார்; தென்னிந்திய பிரம்ம சமாஜத்தின் தலைவராகவும், சமுதாயச் சீர்திருத்த இயக்கத்தின் தலைவராகவும் விளங்கினார்; எழும்பூர்ப் பெண்கள் பள்ளியில் படித்து வந்த இளம் கைம் பெண்களுக்குப் பல வசதிகளைச் செய்து தந்தார். எனினும், இச் சீர்திருத்தங்களினால் அவர் மனநிறைவு அடைய முடிய வில்லை. போதுமான அளவிற்குச் சமுதாயம் முன்னேற்ற மடையாதது கண்டு மிகவும் வருந்தினார்.

வீரேசலிங்கம் சென்னையில் இருந்த காலத்தில் மேலும் பல அரிய சிறப்புகளைப் பெற்றார். சென்னைப் பள்ளிப் புத்தகக் குழுவிலும், கல்லூரித் திராவிட மொழிகளின் குழுவிலும் அவர் இடம்பெற்றார். அரசு அலுவலர், சப்-கலெக்டர் ஆகியோருக்கான தெலுங்குத் தேர்வுக் குழுவின் உறுப்பினராகவும் பணிபுரிந்தார்.

1898ஆம் ஆண்டு இந்தியச் சமுதாயச் சீர்திருத்த மாநாட்டின் தலைவராகவும் இருந்து சிறப்பாக நடத்தினார். மராத்தியத் தலைவர் இரானடே வீரேசலிங்கத்தின் பணி களைப் பாராட்டித் 'தென்னிந்திய வித்தியாசாகரர்' என்னும் பட்டத்தை அளித்தார்.

அவர், மாநிலக் கல்லூரியில் முதல்நிலைத் தெலுங்குமொழி யாசிரியராக 1899ஆம் ஆண்டு விளங்கினார்; காக்கிநாடா, விசயவாடா, சென்னை முதலான பல இடங்களில் நடந்த மாநாடுகளில் பங்கேற்றார். வீரேசலிங்கம் இராசமுந்திரியில் விக்டோரியா பெண்கள் பள்ளியைத் தொடங்கினார்; கைம்பெண் விடுதி ஒன்றையும் நிறுவினார்.

1906ஆம் ஆண்டு முதல் பிரம்ம சமாஜப் பணியில் பெரிதும் ஈடுபட்டார்; சாதிகள் அடிப்படையில் நடக்கும் சடங்குகளைக் கைவிட்டார்; 'சமபந்தி போஜனம்' என்ற வகையில்

அனைத்துச் சாதியாருடனும் சேர்ந்து உணவருந்தினார்; பூணூல் அணியக் கூடாது என்று அதனையும் நீக்கிவிட்டார். அனைத்தையும் படைத்த இறைவன்தான் தந்தை என்னும் நம்பிக்கையும், இனம், மதம், நிறம், சாதி, குழு என்பவற்றைக் கடந்த நிலையில் மனிதர் அனைவரும் உடன்பிறப்பாளர் என்னும் நம்பிக்கையும் அவர் பின்பற்றிய இயக்கத்தின் உயிர்க் கொள்கையாம்.

இராசமுந்திரிக்குத் திரும்பிய பின்னர் 1905ஆம் ஆண்டு 'சத்தியவதினி' என்ற இதழைத் தொடங்கினார். இவ்வேட்டில் தம் கருத்துகளை அச்சமின்றியும் வெளிப்படையாகவும் தொடர்ந்து எழுதினார்.

போளவரம் ஜமீன்தார் முதன் மனைவியைத் தள்ளிவைத்து விட்டுப் பத்து வயதான மற்றொரு சிறுமியை இரண்டாவது மனைவியாகத் திருமணம் செய்துகொண்டார். வீரேசலிங்கம் இதனைக் கடுமையாகக் கண்டித்துச் சத்தியவதினியில் கட்டுரை தீட்டினார்; அதன் விளைவாக, ஜமீன்தாரின் பகையும் 'ஆரிய மத போதினி' இதழின் பகையும் ஏற்பட்டன.

'இதகரிணி ச்மாஜம்' என்னும் சங்கத்தை 1906ஆம் ஆண்டு ஏற்படுத்தினார் வீரேச்லிங்கம். பெண்கள் கீழ்நிலைப் பள்ளி, விக்டோரியா உயர்பள்ளி, கைம்பெண் இல்லம் ஆகியவற்றை இச் சங்கம் பொறுப்பேற்று நடத்தியது.

1908ஆம் ஆண்டு ஏப்பிரல் 16ஆம் நாள் வீரேசலிங்கத்தின் அறுபதாண்டு நிறைவு விழா மிகவும் சிறப்பாக நடத்தப் பெற்றது. அடுத்த இரண்டாண்டுகளுக்குள்ளாக அவருடைய அன்பு மனைவியார் இறந்தார்; அதனால் அவர் அடைந்த துயரத்துக்கு அளவே இல்லை.

### இலக்கியப் பணி

கந்துகூரி வீரேசலிங்கம் பந்துலு தெலுங்கு மொழி இலக்கிய உலகில் மறக்க முடியாத ஒரு பெயராக என்றும் நின்று நிலவு வதாகும். பல புதிய இலக்கிய வடிவங்களை இம் மொழிக்கு அறிமுகம் செய்து வைத்தவர் வீரேசலிங்கமே ஆவார். அவர் பிற இந்திய மொழிகளிலும் ஆங்கில மொழியிலும் இலக்கியம் வளர்க்கப்படுவதைக் கண்டு, தெலுங்கிலும் புதுமை இலக்கியம் வளர அயராது தொண்டாற்றினார்; உடல்நிலை மிகவும் மோசமாக இருந்தும் ஓயாமல் எழுதினார்; தெலுங்குமொழியின் மறுமலர்ச்சிக்குக் காரணமாக அவர் விளங்கினார். நூற்றுக்கு மேற்பட்ட பல்வகை நூல்களைப் படைத்தார்.

தெலுங்கு மொழியில் முதல் நையாண்டிக் கவிதையைப் படைத்தவர்; அங்கத உரைநடையினைத் தொடங்கி வைத்தவர்; முதல் சமூக நாடகத்தைத் தீட்டியவர்; முதல் சமூகப் புதினம் எழுதியவர்: அழகிய உரைநடையில் தம் வரலாற்றை வழங்கியவர் என்னும் பல சிறப்புகளை வீரேசலிங்கம் பெற்றார்.

1890-ல் 'இராசசேகர சரித்திரம்' என்னும் புதினம் எழுதினார். இதுவே தெலுங்கு மொழியின் முதல் நாவல் என்பர் பலர். ஜோனதன் ஸ்விப்ட் எழுதிய கலிவர் பயணக் கதையை ஒட்டிச் 'சத்திய ராஜா பூர்வதேச யாத்ராலு' என்னும் புதினத்தையும் மகளிர் முன்னேற்றம் குறித்துச் 'சத்தியவதி சரித்திரம்' என்னும் புதினத்தையும் வீரேசலிங்கம் படைத்தார்.

பிரம்ம விவாகம், பிளீடர் நாடகம் அல்லது வியவகார தர்மபோதினி, டம்பாச்சாரி விலாசம் முதலான பல அரிய பிரகசன (கேலி) நாடகங்களை வீரேசலிங்கம் எழுதினார்.

அவர், சேக்சுபியரின் நாடகம் ஒன்றனைத் தழுவிச் 'சமத்கார ரத்னாவளி' என்னும் பெயரில் தெலுங்கில் எழுதினார்; செரிடன் நாடகங்களுள் இரண்டனை 'ராகமஞ்சரி', 'கல்யாண கல்பவல்லி' என்னும் தலைப்புகளில் மொழிபெயர்த்தார்.

வீரேசலிங்கம் காளிதாசரின் சாகுந்தலம், மாளவிகாக்னிமித்ரம் ஆகியவற்றையும், ஹர்ஷரின் 'ரத்னாவளி' நூலையும் தெலுங்கில் சிறந்த முறையில் எழுதி வெளியிட்டார்.

தெலுங்கு மொழி இலக்கிய வரலாற்றை 'ஆந்திர கவியுலு சரித்திரமு' என்னும் பெயரில் மூன்று பகுதிகளாக எழுதினார்; இதில் இருநூற்றுக்கு மேற்பட்ட புலவர்கள் வரலாறு கூறப்பட்டுள்ளது.

குழந்தைகளுக்காகவும் வீரேசலிங்கம் நூல் எழுதியுள்ளார். 'நீதிகதா மஞ்சரி' என்னும் கதை நூலும், 'நீதி தீபிகா' என்னும் கவிதை நூலும் குழந்தைகளின் உயர்வு கருதி அவரால் படைக்கப்பட்டவையாகும்.

தெலுங்கு மொழியில் புதுமைச் சிற்பியாக விளங்கியவர் வீரேசலிங்கம். இம்மொழி இலக்கிய வரலாற்றில் மிகவும் குறிப்பிடத்தக்க இடத்தைத் தம் எழுத்தின் திறனாலும் படைப்புகளின் எண்ணிக்கையாலும் பெற்றிருப்பவர், அவர்.

**மறைவு**

1919ஆம் ஆண்டு ஏப்பிரல் திங்களில் வீரேசலிங்கத்தினுடைய எழுபத்தோராவது பிறந்தநாள் விழா இராசமுந்திரியில் மிகவும் அடக்கமாகவும் சிறப்பாகவும் கொண்டாடப்பெற்றது. அடுத்த மூன்றாம் நாள் அவர் சென்னைக்குப் பயணமானார். சென்னையில் எழும்பூரில் உள்ள அவரது இல்லமான 'வேத விலாச'த்தில் தங்கி 'ஆந்திரப் புலவர் வரலாற்று' நூலின் இரண்டாம் பகுதியை மீண்டும் பதிப்பிப்பதற்காகத் திருத்திக் கொண்டிருந்தார். ஆனால், அப் பணி முடிவதற்கு முன் அவர் மரணம் அடைந்தார். தெலுங்கு மொழிக்கும் ஆந்திர நாட்டுக்கும் புத்துயிர் கொடுத்த வீரேசலிங்கம், உடல்நிலை மிகவும் சீர்கெட்டதால் 1919 மே இருபத்தேழாம் நாள் காலை பொன்னுடல் நீத்துப் புகழுடம்பெய்தினார்.

ஆந்திர நாட்டின் எழுச்சிக்கு விடிவெள்ளியாகத் திகழ்ந்து, தெலுங்கு மொழிப் புத்திலக்கியத்தின் முன்னோடியாக விளங்கி, இந்திய மகளிரின் உயர்வுக்குச் சீரிய வகையில் தொண்டாற்றிச் சிறந்த வீரேசலிங்கம் 'புதிய ஆந்திரத்தின் தலைமகன்' என்னும் சிறப்புக்கு உரியவர் என்று கூறலாம்.

# 7. கோகலே

பாரதத்திற்கு விடுதலை வாங்கித் தந்த அண்ணல் காந்தி யடிகள், திரு. கோபாலகிருட்டின கோகலே அவர்களைத்தாம் அரசியலில் தமக்குக் 'குரு' என்று கூறிப் பின்பற்றினார். இந்திய மக்களின் மேம்பாட்டிற்காக அல்லும் பகலும் அயராது பாடுபட்ட சமுதாயத் தொண்டர்களுள் கோகலே ஒருவர்.

## தோற்றம்

கோகலே, மேதைகள் பலரைத் தந்த மராத்திய மண்டலத்தில் இரத்தினகிரி எனும் மாவட்டத்தின் ஒரு பகுதியாகிய 'சிப்லூன்' வட்டத்தில் 'கட்லுக்' எனும் ஊரில் 1866 ஆம் ஆண்டு மேமாதம் ஒன்பதாம் நாள் ஓர் எளிய குடும்பத்தில் பிறந்தார். அவரு டைய தந்தையார் காகால் என்னும் ஒரு சிறிய சமஸ்தானத்தில் வேலை செய்து வந்தார். பதின்மூன்றாம் வயதில் கோகலே தம் தந்தையை இழந்தார். ஆனாலும், அண்ணன் கோவிந்தராவ் அவரைப் பள்ளியில் சேர்த்து நன்கு படிக்கவைத்தார்.

அறிவும் ஆற்றலும் உடையவரான கோகலே கல்வியில் மிகுதியும் அக்கறை கொண்டவராக இருந்தார்; இயற்கையான அறிவோடு சிறந்த நினைவாற்றல் உடையவராக இளமையில் திகழ்ந்த கோகலே படிப்படியாகக் கல்வியில் முன்னேறி வந்தார். 1881 ஆம் ஆண்டு மெட்ரிகுலேஷன் என்னும் பள்ளி யிறுதி வகுப்பில் தேர்ந்தார். கோலாப்பூர் என்னுமிடத்தில் எஃப். ஏ. தேர்வில் வெற்றி பெற்றார். தம் பதினெட்டாம் வயதில் பம்பாய் எல்பின்ஸ்டன் கல்லூரியில் பயின்று பி. ஏ. பட்டமும் பெற்றார்.

தொடர்ந்து சட்டம் அல்லது வேறு ஏதேனும் கல்வி பெற வேண்டும் என்ற எண்ணம் ஒருபக்கம் இருந்தாலும், பொது வாழ்வில் அவருக்கு நாட்டம் மிகுதியாக இருந்ததனால் அதற்கு மேல் அவரால் கல்வியைத் தொடர முடியவில்லை.

## ஆசிரியப் பணி

எளிய குடும்பத்தில் பிறந்தவர்கள் தம் படிப்பு முடிந்ததும் நல்ல பணியொன்றில் அமர்ந்து நிலையான ஊதியம் பெற முயலுவது வழக்கம். ஆனால், கோகலே பொதுவாழ்வில் ஈடுபடும் வகையில் ஒரு பணியை எதிர்பார்த்து இருந்தார். அன்றைய சமுதாயச் சூழ்நிலையில் மக்களை நேர்வழிப் படுத்தச் சிறந்த தலைவர்கள் தேவைப்பட்டனர். கோகலே போன்றவர்களின் பணியைப் பாரத நாடு மிகவும் வேண்டி நின்றது.

வாணிக நோக்கோடு இந்தியா வந்த கம்பெனியார் ஆட்சி முடிந்து, ஆங்கிலேய அரசே தன் நேரடிப் பார்வையில் நம் நாட்டை ஆண்டுகொண்டிருந்தது. நாட்டு மக்களுக்குப் போதுமான கல்வி வாய்ப்பினை அன்றைய அரசு கொடுக்க வில்லை. வறுமையிலும் பிணியிலும் வேறு துன்பங்களிலும் சிக்கித் தவித்த மக்கள் ஒற்றுமையும் குன்றிப் பிளவுபட்டு வாழ்ந்து வந்தனர். ஏற்றத் தாழ்வுகளினாலும் சாதி சமயப் பூசல் களினாலும் பிரிந்து வாழ்ந்த மக்களை ஒன்றுபடுத்தி உயர்த்தும் பெரும்பணியில் புதியதாகத் தொடங்கப் பெற்ற இந்தியக் காங்கிரசு இயக்கம் முனைந்து நின்றது. நாடெங்கும் தலைவர் பலர் தோன்றி மக்கள் முன்னேற்றத்தில் நாட்டம் செலுத்தினர். மராத்திய மாநிலத்தில் மகாதேவ கோவிந்த இரானடேவும் பால கங்காதர திலகரும் சிறந்த பணியாற்றிப் பேரும் புகழும் பெற்றனர். அவர்களோடு ஒருவராய் நின்று உயர்வு பெற்ற பெருமகனார், கோபாலகிருட்டின கோகலே ஆவார்.

திலகரும் அகர்கர் என்ற பேராசிரியரும் நண்பர்கள் சிலருடைய துணையோடு 'தென்னகக் கல்விச் சங்கம்' (Deccan Education Society) என்ற ஒன்றை நிறுவினர். இச் சங்கம் நடத்திவந்த 'பெர்குசன் கல்லூரி' என்னும் உயர்கல்வி நிறுவனத்தில் கோகலே ஆசிரியராகச் சேர்ந்தார். உயர்ந்த ஊதியம் தரும் பணியில் அவர் சேர்ந்திருக்க முடியும். ஆனால், மக்கள் தொண்டையே பெரிதும் கருத்தில் கொண்டிருந்த கோகலே இதனை விரும்பித் தேர்ந்தெடுத்தார். கணிதம், ஆங்கிலம், பொருளாதாரம் எனப் பல பாடங்களையும் மாறி மாறி நடத்துகின்ற வாய்ப்பு அவருக்குக் கிடைத்தது. மாதம் ரூ. 75 மட்டுமே ஊதியமாகப் பெற்றுக்கொண்டு ஆர்வத்தோடு இக் கல்விப்பணியைச் செய்துவந்தார் கோகலே.

தென்னகக் கல்விச் சங்க வளர்ச்சிக்காக நிதி திரட்டுவதில் பெரும் அக்கறை காட்டினார் கோகலே. அவருடைய உழைப்பினாலும் முயற்சியினாலும் அன்பர்களிடம் இரண்டு இலட்சம் பொற்காசுகள் நன்கொடையாகப்பெற்றார். கோகலே யின் தொண்டுள்ளத்திற்கு இஃது ஒரு நற்சான்றாகும்.

மாணவருக்கு இடையில் சிறந்த ஆசிரியர் என்னும் பெயர் பெற்ற கோகலே, அகர்கர் இறந்தபோது கல்லூரித் தலைவராக இருக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளப்பட்டார். ஆனால், அவரோ அதனை மறுத்துக் கல்லூரியின் முன்னேற்றத்தைக் கருத்திற்கொண்டு தம் மாணவர் டாக்டர் பராஞ்சிபே என்பாரைத் தலைவராக ஆக்கினார். அவரது நற்பண்புக்கு இதனை எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.

## இதழாசிரியர்

கல்லூரி ஆசிரியராக இருந்தபோதே கோகலே சில இதழ் களின் ஆசிரியராகவும் பணியாற்றினார். பேச்சு வன்மை யோடு எழுத்துவன்மையும் மிக்க கோகலே, 1889ஆம் ஆண்டு அகர்கருடன் இணைந்து சுதாரக் என்ற இதழொன்றைத் தொடங்கி நடத்தினார். ஆங்கிலத்திலும் மராத்தியிலுமாகக் கட்டுரைகளைத் தாங்கி இவ்விதழ் வெளிவந்தது. தம் எண்ணங்களை வெளியிடுவதற்கு இத் தாள் அவருக்குப் பெரிதும் பயன்பட்டது. பின்னர், 1905ஆம் ஆண்டில் 'சர்வன்ட் ஆஃப் இந்தியா' இதழிலும் கோகலே கட்டுரைகளை எழுதினார். 'சர்வஜனிச் சங்கம்' நடத்திய இதழின் ஆசிரியராகவும் அவர் இருந்திருக்கிறார்.

தாம் எழுதும் ஒவ்வோரெழுத்தும் மிகவும் சிறப்பாக இருக்க வேண்டுமென்பதில் அக்கறை கொண்டவர் கோகலே. சில நேரங்களில் எழுதுவதற்கு முன்னர்ச் சிந்திக்க ஆரம்பித்து உலவிக்கொண்டே இருப்பார். ஒரு முறை கூண்டில் அடை பட்ட புலிபோல் அவர் உலவிக்கொண்டிருந்ததைக் கண்ட உற்ற நண்பரொருவர் அவரைப் பார்த்து, 'நீங்கள் எழுதும் ஒவ்வொரு வரியும் உங்கள் மரணத்துக்குப்பின் அச்சாகிப் பாராட்டப்படவேண்டும் என்பதற்காக இவ்வளவு வேதனைப் படுகிறீர்களோ?' என்றாராம்.

## அரசியலில் கோகலே

இளமையிலிருந்தே அரசியலில் ஆர்வங் காட்டிய கோகலே இந்திய தேசியக் காங்கிரசு இயக்கத்தில் சேர்ந்து அதன் மாநாடு

களில் பங்கேற்றுச் சொற்பொழிவுகள் செய்துவந்தார். 1895ஆம் ஆண்டில் காங்கிரசின் இணைச்செயலராக ஆனார். 1899ஆம் ஆண்டில் பம்பாய்ச் சட்டமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பெற்றார். இரண்டாண்டுக் காலம் சிறப்புடன் பணியாற்றினார்; பின்னர் 1902ஆம் ஆண்டில் மத்திய சட்டமன்ற (இம்பீரியல் லெஜிஸ்லேடிவ் கவுன்சில்) உறுப்பினர் ஆனார். அரசியல் பணிகளின் காரணமாகக் கோகலேவின் பெயரும் புகழும் பரவின. நாட்டு மக்களால் சிறந்த தலைவராக அவர் ஏற்றுக்கொள்ளப்பட்டார். 1905ஆம் ஆண்டு காங்கிரசு இயக்கத்தின் தலைவரானார். அப்போது அவருக்கு வயது முப்பத்தொன்பது தான்! காசி மாநகரில் காங்கிரசு மாநாடு அவர் தலைமையில் மிகவும் சிறப்பாக நடந்தேறியது.

வங்கப் பிரிவினை குறித்தும், சுதேசிய உணர்வுகள் குறித்தும் இந்திய மக்களின் கல்வி உயர்வு குறித்தும் காசி மாநாட்டில் அவர் பேசியவை வந்திருந்த அனைவராலும் பாராட்டப்பெற்றன.

மத்திய சட்ட மன்றத்தில் கோகலேவின் அரும்பணி கண்டு ஆங்கிலேயரே வியந்தனர். அப்போது இந்தியாவின் தலைமைச் சட்ட மன்றம் கல்கத்தாவில் இயங்கியது; பின்னரே அது தில்லிக்கு மாற்றப்பட்டது. எதிர்க்கட்சித் தலைவராக விளங்கிய கோகலே இராணுவச் செலவைக் குறைக்க வேண்டும் என்பதுபற்றி விரிவாகப் பேசினார். இந்தியருக்கே இராணுவத்தில் உயர்நிலையும் தகுதிகளும் தரப்படல் வேண்டும் என்றும் முறையிட்டார். 'ஆங்கில அரசு பிற நாடுகள்மீது தொடுக்கும் போர்களுக்காக இந்திய மக்களிடம் திரட்டப்படும் வரிப்பணத்திலிருந்து செலவழிப்பது எந்த வகையில் பொருத்தமாகும்?' என்று அழுத்தமாக வினவினார்.

பொருளாதாரத் துறையில் மிகவும் வல்லவரான கோகலே ஆங்கிலேயரின் வீண் செலவுகளைப்பற்றியும் இந்தியருக்கு அவர்கள் நலன் விளைவிக்காதது குறித்தும் உணர்ந்து பேசினார். 'அரசின் ஆடம்பரச் செலவுகள் காரணமாகவே வருவாய் போதுமானதாகத் தெரியவில்லை. உப்புமீது வரியை உயர்த்தியது ஆங்கில அரசு. சிக்கனமாக அரசு நடத்துகொண்டால் இந்த வரி தேவையில்லை' என்று ஆணித்தரமாக வாதாடினார் கோகலே.

வாழ்க்கைத் தரத்தில் மக்களின் நிலை குறித்தும் மத்திய சட்டமன்றத்தில் அவர் எடுத்துக் கூறினார். உள்நாட்டில்

தொழில்வளம் பெருக்கிட அரசு முன்வரவேண்டும் என்று வலியுறுத்தினார்; இந்தியப் பொருளாதாரம் படிப்படியாக ஆங்கிலேயரால் சுரண்டப்படுகிறது என்றும் அதனைத் தடுத்திட வேண்டும் என்றும் மக்களுக்கு எடுத்துரைத்தார்.

கல்விப் பிரச்சினை குறித்தும் ஆர்வமாகப் பேசியவர் கோகலே. ஊர்கள்தோறும் இலவசக் கல்விக்கூடங்களை அரசே தொடங்க வேண்டும் என்று வற்புறுத்தினார்; சிறுவர் சிறுமியருக்குக் கல்வி கட்டாயமாக்கப்பட வேண்டும் என்றார்; அதற்காகச் சட்டம் இயற்றவேண்டும் என்றும் கூறினார்; கல்வி மேம்பாட்டினால் சமுதாயம் சிறக்கும் என்பதைத் தொடர்ந்து விளக்கி வந்தார்.

## வெல்பி குழு

இந்திய நாட்டின் நிதிநிலை குறித்து ஆராய்ந்து தக்க பரிந்துரைகள் செய்வதற்காக வெல்பி (Welby) என்பார் தலைமையில் ஒரு குழுவினை ஆங்கில அரசு ஏற்படுத்தியது. இக் குழுவினிடம் இந்திய மக்களின் சார்பாகச் சான்று கூறக் கோகலே இங்கிலாந்து சென்றார். 'இந்திய வருவாய் இந்தியாவிற்கு மட்டுமே செலவு செய்யப்படுதல் வேண்டும்; அதனை இங்கிலாந்தில் வீணாகச் செலவழித்தல் தகாது; இந்தியச் சட்ட மன்றங்களுக்கு இந்திய மக்களையே தேர்ந்தெடுக்கச் சட்டம் கொண்டுவர வேண்டும்' என்று பல கருத்துகளைக் குழுவின் முன்னர்க் கோகலே அமைதியாகவும் அஞ்சாமலும் எடுத்துரைத்தார். 1897ஆம் ஆண்டில் வெல்பி குழுவின் முன்னர்க் கோகலே பேசினார்.

## மிதவாதமும் தீவிரவாதமும்

கர்சன் பிரபு வங்கப் பிரிவினையைத் திணித்ததால் இந்தியருள் பலர் சினமுற்றனர். காங்கிரசு இயக்கத்திலேயே இரு பிரிவுகள் உண்டாயின. 'சுயராச்சியம் எமது பிறப்புரிமை' என்று சிலர் முழங்கலாயினர்; அந்நிய நாட்டுப் பொருள்களைப் புறக்கணித்து உள்நாட்டுப் பொருள்களையே வாங்க வேண்டும் என்னும் உணர்வு கொண்டனர். திலகர் முதலிய தலைவர்கள் ஆங்கில அரசைக் கடுமையாக எதிர்த்தனர். எனவே, அவர்களைத் 'தீவிரவாதிகள்' என்றனர்.

கோகலே தீவிரவாதத்தை ஏற்கவில்லை. 'நமது பாரத நாடு ஒரு தியாக பூமி. இந் நாடு ஆயிரம் ஆண்டுகளாக

உலகிலுள்ள வெவ்வேறு இனத்தவரை வரவேற்று உபசரித்துள்ளது. ஆகையால், சமாதானமும் சமுதாய நன்மையுமே நம் குறிக்கோள்' என்று மிதவாதம் பேசினார் கோகலே. 1907ஆம் ஆண்டு நடந்த சூரத் மாநாட்டில் இப் பிரிவு முழுமையுற்றது. எனினும், கோகலே இறுதிவரை காங்கிரசின் நடவடிக்கைகளில் கலந்துகொண்டு ஒரு பெருந்தலைவராகவே விளங்கினார்.

## இந்திய ஊழியர் சங்கம்

கோகலே இந்திய மக்களின் முன்னேற்றத்திற்காக 1905ஆம் ஆண்டு 'இந்திய ஊழியர் சங்கம்' (Servants of India Society) என்ற அமைப்பை உருவாக்கினார். தன்னலமின்றிச் சாதிவேற்றுமை பாராது தொண்டு புரிய வேண்டும் என்பதே இச் சங்கத்தின் குறிக்கோள். இந்தச் சங்கம் பல ஊர்களில் பள்ளிகளைத் தொடங்கியது. வெள்ளத்தாலும் பஞ்சத்தாலும் கொடுமைகள் நேர்ந்தபோது இச் சங்கம் முன்வந்து மக்களுக்கு நல்ல தொண்டு ஆற்றியது. ஆதிவாசிகள், பிற்பட்டவர்கள் ஆகியோரின் முன்னேற்றத்திலும் சங்கஉறுப்பினர்கள் நாட்டம் கொண்டனர். மக்கள் இச் சங்கத்தின் பணியை மிகுதியும் போற்றினர். தமிழகத்தைச் சேர்ந்த அறிஞர் வி. எஸ். சீனிவாச சாஸ்திரியார், கோகலேவிற்குப் பின்னர் இந்தச் சங்கத்தின் தலைவராக விளங்கி அதனைச் சிறப்பாக நடத்திவந்தார்.

## தென்னாப்பிரிக்காவில் கோகலே

தென்னாப்பிரிக்காவில் குடியேறி உழைத்த இந்திய மக்களின் நிலை மிகவும் வருந்துதற்குரியதாக விளங்கியது. தம் நாட்டை வளப்படுத்தியதற்கு நன்றி தெரிவிக்காததோடு மட்டுமன்றி, இந்தியரைக் கொடுமைப்படுத்தினர் ஆங்கிலேயர்; மனிதரென்ற எண்ணமே இல்லாமல் இந்தியரை ஒதுக்கியும் ஒடுக்கியும் வந்தனர். இந்தியர் வாணிகம் செய்யக்கூடாது; புகைவண்டியிலோ பேருந்திலோ பயணம் செய்வதும் கூடாது; வெள்ளையர் குடியிருப்பருகே அவர்கள் வாழ்தலாகாது; பள்ளிக்கூடங்களில் பயில்வதற்கு இந்தியர்க்கு வாய்ப்பில்லை; தலைவரி (Poll Tax) என்ற வரியை இந்தியர் கட்டவேண்டும். இதுதான் அன்றைய இந்தியரின் நிலை.

இந்த நிலையை மாற்றிடக் காந்தியடிகள் தலைமையில் இந்தியர் ஒன்று திரண்டனர்; போராட்டங்களில் கலந்துகொண்டு சிறைபுகுந்தனர். காந்தியடிகள் அரசியல் உலகில்

பெரும்புகழ் பெறுவதற்குத் தென்னாப்பிரிக்கப் போராட்டங்கள் காரணமாக அமைந்தன. இந்த நிலையில் 1912ஆம் ஆண்டு இந்திய அரசின் வேண்டுகோளின்படி கோகலே தென்னாப்பிரிக்கா சென்றார். நிலைமைகளை அறிந்து வருவதற்காகச் சென்ற கோகலே அரசுக்குப் பல பரிந்துரைகளைச் செய்தார். அவருடைய வருகையால் தென்னாப்பிரிக்க இந்தியரின் தொல்லைகள் ஓரளவு குறைந்தன.

### காந்தியடிகளும் கோகலேவும்

கோகலேவிடம் காந்தியடிகளுக்கு மிகுந்த பற்றும் பாசமும் உண்டு. முன்னரே இருவருக்கும் அறிமுகம் இருந்தாலும், தென்னாப்பிரிக்காவில்தான் நெருங்கிய தோழமை உண்டாயிற்று. கோகலே அவர்களின் இயல்பான பொதுநோக்கமும், அமைதி முறையும், ஒழுங்கு நெறிகளும், பகுத்தறிவு உணர்வும் காந்தியடிகளைக் கவர்ந்தன. காந்தியடிகளின் பல செயல்களைக் கோகலே வரவேற்றுப் பாராட்டினார். கனிவான பேச்சு, உறுதியான நெஞ்சம், நேர்மை உணர்வு ஆகியவற்றைக் கோகலேவிடமிருந்து காந்தியடிகளும் பெற்றுக்கொண்டார் எனலாம்.

### பிற பணிகள்

அரசின் பொருளாதாரக் கொள்கைகளையும் வரி விதிப்புகளையும் கண்டித்துப் பேசிய கோகலே, சமுதாயத்தில் மக்களைச் சீர்திருத்தும் பணியிலும் நாட்டம் கொண்டார்; மக்கள் நலம்பெறத் தொண்டாற்றுவது தமதுகடன் என்பதனை உணர்ந்தார். சட்ட மன்றத்திலும் மத்திய அவையிலும் அவர் ஆற்றிய பணிகள் அனைவராலும் பாராட்டப் பெற்றன. அவர் 1895ஆம் ஆண்டு பம்பாய்ப் பல்கலைக் கழகச் 'செனட்' உறுப்பினராக ஆனார்; அரசு பணிக்கான வேலை வாய்ப்புக் குழுவின் உறுப்பினராகவும் அமர்த்தப்பட்டார். நேர்மை, உழைப்பு, அறிவாற்றல் ஆகிய அருங்குணங்களினால் கோகலே இப் பணிகளைச் செம்மையுறச் செய்தார்.

### பண்புகள்

கோகலேவின் அரிய பண்புகள் அக்காலத் தலைவர்கள் அனைவரையும் கவரும் வகையில் அமைந்தன. மக்கள் அவருடைய இனிய பண்புகளைக் கண்டு பெரிதும் போற்றிப் பாராட்டினர். மாணவப் பருவத்திலேயே அவர் நேர்மையும் பொறுப்புணர்ச்சியும் மிக்கவராக விளங்கினார்.

ஏழ்மையில் தம் அண்ணனின் ஆதரவில் படித்துக் கொண்டிருந்த கோகலே வீட்டில் மண்ணெண்ணெயை மிச்சப்படுத்த வேண்டி ஊர்ப் பொதுவிளக்கில் படித்துப் பள்ளி வகுப்புகளில் தேர்ச்சி பெற்றார். தம்மால் அண்ணன் குடும்பத்திற்குத் தொல்லை வரக்கூடாது என்பதில் அவர் அக்கறை கொண்டிருந்தார்.

பூனாவில் 'பிளேக்' நோயால் மக்கள் அவதியுற்றபோது இராணுவ வீரர்கள் மிகவும் கொடுமையாக நடந்துகொண்டார்கள் என்று நண்பர்கள் கடிதம் எழுதியதால் கோகலே உடனே ஆங்கில ஏடுகளில் அதுபற்றி எழுதிவிட்டார். ஆனால், பின்னர் அச் செய்தி ஆதாரமற்றது என்று தெரிந்ததும் மன்னிப்புக் கேட்டுக்கொண்டார். இந் நிகழ்ச்சி அவரது பெருந்தன்மையைப் புலப்படுத்துவதன்றோ?

உயர்வகுப்பில் இடம் பதிவு செய்து புகைவண்டியில் ஒருமுறை கோகலே வந்துகொண்டிருந்தபோது, உடன் வந்தவர்களுக்காகத் தம் வசதிகளைக் குறைத்துக்கொண்டு அவர்களுக்குத் தம் இடத்தையே தந்துவிட்டார்.

சாதி மத வேறுபாடுகளைப்பற்றிக் கண்டித்துப் பேசியும் எழுதியும் வந்தவர் கோகலே. திருமதி ரே என்பவர் ஒரு கடிதம் வாயிலாகச் 'சாதி மதத்தை எதிர்ப்பவராகிய கோகலே, தாம் ஒரு பிராமணர் என்று காட்டுவதற்காக ஏன் பூணூல் அணிய வேண்டும்?' என்று கேட்டிருந்தார். அன்று முதல் கோகலே இனிப் பூணூல் அணிவதில்லை என்று அதனை அறுத்தெறிந்துவிட்டார். தமக்கிருக்கும் கடவுள் நம்பிக்கையைப்பற்றி நான்கு பேர் அறியுமாறு அவர் வெளியே காட்டிக்கொண்டதில்லை.

மகாதேவ கோவிந்த இரானடே என்னும் தம் குருவின்மீது கோகலேவிற்கு மிகுந்த பற்று உண்டு. கோகலேவைவிட இருபத்தைந்து ஆண்டுகள் மூத்தவரான இரானடே புகழ்பெற்ற நீதிபதியாக இருந்தவர்; அவரிடமிருந்தே சட்ட நுணுக்கங்களையும் விண்ணப்பங்கள் . எழுதும் சில முறைகளையும் அறிந்துகொண்டார் கோகலே. அரசியல் துறையில் திறமையும் அறிவுக்கூர்மையும் பெறுவதற்கு இரானடேவின் தொடர்பே முக்கியக் காரணமாக அமைந்தது. இரானடேவிடம் கோகலே கொண்டிருந்த ஆசிரியப் பற்றுக்கு — குருபக்திக்கு—எல்லையே இல்லை.

கர்சன் பிரபு காலத்தில் கோகலேவிற்குச் சி.ஐ.ஈ. என்னும் சிறப்புப் பட்டம் அளிக்கப்பட்டது. பின்னர் ஆர்டிஞ்சு பிரபு

(Lord Hardinge) அரசப் பிரதிநிதியாக இருந்தபோது கே. சி. ஐ. ஈ. என்னும் சிறப்புப் பட்டமும் அளிக்கப்பட்டது. ஓர் எளிய இந்திய மகனாகவே தாம் இருக்க விரும்புவதாக அவர் பதிலளித்து அதனை ஏற்க மறுத்துவிட்டார்.

மின்டோ-மார்லி சீர்திருத்தத்தின்படி அமைச்சரவையில் இந்தியர் இடம்பெறுவதற்கு வாய்ப்புக் கிடைத்தது; கோகலே அமைச்சராக வேண்டும் என்று பிறர் கேட்டபோது அவர் உறுதியாக ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டது அவர்தம் தந்நல மற்ற உள்ளத்தையே காட்டுகிறது.

இந்திய நிதி அமைச்சராக இருந்த சர் வில்சன் என்பவர் கோகலேவின் அறிவாற்றலைக் கண்டு மிகவும் வியந்து, 'ஒரு கோகலே நம்மை இப்படி ஆட்டி வைக்கிறாரே! இந்தியாவில் இன்னும் இருபது கோகலே இருந்தால் நம் கதி என்னவாகும்?' என்று கூறினாராம். ஆட்சி நிர்வாகத்திறனில் சிறந்த ஆங்கி லேயரே பாராட்டும் வண்ணம் கோகலேவின் சட்டமன்றப் பணிகளும் பொதுப்பணிகளும் மிக உயர்ந்து விளங்கின.

மறைவு

கிருட்டினராவ் கோகலேவிற்கும் சத்தியபாமா அம்மை யாருக்கும் மகனாகத் தோன்றி, அண்ணன் கோவிந்தராவின் அரவணைப்பில் வளர்ந்து, இளவயதிலேயே அருமை மனைவியை இழந்து, பின்னர்ப் பொதுப்பணியில் ஆர்வங் கொண்டு அயராது உழைத்து. ஏழுமுறை இங்கிலாந்துக்குச் சென்று சிறப்புடன் பணியாற்றி மக்களுக்காகவே வாழ்ந்த கோபாலகிருட்டின கோகலே 1915ஆம் ஆண்டு பிப்பிரவரி பத்தொன்பதாம் நாள் இரவு மறைந்தார். மறைவதற்கு முன்னர்த் தம் மதிப்புக்கும் நட்பிற்கும் உரிய கவிக்குயில் சரோஜினி தேவி யாரிடம், 'எனக்கு மரண அழைப்பு வந்துவிட்டது' என்று சிறிதும் கலங்காமல் கூறினார். பிறந்தநாள் தொட்டு இறக்கும் நாள் வரையும் நெஞ்சம் தளராமல் உறுதியோடு உழைத்தவர் சமுதாயச் சீர்திருத்தச் செம்மல் கோகலே; 'தோன்றிற் புக ழொடு தோன்றுக' என்னும் கூற்றுக்கு இலக்கியமாகவே அவர் வாழ்க்கை இருந்தது எனலாம்.

# 8. அண்ணல் காந்தியடிகள்

## காந்தி எனும் பேரொளி

இந்திய நாட்டின் இணையில்லாத் தந்தை அண்ணல் காந்தியடிகள், இந்த நாட்டின் அரசியல் விடுதலைக்காக மட்டுமன்றிச் சமுதாய மறுமலர்ச்சிக்காகவும் பாடுபட்ட சிந்தனைச் சிற்பி; சீர்திருத்தச் செம்மல் ஆவார். அதுமட்டு மன்றி இந்திய மக்களின் ஆன்மாவையே தட்டி எழுப்பி எழுச்சி பெறச் செய்த ஆன்மநேய அறவோர் ஆவார்.

## அன்றைய இந்தியாவின் அவல நிலை

அண்ணல் காந்தியடிகள் இந்த நாட்டில் தோன்றியபோது நாடு அடிமை இருளில் மூழ்கிக் கிடந்தது. ஒளியிழந்த வீடாக, உயிரிழந்த உடலாக, களைமலிந்த பயிராக, கவினிழந்த மலராக அல்லலுற்று ஏங்கித் தவித்துக்கொண்டிருந்தது. இந்திய மக்கள் சாதிகளாலும், மதங்களாலும், தீண்டாமைக் கொடுமை களாலும் பிளவுபட்டுக் கிடந்தார்கள்.

## அடிமை இந்தியாவில் அண்ணல் காந்தி

இத்தகைய அடிமை இந்தியாவில் அண்ணல் காந்தி குசராத் மாநிலத்திலுள்ள கத்தியவார் சிற்றரசிற்குட்பட்ட போர்பந்தரில் 1869ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 2ஆம் நாள் காபாகாந்திக்கும் புத்திலிபாய்க்கும் இளைய மகனாகத் தோன்றினார்.

மெலிந்த வடிவம், உச்சியில் குடுமி, ஒடுங்கிய முகம், ஊடுருவும் கண்கள், பயிலும் மாணவரோடும் பழகுவதற்கு நாணும் இயல்பு, அன்பும் வாய்மையும் அமைந்த பண்புகள், பாடநூல்களோடு பழகும் நட்பு—இவர்தாம் மோகனதாஸ் காந்தி.

## இளமையும் கல்வியும்

இத்தகைய இயல்பு வாய்ந்த அண்ணல் காந்தி, தம் இளமைப் பருவத்தில் ஒருபோது 'அரிச்சந்திரன்' நாடகத்தைக் கண்டார். அந் நாடகம் அவர்தம் உள்ளத்தில், எத்தகைய இடர்ப்பாடுகள் தோன்றினாலும் உண்மையினின்றும் தவறக் கூடாது என்ற உறுதியையும் மன எழுச்சியையும் உண்டாக்கியது. பள்ளிப்பருவத்தில் பதின்மூன்றாம் அகவையில் அவருக்கும் அதே அகவையுடைய கஸ்தூரிபாவுக்கும் திருமணம் நடைபெற்றது. படிப்பைத் தொடர்ந்து தம் பதினெட்டாம் அகவையில் பள்ளி இறுதி வகுப்பில் தேர்ச்சி பெற்றார்.

## இங்கிலாந்தில் சட்டக்கல்வி

அண்ணல் காந்தி 1889ஆம் ஆண்டு சட்டக் கல்வி பயில இங்கிலாந்திற்குச் சென்றார். செல்வதற்கு முன்னர்த் தம் அன்னையாரிடம் பிற மாதரையும், மதுவையும், ஊனையும் தொடுவதில்லை என்று உறுதியளித்தார். தாம் இங்கிலாந்திலிருந்தபோது தாங்க முடியாத குளிரால் நடுக்குற்றபோதும் மரக்கறி உணவு கிட்டாமல் அல்லலுற்ற போதும் தம் தாய்க்குத் தந்த உறுதிமொழியில் தவறவில்லை.

அண்ணல் காந்தி வழக்கறிஞர் தேர்வுக்குரிய எல்லா நூல்களையும் படித்துத் தேர்ச்சி பெற்று 1891ஆம் ஆண்டில் இந்தியாவிற்குக் கப்பல் ஏறினார். அவருக்கு அதிர்ச்சி தரும் செய்தியொன்று காத்திருந்தது அன்போடு வளர்த்து ஆளாக்கி இங்கிலாந்திற்கு அனுப்பிய தம் உயிரனைய அன்னை மறைந்துவிட்ட செய்தியறிந்து உள்ளம் மாழ்கினார். நெஞ்சம் நெகிழ்ந்துருக, இரு கண்ணும் நீர் வார, அஞ்சி உடல் நடுங்க, ஆறாத் துயருழந்தார். பம்பாய்த் துறைமுகத்தில் பார்க்கவந்த அவர் தமையன் கண்ணீரால் அவரை வரவேற்றார்; அன்னை கதையுரைத்தார். சாதி விலக்காலும் தாங்காத துயராலும் கேடு விளைந்ததெனத் தெளிவாகச் சொல்லிவிட்டார்.

## தென்னாப்பிரிக்காவில் அண்ணல் காந்தி

அன்னையை நினைத்து உருகும் அண்ணலின் துயரை மாற்ற அவரைத் தென்னாப்பிரிக்காவுக்கு அனுப்பத் தமையன் திட்டமிட்டார். அண்ணல் 1893ஆம் ஆண்டு தாதா அப்துல்லாவின் வணிக நிறுவன வழக்குத் தொடர்பாகத் தென்னாப்பிரிக்காவுக்குப் பயணமானார்.

### முதல் சொற்பொழிவு

வழக்கறிஞர் மோகனதாஸ் காந்தி, தாதா அப்துல்லா வணிக நிறுவனத்தைச் சேர்ந்த தையூப் சாயபைக் கண்டு அவர் நட்பைப் பெற்றார். அவர் உதவியோடு பிரிட்டோரியாவில் ஒரு முஸ்லிம் வணிகரின் வீட்டில் 1893-ல் இந்தியரின் கூட்டத்தைக் கூட்டித் தம் முதற் சொற்பொழிவை நிகழ்த்தினார். அப்போது இந்தியர்தம் ஒற்றுமைபற்றியும் இந்தியரின் உரிமையைப் பாதுகாக்கவும் இந்தியருக்கிழைக்கப்படும் தீமைகளை முறையிடவும் ஒரு கழகம் அமைக்கவேண்டுமென எடுத்துரைத்தார். இந்தியரிடையே ஒரு புதிய ஆர்வம் பீரிட்டெழுந்தது. உடனே சிறிய அளவில் ஓர் அமைப்பு உருவாக்கப்பட்டது. அது நாளடைவில் 'நேட்டால் இந்தியர் பேரவை' என்னும் பெயரோடு தன் பணியைத் தொடர்ந்தது.

### முடிந்தது வழக்கு, முகிழ்த்தது உறவு

அண்ணல் காந்தி, அப்துல்லா சேட்டிற்கும் தையூப் சாயபிற்கும் இடையே நீண்ட நாள்களாக நடந்த வழக்கை வழக்கு மன்றத்திற்கு வெளியிலேயே அமைதி முறையில் தீர்த்துவைத்துப் பழைய உறவைப் புதுப்பித்தார்.

### பயணம் தடைபட்டது

வந்த வேலை முடிந்தது. அண்ணல் காந்தி இந்தியாவிற்குப் புறப்பட ஆயத்தமானார். வழியனுப்பு விழாவில் எண்ணற்றோர் தங்கள் அன்புக் காணிக்கையாக விலையுயர்ந்த நகைகளையும் தொகைகளையும் தந்தார்கள். அண்ணல் காந்தி அவற்றைச் சமூகப் பொதுப்பணிக்கெனத் திருப்பித் தந்துவிட்டார். விழாவிலே இந்தியரின் வாக்குரிமையைப் பறிக்கும் சட்டம், நேட்டால் சட்டமன்றத்தில் நிறைவேற இருக்கிறது என்ற அதிர்ச்சி தரும் செய்தி அறிவிக்கப்பட்டது. அது கேட்ட மக்கள் அண்ணல் காந்தி தம் பயணத்தைக் கைவிடவேண்டும் என்று வேண்டினர். அந்த அன்பு வேண்டுகோளை எவ்வாறு மறுப்பார்?

### தோல்வியில் பிறந்த வெற்றி

வாக்குரிமையைப் பறிக்கும் சட்டத்தின்மீது நடைபெறும் பேச்சுகளை நிறுத்திவைக்குமாறு தென்னாப்பிரிக்க அரசுக்கு வேண்டுகோள் விடப்பட்டது. எனினும் சட்டம் நிறைவேறிவிட்டது. இம் முயற்சியில் தோல்வி ஏற்பட்டாலும் ஒன்றுக்

கொன்று முரண்பட்ட இருபது, முப்பது பிரிவினராக இருந்த டர்பன்வாழ் இந்தியர் முதல்முறையாக ஒன்றுகூடும் நல்வாய்ப்பு ஏற்பட்டது. இதைத் தோல்வியில் பிறந்த வெற்றி என்று கூறலாமன்றோ?

## அண்ணல் புகழுக்கு வித்திட்ட தமிழன்

ஒரு நாள் பாலசுந்தரம் என்ற தமிழ்த் தொழிலாளி ஐரோப்பியச் செல்வர் ஒருவரால் கடுமையாகத் தாக்கப்பட்டு இரு பற்கள் இடம்பெயர, வாயினின்றும் செந்நீர் ஒழுகத் தேம்பித் தேம்பி அழுதவாறு அண்ணல் காந்தியின் முன்னே வந்து நடந்ததைப் பணிவோடு சொன்னார். அது கேட்ட காந்தியடிகள் மருத்துவச் சான்றோடு நீதிபதியிடம் அழைத்துச் சென்று குற்றச்சாட்டிதழ் பிறப்பிக்கச் செய்தார். ஐரோப் பியருக்குத் தண்டனை கிடைக்கும் நிலை ஏற்பட்டது. தண் டனையைத் தவிர்த்து ஒப்பந்தத்திலிருந்து விடுபடச் செய்தால் போதும் என்று பாலசுந்தரம் வேண்டினார். அவர் வேண்டு கோளின்படி ஒப்பந்தத்தை வேறொருவர் பெயருக்கு மாற்றித் தந்ததோடு தமக்கு அறிமுகமான ஒருவரிடம் பாலசுந்தரத்தை வேலைக்கு வைத்துக்கொள்ளச் செய்தார். இச் செய்தி நாடெங்கும் பரவியது. கொடுமைக்கு ஆளாகும் ஏழைக் கூலிக்கு வாதாடுவதற்காக இந்தியத் துரை ஒருவர் இருக்கிறார் என்னும் செய்தி தென்னிந்தியாவிற்கும், அதன் தலைநகரான சென்னைக்கும் எட்டியது. தென்னிந்தியாவில் காந்தியின் புகழ் பரவியது. பின்னர்தான் வட இந்தியாவிற்குத் தெரிந்தது.

தென்னாப்பிரிக்காவில் தமக்குச் சொந்தமான நிலங் களிலிருந்து விரட்டப்பட்ட ஏழைத் தொழிலாளர்களுக்காக வாதாடி, இழந்த நிலங்களை மீட்டுத் தந்தார் அண்ணல். பிளேக் நோயால் தாக்குண்ட இந்தியருக்கு மருத்துவ உதவி செய்து காப்பாற்றினார்.

## இந்தியர் அடைந்த துன்பமும் அறப்போரும்

திரான்ஸ்வால் அரசினர் எட்டு அகவைக்கு மேற்பட்ட இந்தியர் தங்கள் பெயர்களைப் பதிவு செய்துகொள்ள வேண்டு மென்ற சட்டம் கொணர இருந்தனர். இச் சட்டம் நடை முறைக்கு வந்தால் நற்சான்றிதழ் இல்லாமல் எங்கும் நடமாட முடியாது. மீறுவோர் ஒறுப்புக்குள்ளாவர்.

திரான்ஸ்வால் நகரத்திற்குள் நுழைய நூறு பவுன்வரை கையூட்டு வழங்க நேர்ந்தது.

கிறித்தவத் திருமணச் சட்டமே செல்லுபடியாகும் என்று கேப் மாநில நடுவர் அளித்த தீர்ப்பால் இந்தியர் இழிநிலைக்கு உள்ளாக்கப்படுவர் என்ற அச்சம் தலைதூக்கியது.

இந்நிலையில் காந்தியடிகள் இந்தியரின் கூட்டத்தை ஜோகன்ஸ்பர்க்கில் இம்பீரியல் மண்டபத்தில் கூட்டிக் கிளர்ச்சி செய்ய வேண்டிய இன்றியமையாமை பற்றியும் அதனால் ஏற்படும் இன்னல்கள்பற்றியும் எடுத்துரைத்தார்.

1908 சனவரி 11ஆம் நாள் அறப்போர் தொடங்கியது. சட்டத்திற்குக் கீழ்ப்படிய மறுத்த குற்றத்திற்காக வழக்கு மன்றத்தில் நிறுத்தப்பட்டவர்களுள் காந்தியடிகளும் ஒருவர். காந்தியடிகள் நடுவரிடம் தாம் கடுமையாகத் தண்டிக்கப்பட வேண்டுமெனக் கேட்டுக்கொண்டார். இதனைக் கண்டு நடுவர் மட்டுமல்லர், நாடே வியந்தது. 1908ஆம் ஆண்டு அக்டோபரில் இரண்டாம் முறையும் 1909ஆம் ஆண்டு பிப்பிரவரியில் மூன்றாம் முறையும் காந்தியடிகள் சிறை புகுந்தார். இப் போராட்டத்தில் பெருவாரியாகப் பெண்களும் கலந்துகொண்ட நிகழ்ச்சி மிகவும் குறிப்பிடத்தக்கது.

### இந்தியர் துயர் நீக்கச் சட்டம்

இப் போராட்டத்தின் பயனாகக் காந்தியடிகட்கும், ஆங்கிலப் பிரதிநிதி ஸ்மட்சுக்கும் 1914-ல் ஓர் உடன்பாடு ஏற்பட்டது. இந்த உடன்பாட்டின் பயனாகப் பாராளுமன்றத்தில் இந்தியர் துயர்நீக்கச் சட்டம் நிறைவேறியது. இதன்படி (1) இந்திய இந்து, இஸ்லாமிய, பார்சித் திருமணங்கள் சட்டபூர்வமாக்கப்பட்டன. (2) இந்தியர்மீது விதிக்கப்பட்டிருந்த மூன்று பவுன் தலைவரியும் ஒழிக்கப்பட்டது. (3) இந்தியாவிலிருந்து ஒப்பந்தக் கூலிகள் கொண்டுவரப்படும் முறை 1920-க்குப்பின் நிறுத்தப்படும்.

இவ்வாறு அறப்போரானது ஒரு சிறந்த வெற்றியையும் வியப்பையும் உண்டாக்கியது. சட்டமறுப்பியக்கம் ஓர் ஆற்றல் வாய்ந்த கருவி என்பது உறுதிப்படுத்தப்பட்டுவிட்டது.

தென்னாப்பிரிக்காவில் இந்திய மக்கள் வெள்ளை முதலாளிகளால் விலங்கினும் தாழ்வாக மதிக்கப்பட்டனர். அவர்களுக்குப் பேச்சுரிமை இல்லை; எழுத்துரிமை இல்லை; குடியுரிமை இல்லை. இந்தியரின் அவலநிலை கண்ட அண்ணல் காந்தி அரியேறு எனக் கிளர்ந்தெழுந்து அவர்தம் குறைகளைப் போக்கத் துறைதோறும் தொண்டாற்றினார். முதலாளிகளின்

அடக்குமுறைக்குத் துணையாக இருந்த சட்டங்களைத் தகர்க்க அறப்போராட்டங்கள் நடத்தினார். அவர்தம் சீரிய தியாகத்தால் தென்னாப்பிரிக்க இந்தியர் அடைந்த நன்மைகளுக்கு அளவே இல்லை. தென்னாப்பிரிக்கத் தமிழருக்கு அண்ணல் காந்தியடிகள் தம் ஓய்வுநேரங்களில் தமிழ் கற்பித்தமை போற்றத்தக்க பெருமையுடையது.

தென்னாப்பிரிக்காவில் காந்தியடிகள் செய்யவேண்டிய கடமை முடிந்தது. 1914ஆம் ஆண்டு தென்னாப்பிரிக்காவிலுள்ள இந்தியரிடத்தில் பிரியாவிடை பெற்றுக்கொண்டு தம் குடும்பத்துடனும் இருபத்தைந்து தொண்டர்களுடனும் இந்தியாவிற்குப் பயணமானார் காந்தி.

## பெருமை மிகு வரவேற்பு

தென்னாப்பிரிக்காவில் இருபதாண்டுகள் தொண்டாற்றி இந்தியரைத் தலைநிமிரச் செய்துவிட்டுத் தியாகத் தழும்போடும் வெற்றிப் பெருமிதத்தோடும் பிரியாவிடைபெற்றுத் தாய்நாடு திரும்பிய காந்தியடிகளுக்குப் பம்பாய்த் துறைமுகத்தில் என்றுமில்லாத அளவு பெருங்கூட்டம் கூடிநின்று வரவேற்பு அளித்தது. 'மகாத்மா காந்தி வாழ்க' என்னும் பெருமுழக்கம் வானைப் பிளந்தது. இனி, இந்திய நாட்டிற்கு வழிகாட்டக் கூடியவர் காந்தி அண்ணல் ஒருவரே என்பதை அங்கு வந்திருந்தோர் உறுதியாக அறிந்துகொண்டனர்.

## ஓலைக் குடியிருப்பு

அண்ணல் காந்தியடிகளின் குடும்பத்தினர் குடியிருக்கக் குசராத் மாநிலத்தின் தலைநகரான ஆமதாபாத்தில் சபர்மதியாற்றின் ஓரத்தில் துறவிகட்கேற்ற ஓலைக் குடில்கள் அமைக்கப்பட்டன. தென்னாப்பிரிக்காவில் போனிக்ஸ் பண்ணையிலும் டால்ஸ்டாய் பண்ணையிலும் இருந்து பயிற்சி பெற்ற அறப்போர் வீரர் 25 பேரும் அக் குடும்பத்தில் அடங்குவர். அவர்களுள் பதின்மூவர் தமிழர். ஐவர் தென்னாப்பிரிக்கர். அவர்கள் பள்ளிக்கூடம் வைத்துப் பாடம் நடத்திச் சமூகப் பணிகளில் ஈடுபட்டுழைத்தனர்.

அங்கு அனைவரும் சமம். அக் குடும்பத்தில் தீண்டத்தகாதவர் குடும்பமும் சேர்த்துக்கொள்ளப்பட்டது. இராமகிருஷ்ண பரமஹம்சரே செய்யத் துணியாத புரட்சிகரமான செயலை அண்ணல் காந்தி செய்தார். அதனால் ஆமதாபாத்திலிருந்து சாதி இந்துக்களால் வந்த பொருள் வரவு தடை

பட்டது; நெருக்கடி மிகுந்தது. என்றாலும் அண்ணல் காந்தி அதைப்பற்றிக் கவலைப்படவில்லை. தக்க சமயத்தில் எதிர்பாராத வகையில் பெயர் தெரியாத முகமதிய அன்பர் ஒருவர் பெருந்தொகை கொடுத்துதவினார். அண்ணல் காந்தி நன்றிப் பெருக்கோடு அதனைப் பெற்றுக்கொண்டார். அகன்றது நெருக்கடி.

### பொதுவாழ்வின் தொடக்க விழா

1916-ல் காசியில் தேசிய இந்துப் பல்கலைக்கழகத்தில் அன்னி பெசன்ட் அம்மையார் தலைமையில் ஆடம்பரமாக நடைபெற்ற கூட்டத்தில் காந்தியடிகள் பேசினார். பொது மக்களின் ஒத்துழைப்பினாலேயே நாடு விடுதலை பெறமுடியும் என்றார். அப் பேச்சு இமயமுதல் குமரிவரை எதிரொலித்தது. கூட்டங்களில் பேச வேண்டும் என எண்ணற்ற கடிதங்கள் வந்து குவிந்தன. துறவிக்குரிய ஓலைக்குடிலில் அரசியலுக்குரிய அலுவல்கள் மிகுந்தன. இதனைக் காந்தியடிகளின் பொதுவாழ்க்கையின் தொடக்க விழா எனலாம்.

### சம்பரானில் அறப்போர்

1916 திசம்பரில் லக்னோவில் நடந்த தேசியப் பேரவைக் கூட்டத்தில் முதன்முதலாக நேரு காந்தியைக் கண்டார். கூட்டத்திற்கு வந்த சுக்லாவின் வேண்டுகோளுக்கிணங்கச் சம்பரான் மாவட்டத்தில் அவுரித் தோட்டத் தொழிலாளருக்காக அறப்போரை முதன்முதலாக அறிமுகப்படுத்தினார். ஆமதாபாத் ஆலைத் தொழிலாளருக்காக உண்ணாநோன்பை முதன்முதலாக மேற்கொண்டார். நல்ல முடிவுகள் ஏற்பட்டன.

### ஆங்கிலேயரின் நயவஞ்சகம்

அண்ணல் காந்தியடிகள் வெள்ளை உள்ளம் உடையவர். ஜுலு கலகத்தின் போதும் 1914-ல் நடந்த முதல் உலகப் போரின் போதும் காந்தி ஆங்கில அரசுக்கு உதவியாக மருத்துவப் படை அமைத்துப் பாடுபட்டார். 1918-ல் ஆங்கில—இந்தியப் பட்டாளத்திற்கு அரச நேயத்தோடு ஆள் சேர்க்கவும் பாடுபட்டார். அவற்றிற்கெல்லாம் கைம்மாறாக இந்தியாவுக்கு நன்மை கிடைக்கும் என நம்பினார். அண்ணலின் நம்பிக்கைக்கு விடுக்கப்பட்ட அறைகூவலைப்போல 1919ஆம் ஆண்டில் ஆங்கில அரசு ரவுலட் சட்டத்தைக் கொணர்ந்தது. அண்ணல் காந்தி ஏமாற்றமும் அதிர்ச்சியும் அடைந்தார். அதைச் சட்டமுறைப்படி நடந்த கேலிக்கூத்து என்றார்.

## ரவுலட்டை எதிர்த்து

ரவுலட் சட்டத்தை எதிர்த்து 1919 ஏப்பிரலில் நாடு தழுவிய கிளர்ச்சியில் ஈடுபட மக்களைக் கேட்டுக்கொண்டார். உணர்ச்சி வெள்ளம் கரைபுரண்டோடியது. உயிரிழப்புகளும் தவிர்க்க முடியாமற் போயின. காந்தியடிகள் சிறையிடப்பட்டார். பல்வேறிடங்களில் நடந்த வன்முறைகளைக் கேள்விப்பட்ட அண்ணல் காந்தி கிளர்ச்சியைத் திரும்பப் பெறுவதாக அறிவித்துவிட்டு நடந்த தவறுகளுக்காக உண்ணா நோன்பு மேற்கொண்டார். கிளர்ச்சி, தியாகத்தின் அடிப்படையில் இருக்கவேண்டுமே ஒழியத் துன்புறுத்தலின் அடிப்படையில் இருக்கக்கூடாது. அடையும் குறிக்கோள்கள் மட்டுமன்றி அவற்றை அடையக்கூடிய வழிகளும் நல்லனவாக இருத்தல் வேண்டும் என்றெல்லாம் அறிவுறுத்தினார்.

## அமிர்தசரசிலே ஆங்கில வெறியர்

ஏப்பிரல் 10ஆம் நாள் பள்ளித் தலைமை ஆசிரியராக இருந்த ஓர் ஆங்கிலப் பெண்மணி இந்தியர் சிலரால் தாக்கப்பட்டார். அதனைக் கேள்வியுற்ற பிரிகேடியர் ஜெனரல் டயர் என்பான், அவர் குடியிருந்த தெருவழியாகச் சென்ற இந்தியர் அனைவரும் முழந்தாளிட்டு ஊர்ந்து செல்லக் கட்டளையிட்டான். அவர் தாக்கப்பட்ட இடத்தில் ஒரு கம்பம் நடப்பட்டது. கட்டளைக்குக் கீழ்ப்படியாத இந்தியர் அக் கம்பத்தில் கட்டப்பட்டுக் கசையடி கொடுக்கப்பட்டனர். நகரில் 12ஆம் நாள் தடை விதித்தான் டயர்.

## ஜாலியன்வாலா பாக் படுகொலை

1919 ஏப்பிரல் 13ஆம் நாள் பஞ்சாபின் தலைநகரும் சீக்கியர்தம் திருநகருமான அமிர்தசரஸ் நகரத்தின் நடுவிலே உள்ள 'ஜாலியன்வாலா பாக்' என்னும் வெட்டவெளியில் மாலையில் நடந்த பொதுக்கூட்டத்தில் துப்பாக்கி ஏந்திய இருபத்தைந்து கூர்க்காக்களுடனும் இருபத்தைந்து பலுச்சியர்களுடனும் பிரிகேடியர் ஜெனரல் டயர் நுழைந்தான். தனக்கு இடமும் வலமுமாக அவர்களை நிறுத்திக் கூட்டத்தினரைக் கலைந்து செல்லுமாறு கட்டளையிடாமலும் எச்சரிக்கை செய்யாமலும் கூட்டத்தினர்மீது சுடச் செய்தான். அந் நிகழ்ச்சி அண்ணல் காந்தியடிகளைப் பெருந்துயரத்தில் ஆழ்த்தியது.

இந்தியரின் தன்மானத்திற்கு அஃது ஓர் அறைகூவலாகக் கருதப்பட்டது. தேசிய உணர்ச்சி தேசமெங்கும் பீறிட்டெழுந்

தது. ஆங்கில ஆட்சியை அறவே அகற்ற அடிக்கல் நாட்டப் பட்டது. அந் நிகழ்ச்சி இந்தியாவில் மட்டுமன்றி இங்கிலாந் திலும் கொந்தளிப்பை ஏற்படுத்தியது.

இந்தியரை அமைதிப்படுத்தும் முறையில் மான்டேகு-செம்ஸ்போர்டு சீர்திருத்தம் வந்தது. முதலில் நல்லெண்ணத் தால் வரவேற்ற காந்தியடிகள் பின்னர் நம்பிக்கை இழந்தார்.

வேலைநீக்கம் செய்யப்பெற்று இங்கிலாந்து சென்ற டயருக்கு இந்தியர் தந்த வரிப்பணம் ஓய்வு ஊதியமாகத் தரப் பட்டதையும், படுகொலைக்குப் பரிசாகப் பெருந்தொகை திரட்டித் தரப்பட்ட செய்தியையும் கேட்டு இந்தியர் உள்ளம் கொதித்தனர். தன்மானம் தட்டி எழுப்பப்பட்டது.

1920ஆம் ஆண்டு ஏப்பிரல் திங்களில் காந்தியடிகள் தன் னாட்சி இயக்கத்தின் தலைமைப் பொறுப்பேற்றார். அண்ண லின் வேண்டுகோட்கிணங்கக் 'கிலாபத்' இயக்கம் ஒத்துழை யாமையைத் தனது கொள்கையாக ஏற்றுக்கொண்டது. 1920 சூலை 31ஆம் நாள் உண்ணாநோன்பையும் ஆகஸ்டு முதல்நாள் ஒத்துழையாமையையும் மேற்கொள்ள வேண்டு மெனக் காந்தியடிகள் மக்களைக் கேட்டுக்கொண்டார். இந்து முஸ்லிம் குழுக்கள் புயல் வேகத்தில் நாடெங்கும் இடையறாது சுற்றுப்பயணம் செய்து, நூறாயிரக்கணக்கான மக்களைக் கண்டு அயல்நாட்டுத் துணிகளைப் புறக்கணிக்கும்படியும் அயலார்கீழ்ப் பார்த்து வந்த வேலையை விட்டு விலகும்படியும் கேட்டுக்கொண்டன.

## அயல்நாட்டுத் துணியெரிப்பு

ஒவ்வொரு பொதுக்கூட்ட முடிவிலும் அயல்நாட்டுத் துணிகள் தீ வைத்துக் கொளுத்தப்பட்டன. அவரவர் அணிந் துள்ள அயல்நாட்டுத் துணிகளைத் தீ வைத்துக் கொளுத்தினர். அதனை நாடெங்கும் மக்கள் பின்பற்றினர். எண்ணற்ற கைராட்டைகள் உற்பத்திசெய்யப்பட்டன. எல்லாரும் கையால் நூற்று நெய்த கதர் ஆடையை உடுத்தத் தொடங்கினர். காந்தியின் சொற்கேட்டு முப்பதினாயிரம் பேர் சிறை சென்றனர். 1921 ஏப்பிரலில் இந்தியா வந்த ரீடிங்கு பிரபு காந்தியின் வெள்ளை உள்ளத்தைக் கண்டு வியந்தார். ஆனால் அவர் உண்மை, இன்னாசெய்யாமை, அன்பு இவற்றை அரசி யலில் எப்படிப் பயன்படுத்துகிறார் என்பதைப் புரிந்துகொள்ள முடியாமல் குழம்பினார்.

காந்தியடிகளின் போக்கும் நடவடிக்கைகளும் இந்தி யருக்குங்கூடக் குழப்பத்தையும் ஆத்திரத்தையும் அளித்தன. பொறுமையிழந்த முனைப்பாளர் சிலர் படைக்கருவிகளோடு புரட்சி செய்ய வேண்டுமெனத் துடித்தனர். ஒத்துழையாமை இயக்கத்தைச் சட்ட மறுப்பியக்கமாக மாற்றிவிடத் துடித்தனர்.

### பர்தோலியில் அறப்போர்

முதலில் முனைப்பாளர் போக்கிற்குச் சற்று இணங்கிய காந்தியடிகள் 1922 பிப்பிரவரி முதல் நாளில் பர்தோலியில் சட்ட மறுப்பு இயக்கத்தைத் தொடங்கினார். வழக்கம்போல இன்னா செய்யாமை ஒன்றே இயக்கம் வெற்றி பெற ஒரே வழி என்றும் காவல் துறையினரின் எவ்வகை நடவடிக்கைகளையும் மக்கள் எதிர்க்கக்கூடாது என்றும் எடுத்துரைத்தார்.

### சௌரி சௌரா நிகழ்ச்சி

1922 பிப்பிரவரி 8ஆம் நாள் ஐக்கிய மாநிலத்திலுள்ள சௌரி சௌரா என்னுமிடத்தில் நடந்த நிகழ்ச்சி காந்தியடி களுக்கு ஆற்றொணாத் துயரை அளித்தது. உடனே சட்ட மறுப்பியக்கத்தைத் திரும்பப் பெற்றதோடு, அங்கு நடந்த அநீதிக்குக் கழுவாயாக ஐந்து நாள் உண்ணாநோன்பு மேற் கொண்டார்.

### சிறை ஒறுப்பு

1922ஆம் ஆண்டு மார்ச்சில் காந்தியடிகளைச் சிறைப் பிடித்து ஆமதாபாத் வழக்கு மன்றத்தில் நிறுத்தினர். அண்ணல், குற்றச்சாட்டை மறுக்காமல் கூடுதலான ஒறுப்பு (தண்டனை) வழங்கக் கோரினார். நடுவர் வியப்புற்றார். ஆறு ஆண்டுகள் வெறுங்காவல் சிறை ஒறுப்பு அளித்தார். பார்வை யாளர்கள் பலரும் முழங்காலிட்டுத் தேம்பித் தேம்பி அழுதனர்.

### இந்து முஸ்லிம் ஒற்றுமைக்கு உண்ணாநோன்பு

அண்ணல் சிறை சென்ற பின்னர், இந்து முஸ்லிம் ஒற்றுமை தகர்க்கப்பட்டு வன்செயல்கள் தலைவிரித்தாடின. அது கேட்ட அண்ணல் உளம் நைந்தார். ஒற்றுமை ஏற்படுத்த 1924ஆம் ஆண்டு இருபத்தொரு நாள்கள் உண்ணாநோன்பிருந் தார். உண்ணாமையால் உடல் நலிந்தார்; உயிர் ஊசலாடியது. இந்துக்களும் முஸ்லிம்களும் நூறாயிரக்கணக்கில் கூடி வழிபாடு செய்தனர். கண்ணீர் விட்டு, அமைதியையும் ஒற்றுமையையும் பாதுகாப்பதாக உறுதிமொழி தந்தனர். அக்டோபர் ஆறாம் நாள் நடுப்பகலில் முகம்மதிய மருத்துவர் ஒருவர் தந்த ஒரு

குவளை ஆரஞ்சுப் பழச்சாற்றை அருந்தி உண்ணாநோன்பை முடித்தார்.

## உப்போ உப்பு

'உப்பில்லாப் பண்டம் குப்பையிலே' என்பர். உப்பு ஏழை, பணக்காரன் என்னும் ஏற்றத்தாழ்வின்றி அனைவரும் பயன்படுத்தும் அன்றாடத் தேவைப் பொருள். இவ்வாறு அனைவருள்ளத்திலேயும் இடம் பெற்றிருக்கின்ற 'உப்பை' அண்ணல் காந்தியடிகள் தம் அறிவுக் கூர்மையினாலே தம் போராட்டத்தின் உயிர்நாடியாக வைத்தார். அன்று உப்புக் காய்ச்சும் உரிமை அரசிடமிருந்தது.

1930ஆம் ஆண்டு, மார்ச்சுத் திங்கள் 12ஆம் நாள் விடியற் காலை உலகெங்கணுமிருந்தும் நாளேடுகளின் செய்தியாளர்கள் 'சபர்மதி'யைச் சூழ்ந்து கொண்டனர். அவர்கள் வினாக்களுக்கு அண்ணல் காந்தி விடையளித்தார். கடவுளின் பெயரால் தாங்கள் உப்புப் பயணம் போவதாகச் சொன்னார். காலையில் வழிபாட்டுப் பாடல்கள் பாடப்பட்டன. தமது ஓலைக் குடிலிலிருந்து ஆடவர் பெண்டிர் எழுபத்தெட்டுத் தொண் டர்கள் பின்தொடர, சபர்மதியிலிருந்து 200 கி.மீ. தொலைவிற் கப்பாலுள்ள தண்டிக் கடற்கரைக்குப் பயணம் தொடங்கினார் அண்ணல். பெருந்திரளான மக்களும் பின்தொடர்ந்தனர். அண்ணல் களைப்படைந்தால் ஏற்றிச் செல்லக் குதிரை ஒன்றும் உடன் வந்தது. அண்ணலின் கால்கள் புழுதி யடையாமலிருக்க ஊர்தோறும் மக்கள் தெருக்களில் தண்ணீர் தெளித்தனர்; தழைகளை இட்டு நிரப்பினர். ஊர்தோறும் மக்கள் எண்ணிக்கை கூடியது. பயணம் விழாக்கோலம் கொண்டது. ஒவ்வோர் ஊரிலும் அண்ணல் காந்தி நின்று பேசினார். 'ஓர் ஆய்வுக்காலம் (சோதனை) வரப்போகிறது; ஆயத்தமாயிருங்கள்; தூய்மையான வாழ்க்கை நடத்துங்கள். உண்மை பேசுங்கள்; கதரணியுங்கள்; மது அருந்தாதீர்கள்; நான் குறிப்புக் காட்டும்போது உப்புச் சட்டத்தை உடைத் தெறியுங்கள்' என்றெல்லாம் அறிவுரை கூறினார். பயணம் இருபத்து நான்கு நாள்கள் தொடர்ந்தது. 1930ஆம் ஆண்டு, ஏப்பிரல் திங்கள் 6ஆம் நாள் விடியற்காலை கடற்கரைக்குச் சென்று அண்ணல் காந்தியடிகள் கடல்நீரில் மூழ்கி எழுந்து கரைக்கு வந்து கரையிலிருந்து ஒரு பிடி உப்பைக் கையிலெடுத் தார். குறிப்புக் காட்டப்பட்டுவிட்டது. ஆங்கில அரசுக்கு எதிராய்ப் போர்க்கொடி உயர்த்தப்பட்டுவிட்டது. நூறாயிரக் கணக்கானோர் ஆங்காங்கே உப்பெடுத்தனர். நாடே கிளர்ந்

தெழுந்தது. அனைவருமே உப்பருந்துவோர் அல்லரோ? அரசு அடக்குமுறையைக் கட்டவிழ்த்துவிட்டது; சிறைச் சாலைகள் நிரம்பி வழிந்தன. அண்ணல் காந்தி எடுத்த ஒரு பிடி உப்பு 1600 ரூபாவுக்கு விலை போயிற்று. அண்ணல் காந்தியை எரவாடாச் சிறையிலடைத்தனர்.

## வெள்ளாடு கப்பலேறியது

ஆங்கில அரசு அச்சமும் எரிச்சலும் கொண்டது. போராட்டத்தின் பயனாய்க் காந்தி-இர்வின் பேச்சுவார்த்தை நடந்தது. உடன்படிக்கை கையெழுத்தாயிற்று. அதன் பயனாய்த் தேசியக் காங்கிரசின் ஒரே உறுப்பினராக, அண்ணல் காந்தி 1930ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்கள் தம் வெள்ளாட்டை யும் உடனழைத்துக்கொண்டு வட்டமேசை மாநாட்டில் கலந்து கொள்ள இலண்டனுக்குக் கப்பலேறினார். தமது இருவேளை உணவிற்கும் ஆடு பால் தந்தது. இங்கிலாந்தில் ஏழைகள் வாழும் பகுதியில் காந்தியடிகள் தங்கினார்.

## தோல்வி கண்ட மாநாடு

1931ஆம் ஆண்டு, திசம்பரில் நடந்த மாநாடு முழுத் தோல்வியில் முடிந்தது. மாநாட்டில் கொணரப் பெற்ற தனித் தொகுதி முறையை அண்ணல் காந்தி எதிர்த்தார். சமய இனப் பாகுபாடுகளை நீடிக்கவிட்டால் அவை இந்தியாவை அழிவுப் பாதைக்கு அழைத்துச் சென்றுவிடும் எனக் கருதினார். பிரிட்டனின் பிரித்தாளும் சூழ்ச்சி நன்கு செயல்பட்டது. காந்தி யடிகள் இந்தியா திரும்பியதும் சிறை செய்யப்பட்டு எரவாடாச் சிறையில் அடைக்கப்பட்டார்.

## தனித்தொகுதி முறையை எதிர்த்து உண்ணாநோன்பு

இந்துக்கள், முஸ்லிம்கள், தாழ்த்தப்பட்டவர்கள் முதலா னோர்க்குத் தனித்தொகுதி முறை ஏற்படுத்துவதென ஆங்கிலேயே அரசு செய்த முடிவை அண்ணல் காந்தியடிகள் வன்மையாக எதிர்த்து உண்ணாநோன்பைத் தொடங்கினார். தம் கருத்திற்கு அம்பேத்காரும் ஆங்கில அரசும் உடன்பட்டு வந்ததால் உண்ணாநோன்பை முடித்துக்கொண்டார். அதன் பயனாகச் சாதி இந்துக்களும் தீண்டப்படாதாரும் ஒன்று பட்டனர். தீண்டப்படாதோரின் கையால் சாதி இந்துக்கள் உணவு பெற்று ஒருங்கமர்ந்து உண்டனர்.

கோயில்களும், தெய்வத் திருவிடங்களும், புண்ணியத் தலங்களும் அரிசனங்களுக்குத் திறந்துவிடப்பட்டு அனைவருக்கும் பொதுவாக்கப்பட்டன.

'இந்தியாவைத் தூய்மைப்படுத்த வேண்டும்' என்று ஆக்கத் திட்டம் வகுத்துச் செயல்பட்டார் அண்ணல்.

ஜவகர்லால் நேரு அவர்கள் கூறியதைப்போல அண்ணல் காந்தியடிகள் தேசியக் காங்கிரசில் நிரந்தரமான பெருந் தலைவராக விளங்கினார். சில தீவிரவாதிகளின் கருத்தின்படி இந்த நாடு சென்றால் சுக்குநூறாகி அழிந்து மண்ணோடு மண்ணாகிவிடும் என்ற அஞ்சத்தக்க விளைவுகளை எண்ணிப் பார்த்த காந்தியடிகள் காங்கிரசைச் சரியான திசையிலேயே அழைத்துச் சென்றார்.

1942-ல் நடந்த அனைத்திந்தியக் காங்கிரசு மாநாட்டில் சட்டமறுப்பு இயக்கத்தைத் தொடங்குவதெனத் தீர்மானிக்கப் பட்டது. காந்தியடிகள் உள்ளிட்ட அனைவரும் சிறைசெய்யப் பட்டனர். அண்ணல் சிறையில் உண்ணாநோன்பை மேற் கொண்டார். 1943-ல் நீடித்த உண்ணாநோன்பு, இந்தியர் ஒவ்வொருவரையும் தாங்கொணாத அச்சத்திலாழ்த்தியது. எந்த நேரமும் இறந்துவிடுவார் என மக்கள் அஞ்சினர்.

### அன்னை கஸ்தூரிபா மறைவு

அந்நிலையில் தம் இளமைக் காலத்தில் மனைவியாயும் உற்ற துணையாயும் இருந்த அன்னை கஸ்தூரிபாவின் மறைவு மிக்க துயரத்தைத் தந்தது. அந்த எளிய பெண்மணி 62 ஆண்டுகள் தம்மோடு வாழ்ந்த வாழ்வையும் சாதி ஒழிப்பு, தீண்டாமை ஒழிப்புப் போன்ற எல்லாப் பணிகளிலும் தம்முடன் ஒத்துழைத்த தன்மையினையும் எண்ணியெண்ணி உள்ளம் நைந்தார். அப்போது 'எதிலும் பற்றற்றிரு' என்னும் கீதை மொழிகளே அண்ணல் காந்திக்கு ஆறுதலளித்தன. புலாபாய் தேசாய் மறைவும் வருத்தத்தைத் தந்தது.

### ஜின்னாவின் அறிக்கை

1944-ல் அண்ணல் விடுதலை செய்யப்பட்டார். நாட்டு விடுதலையும் நெருங்கியது. அரசப் பிரதிநிதி கேட்டுக்கொண்ட தற்கிணங்கப் பண்டித ஜவகர்லால் நேரு 1946 செப்டம்பர் 2ஆம் நாள் இடைக்கால ஆட்சியை அமைத்தார். அன்று நடந்த தொடக்க விழாவிலே அண்ணல் காந்தி பேசுகையில்,

'இவர் உங்களுடைய முடிசூடா மன்னரும் தலைமை அமைச்சரும் ஆவார்' என்று நேருவைப்பற்றிக் குறிப்பிட்டார். அந்த நாளைக் கறுப்புக் கொடி ஏந்தித் துயரநாளாகக் கொண்டாடுமாறு முகம்மதலி ஜின்னா முஸ்லிம்களைக் கேட்டுக் கொண்டார்.

### கறை படிந்த வரலாறு

கல்கத்தாவில் ஒரு திங்களுக்கு முன்பு நடந்த இந்து முஸ்லிம் கலவரம் மீண்டும் தலைதூக்கியது. இந்துக்களை முஸ்லிம்களும், முஸ்லிம்களை இந்துக்களும் ஈவிரக்கமின்றிக் கொன்று குவித்தனர்.

கிழக்கு வங்காளத்திலும் பீகாரிலும் குருதி பெருக்கெடுத்தோடியது. நவகாளியில் முஸ்லிம்கள் இந்துக்களைக் கொன்று குவித்ததற்குப் பழிவாங்குவதற்காகப் பீகாரில் அக்டோபர் 25ஆம் நாளை 'நவகாளி நாள்' என்று அறிவித்தனர். பலர் கொல்லப்பட்டனர்; மிகப் பலர் காயமடைந்தனர்.

வரலாற்றேடுகளைக் கறைபடியச் செய்த இப் படுகொலையில் எண்பது இலட்சம் பேர் கொல்லப்பட்டனர்; ஒன்றரைக் கோடி மக்கள் தாங்கள் பிறந்து வளர்ந்த இடங்களை விட்டு இந்தியாவுக்கும் பாக்கிஸ்தானுக்கும் விரட்டப்பட்டனர்.

### நவகாளிப் பயணம்

தில்லியிலே தீண்டப்படாதவர் வாழும் சேரிப் பகுதியிலே ஒரு சிறு குடிசையிலே வாழ்ந்த அண்ணல் காந்தியடிகள், கொலைவெறி மிகுந்த நவகாளி, தீப்போரா என்னும் மாவட்டங்களில் பலர் தடுத்துங்கூடக் கால்நடையாகப் பயணத்தை மேற்கொண்டார். பின்னர், பீகார்ப் பகுதிக்கும் சென்று உடன்பிறப்புணர்வு, உள்ளத் தூய்மை, தீவினை மறுப்பு ஆகியவை பற்றி அறிவுரை கூறினார்.

1947 மார்ச்சில் மவுண்ட்பேட்டன் காந்தியடிகளையும் ஜின்னாவையும் தமது வளமனையில் அழைத்துப் பேசினார். நாட்டுப் பிரிவினை தவிர்க்க முடியாததாகி விட்டது.

### நாடு விடுதலை பெற்றது

1947 ஆகஸ்டு 15ஆம் நாள் நாடு விடுதலை பெற்றது. இந்து முஸ்லிம் ஒற்றுமைக்கும் தீண்டாமை ஒழிப்புக்கும் இந்தியாவைத் தூய்மைப்படுத்துவதற்கும் தொடர்ந்து பணி செய்து வந்தார் அண்ணல்.

அண்ணல் காந்தியடிகள் தம் வாழ்நாள் முழுவதும் சமுதாய மாற்றத்திற்காகச் செயல் திட்டங்களை (நிர்மாணத் திட்டம்) வகுத்துச் செயல்பட்டார். தன்னலமின்றி நாட்டு மக்களின் நல்வாழ்வுக்காகவே பாடுபட்டார்.

அண்ணல் மறைவு

1948 சனவரி 30ஆம் நாள் தில்லிப் பிர்லா மாளிகையில் வழிபாட்டுக் கூட்டத்தில் கலந்துகொள்வதற்காக அண்ணல் காந்தியடிகள் வந்து கொண்டிருந்தார். அவருக்காக நூற்றுக் கணக்கானவர் காத்திருந்தனர். அவர்கள் நடுவிலே நின்று கைத் துப்பாக்கியைப் பையிலே வைத்திருந்த இளைஞன் ஒருவன் அண்ணல் காந்தி புன்னகை தவழும் முகத்தோடு அவனருகிலே வரும்போது திடீர் எனத் துப்பாக்கியை எடுத்துச் சுட்டான்; குண்டுகள் மார்பைத் துளைத்துச் சென்றன. அண்ணல் உயிர் பிரிந்தது. இந்திய நாடு துயரத்தில் ஆழ்ந்தது. இந்தியரின் நெஞ்சில் அண்ணல் காந்தியடிகள் நீங்கா இடம் பெற்றார்.

'உள்ளத்தால் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்துள் எல்லாம் உளன்.'

# 9. அக்காள் சுபலட்சுமி

இமயமும் குமரியும் இரு பெருங் கடல்களும் எல்லையாகக் கொண்ட இந்தியப் பெருநாடு மிகமிகப் பழமையான நாடு மட்டுமன்றி, அறிவிற்சிறந்த பெரியோர்களையும், ஆற்றல் மிக்க மறவர்களையும் தன்னகத்தே கொண்ட நாடு. நாகரிகத்திலும் பண்பாட்டிலும் உலகிற்கே வழிகாட்டிய நாடு. போதிமரத்துப் புத்தனும் புகழறத்து மகாவீரரும் தெய்வப் புலவர் திருவள்ளு வரும் அறவுரை பகர்ந்ததும், ஔவையும் காக்கைபாடினியும் வெண்ணிக் குயத்தியும் குறமகள் இளவெயினியும் இலக்கியம் படைத்ததும் இந்த நாட்டிலேயாம். இந் நாட்டில் ஆடவரும் பெண்டிரும் சமமாகக் கல்வி கற்று அறிவும் தெளிவும் பெற்று இனிது வாழ்ந்தனர்.

இடைக்காலத்தில் பல்வேறு படையெடுப்புகளாலும் சமயப் பூசல்களாலும் பெண்கல்வி புறக்கணிக்கப்பட்டது. அதற்கேற்பச் சாத்திரங்களும் புராணங்களும் படைக்கப் பட்டன; வேதங்களுக்கு விளக்கங்கள் தரப்பட்டன. அதன் தொடர்ச்சியாக இளமை மணம் புகுத்தப்பட்டது. அதன் காரணமாக இளைஞர்கள் இறப்பும், இளங்கைம்பெண்களின் எண்ணிக்கையும் மிகுதியாயின. இக் கைம்பெண்கள் நடத்தப் பட்ட முறையும் இரங்கத்தக்கதாக இருந்தது. இத்தகைய அவலநிலைக்கு ஆட்பட்ட பெண்ணினத்தின் கண்ணீரைத் துடைக்க விரல்விட்டு எண்ணக்கூடிய சிலரே முன்வந்தனர். அவர்களுள் இராஜா ராம்மோகன்ராய், விவேகானந்தர், அண்ணல் காந்தியடிகள், ஈசுவர சந்திர வித்தியாசாகரர், கேசவ சந்திர சென், மாமுனிவர் கார்வே, டாக்டர் முத்துலட்சுமி ரெட்டி, கவிக்குயில் சரோஜினி நாயுடு, டாக்டர் அன்னி பெசன்ட் அம்மையார் முதலியோர் குறிப்பிடத்தக்கவராவர். பெண்ணினத்தின் உயர்வுக்காகப் பாடுபட்ட பெரியோர்களுள் அக்காள் சுபலட்சுமி அவர்கள் சிறப்பிடம் பெறத்தக்கவராவார்.

### தோற்றமும் இளமையும்

1886 ஆம் ஆண்டு சூலைத் திங்கள் 30ஆம் நாள் சென்னை மயிலாப்பூரில், தஞ்சை மழவ நாட்டு அந்தணர் குடியிலே வந்த ஆர். வி. சுப்பிரமணிய ஐயருக்கும் விசாலாட்சி அம்மையாருக்கும் அக்காள் சுபலட்சுமி தலைமகளாகத் தோன்றிப் பெற்றோரின் அரவணைப்பிலே செல்வமாக வளர்ந்தார்.

### கலைந்த கனவு

சுபலட்சுமிக்குத் தாம் பிறந்த வீட்டிலேயே பதினோராம் அகவையில் திருமண ஏற்பாடு நடைபெற்றது. நாளும் கோளும், நல் ஓரையும் பார்த்து நிறைந்த செலவில், சாத்திர சம்பிரதாயங்களோடு பல்லியம் முழங்க, வேதியர்கள் வேதம் ஓத, புன்முறுவல் பூத்த முகத்தோடு மணவறையில் வீற்றிருந்த பால் மணம் மாறாத சுபலட்சுமியின் திருக்கழுத்திலே, அழகிய பொற்றாலியை எடுத்து அணிந்தான் இளைஞன் ஒருவன்.

மங்கல மங்கையர் பாட்டிசைத்தனர்; மகட்கொடையும், சீர்வரிசைகளும் கைம்மாறின; விருந்தும் கேளிக்கைகளும் வியப்புற நடந்தன. திருமணச் சிறப்பை எல்லாரும் பாராட்டினர். திருமண ஆரவாரம் அடங்குவதற்கு முன்பாகவே மணமான மூன்றே திங்களில் மணமகன் காலமாகிவிட்டான். மணமகனே பிணமகனாய் மணப்பறையே பிணப்பறையாய் அணியிழையார் வாழ்த்தொலி போய் அழுகை ஒலியாய்க் கழிந்தது. அவன் பூட்டிய மங்கல நாண் அறுபட்டுவிட்டது. தங்கள் அன்பு மகளின் இன்ப வாழ்வை எண்ணி எண்ணித் தவங்கிடந்த பெற்றோரின் நெஞ்சங்கள் துயரில் ஆழ்ந்தன. பொட்டிழந்து, பூவிழந்து, பொலிவிழந்து நிற்கும் தங்கள் அருமை மகளைப் பார்க்கவும் இயலாமல் கலங்கினர்.

'சுபலட்சுமியின் சாதகம் யோக சாதகம். சௌபாக்கியங்களுடன் வாழ்வாள்' என்று சாதகம் கணித்துச்சொன்ன அவள் தாய்மாமன் இனிச் 'சாதகத்தில் நம்பிக்கை இழந்துவிட்டேன்" எனக் கூறி அன்று முதல் சாதகம் பார்க்கும் தொழிலையே கைவிட்டுவிட்டார். உற்றார் உறவினர் அனைவருமே கண்ணீர் உகுத்தனர்; கதறி அழுதனர். சுபலட்சுமியின் குடும்பத்தில் சிரிப்பொலியும் மகிழ்ச்சி ஆரவாரமும் எங்கோ மறைந்தன. இன்னும் ஒரு கடமை எஞ்சி இருந்தது. மொட்டையடித்து, வெள்ளாடை உடுத்தச் செய்வதே அது. 'இந்த இளமை மாறாத பச்சைப் பசுங்கிளிக்கா மொட்டையடித்து வெள்ளை உடுத்தச் சொல்வது? ஐயகோ! எண்ணிக்கூடப் பார்க்கமுடியவில்லையே' எனப் பெற்றோர்கள் வாய்விட்டு

அழுதனர். யார் வருந்தி என்ன பயன்? சுபலட்சுமி ஒரு முடிவுக்கு வந்து உள்ளத் துறவு பூண்டுவிட்டார். அவர் மொட்டை அடித்துக்கொள்ளவும் வெள்ளை உடுத்தவும் முடிவு செய்தார். ஆனால் பெற்றோர் அதனை விரும்ப வில்லை.

### கைம்பெண் இலட்சுமி

ஒரு நாள் சுபலட்சுமியின் சின்னப் பாட்டியின் மகள் பத்து அகவைகூட நிரம்பாத இலட்சுமி என்பவளுடைய கணவன் இறந்துவிட்டான் என்று கடிதம் வந்தது. வீட்டார் அனைவரும் துயரத்தில் ஆழ்ந்தனர். 'ஒருவர் இறந்துபோனார் என்பதற்காக ஏன் இத்தனை வருத்தமடைகிறீர்கள்?' என்று சுபலட்சுமி வியப்போடு எல்லோரையும் கேட்டாள். ஒருத்தி, 'இலட்சுமி கைம்பெண் ஆகிவிட்டாள் என்றும், கணவன் இறந்துவிட்டால் முடியை எடுத்துவிட்டு, வெள்ளைப் புடவையை உடுத்திக் கொண்டு, நகையணியாமல் பெண் துறவிகளைப் போல இருக்கவேண்டும்' என்றும் சொன்னாள். அப்போதுதான் நீண்ட நாளைய ஐயப்பாடு சுபலட்சுமிக்கு நீங்கியது.

### தாலி விளையாட்டு

சுபலட்சுமி தன் ஒன்பதாம் அகவையில், தாய்மாமன் திருமணத்திற்குத் தாத்தாவுடன் தஞ்சைக்கருகிலுள்ள பூதலூருக்குச் சென்றிருந்தாள். திருமணம் ஐந்து நாள்கள் நடந்தன. அவ்வூரில் இவர்கள் தங்கியிருந்த வீட்டிற்கு அடுத்தவீட்டில் மூன்றே அகவை நிரம்பிய குழந்தை திருமணமாகிக் கணவனை இழந்து கைம்பெண்ணாகி விட்டதை அறிந்தாள். அக் குழந்தை தன்னையொத்த குழந்தைகளோடு பாவாடை, சட்டைகூட இல்லாமல் விளையாடிக் கொண்டிருந்தது. அதன் கழுத்தில் தொங்கிக் கொண்டிருந்த திருமாங்கலியத்தைப் பார்த்து ஒரு சுட்டிப் பெண், 'ஏண்டி, நீ திருமாங்கல்யம் போட்டிருக்கலாமோ?' என்று கேட்க, உடனே ஓடிப்போய்க் கழற்றி வைத்துவிட்டு வந்தது. அடுத்த பெண். 'ஏண்டி உன் மாங்கல்யம் எங்கே?' எனக் கேட்க உடனே ஓடிப்போய் பூட்டிக் கொண்டு வந்தது. அந்தப் பெண்ணின் தாயார் மிகுந்த துயரத்துடன் வீட்டிற்குள்ளயே இருந்தாள். இந்தக் காட்சியைக் கண்டு சிலர், 'பாவம் அதன் தலையெழுத்து' எனக் கண்ணீர் விட்டனர்.

மேற்கண்ட காட்சிகள் சுபலட்சுமியின் பிஞ்சு நெஞ்சில் நீங்காத நினைவுகளாக நிலைத்துவிட்டன. அன்று முதல் தனக்கும் இவ்வாறு நேர்ந்துவிடக்கூடாதே என ஒரு நொடி நினைப்பாள்.

## இளங்கைம்பெண்களின் இருண்ட வாழ்வு

இத்தகு எண்ணற்ற துயரக் காட்சிகள் இந்திய நாடு முழுவதும் மலிந்திருந்தன. அதிலும் தென்னகத்து இந்துக் குடும்பங்களிலே பெரிய அளவில் இருந்தன. பொட்டிழந்து பூவிழந்து, மொட்டையடித்து, வெள்ளை உடுத்து வீதியில்கூட நடமாட முடியாதவராய்க் கண்ணீர்க் கடலிலே மிதந்து கொண்டிருந்த அந்த இளங்கைம்பெண்களின் எண்ணிக்கை ஒன்றா? இரண்டா? இத்தகு வாயற்ற ஊமைகளின் வாழ்விற்காகத் தாமே பாடுபடச் சுபலட்சுமி உறுதி பூண்டார்.

## இளமையும் கல்வியும்

சுபலட்சுமியம்மை நான்காம் அகவை முடிவதற்குள்ளாகவே தொடக்கப் பள்ளியில் சேர்க்கப்பட்டார். சைதைத் தொடக்கப்பள்ளி, எழும்பூர் மாநிலப் பயிற்சிப் பள்ளி, ஜார்ஜ் நகரிலிருந்த பெண் துறவியர் கழகக் கல்லூரி முதலியவற்றில் அவர் படித்துத் தேர்ச்சி பெற்றார்; தமிழாசிரியர் பலரின் பாராட்டுதல்களையும் பெற்றார். 1908ஆம் ஆண்டு மாநிலக் கல்லூரியில் பி.ஏ. வகுப்பில் சிறந்த முறையில் வெற்றி பெற்றமைக்காக 'கிரிக்' தங்கப் பதக்கத்தையும் பரிசாகப் பெற்றார். அந் நாளில் சென்னைப் பல்கலைக்கழகத்தில் (ஆந்திரம், கருநாடகம், கேரளா உள்ளிட்டது) பி.ஏ. பட்டம் பெற்ற முதல் அந்தண மாணவி சுபலட்சுமியே ஆவார். அவர் மாநிலக் கல்லூரியில் பயின்ற காலத்தில் தமிழ்த் தாத்தா உ. வே. சாமிநாத ஐயரின் தொடர்பும் அவருக்குக் கிடைத்தது.

## ஊக்கம் பிறந்தது

ஐரோப்பிய மாதர் இங்கிலாந்து, அயர்லாந்து, ஸ்காட்லாந்து, பிரான்சு முதலிய இடங்களிலிருந்தெல்லாம் தங்கள் உற்றார், உறவினர்களைப் பிரிந்து ஆயிரக்கணக்கான கல் தொலைவிற்கு அப்பாலுள்ள நம் இந்தியாவிற்கு வந்து, பல இடங்களிலும் கல்வி நிலையங்கள், மருத்துவமனைகள் முதலானவற்றை நிறுவித் தந்நலம் கருதாமல் உழைப்பதையும் அவர்தம் எளிய வாழ்வையும் எண்ணி எண்ணிச் சுபலட்சுமி

வியந்தார். தாமும் ஏன் அத்தகைய அருட்பணியைச் செய்யக் கூடாது? என எண்ணலானார்.

ஐரோப்பியப் பெண்கள் நம் தேசத்திற்கு வந்து நம்மவர்க்குத் தொண்டு செய்யும்போது நம்மவர்களே நம்மவர்களுக்கு வேண்டிய உதவிகளை ஏன் செய்யக்கூடாது? எனச் சுபலட்சுமி நினைத்தார்; 'கணவனை இழந்த கைம்பெண்கள் பிறருக்குச் சமைத்துப் போடுவது, குழந்தை வளர்ப்பது போன்ற அடிமை வேலைகளையே செய்துகொண்டு பிறரைச் சார்ந்து வாழ்வதை விடுத்து ஐரோப்பியப் பெண்களைப் போலக் கல்வி நிலையங்கள், மருத்துவ மனைகள், திக்கற்றோர் இல்லங்கள், துறவியர் குடில்கள் முதலானவற்றை நிறுவி அப் பணியிலே இன்பங்காணக் கூடாதா?' என எண்ணினார். படிப்பை முடித்ததும் கைம்பெண்களுக்குத் தாமும் இத்தகைய தொண்டு செய்து அவர்களையும் பிறர்க்குத் தொண்டு செய்யப் பயிற்றுவித்தல் வேண்டும் என்னும் முடிவிற்கு வந்தார். அதன் விளைவே 'சாரதா ஒற்றுமைக் கழகம்' எனலாம்.

## மாநிலப் பள்ளியில் கல்விப் பணி

பி.ஏ. பட்டம் பெற்ற அக்காள் சுபலட்சுமி தாம் கல்வி கற்ற பயிற்சிப் பள்ளியிலேயே ஆசிரியப் பணியிலமர்ந்தார்; தமிழ், ஆங்கிலம், கணக்கு, அறிவியல் ஆகிய பாடங்கள் நடத்தி மாணவியரின் நல்லன்பைப் பெற்றார். மாணவியர் எல்லோரும் சுபலட்சுமியை 'அக்கா' என்றே அழைத்தனர். பிற்காலத்தில் 'பெரியக்கா' எனவும் அழைக்கப்பெற்றார். சிலர் 'சிஸ்டர்' என்றும் அழைத்தனர். அண்ணல் காந்தியடிகள் தம்மைப் பிறர் 'அண்ணா' என்று அழைப்பதையே பெரிதும் விரும்பியது போலச் சுபலட்சுமியும் தம்மை 'அக்கா' என்று அழைப்பதையே விரும்பினார்.

## கைம்பெண் குடில்

ஆசிரியப் பணியேற்றதும் முதன்முறையாகப் பள்ளிக் கண்காணிப்பாளர் (இன்ஸ்பெக்டர்) செல்வி இலிஞ்சைக் காணச் சென்றார் சுபலட்சுமி. ஒரு துண்டுத்தாளில் 'உடன்பிறப்பு சுபலட்சுமி' என்று ஆங்கிலத்தில் எழுதி உள்ளே அனுப்பினார். உள்ளே அழைத்த கண்காணிப்பாளர் 'உடன்பிறப்பு' (சிஸ்டர்) என்று எழுதியதேன்? எனக் கேட்டார். 'என்னைப் போன்ற எல்லார்க்கும் நான் ஓர் உடன்பிறப்பாக இருக்க விரும்புகிறேன்' என்றார் சுபலட்சுமி. அதைக் கேட்ட செல்வி இலிஞ்ச்

வியப்புற்று 'நல்லது, அப்படி இருக்கவேண்டும் என்பதே என் விருப்பமும்' என்றார். சுபலட்சுமி தாம் ஒரு கைம்பெண் இல்லத்தைதொடங்கவிருப்பதாகக் கூறி, அவரது ஒத்துழைப்பை வேண்டினார். இலிஞ்சும் இசைந்தார். இருவர்தம் கூட்டு முயற்சியால் குடில் உருவாயிற்று.

1912ஆம் ஆண்டு எழும்பூரிலுள்ள தமது இல்லத்திலேயே நான்கு இளம் கைம்பெண்களுடன் சுபலட்சுமி கைம்பெண் குடிலை நிறுவினார். 'சீத்தம்மாள்' என்பார் குடிவின் அன்னை யாகத் திகழ்ந்தார். சுபலட்சுமியின் தங்கையர் மூவரும் காலை மாலை மாணவியருக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும் உதவி ஆசிரியர்களாக இருந்து உதவினர்.

'கைம்பெண் குடில்' தொடங்கப் பெற்றமைபற்றிப் பல்வேறு வகையான பேச்சுகள் அடிபட்டன. எங்கணும் ஒரே பரபரப்பு. ஒரு தடவை தந்தை சுப்பிரமணிய ஐயரின் நண்பர் ஒருவர் அவரோடு பேசும்போது, 'என்ன உங்கள் பெண் கைம்பெண் குடில் தொடங்கியிருக்கிறாளாமே, நன்றாய் நடந்தால் மகிழ்ச்சிதான். பெண்கள் சென்று சேருமிடத்தில் பொறாமை, சண்டை, பூசல்மட்டுமே மிஞ்சும்' என்று இகழ்ச்சிக் குறிப்போடு கூறினாராம்.

ஒரு முறை கண்காணிப்பாளர் செல்வி இலிஞ்ச், தம்மை உடனே வந்து பார்க்குமாறு அக்காளுக்குக் கடிதம் எழுதியிருந்தார். சென்று பார்த்தபோது, 'ஆசிரமத்திலுள்ள பெண் களை நீ எங்காவது திருமணத்திற்கு அழைத்துப்போனது உண்டா?' என்று கடுமையாகக் கேட்டார். அவ்வாறு கேட்ட வுடன் சுபலட்சுமி கண்கலங்கிவிட்டார். யாரோ ஒருவர் எழுதிப் போட்ட மொட்டைக் கடிதமே கண்காணிப்பாளரின் சினத் திற்குக் காரணமாக இருந்ததைச் சுபலட்சுமி அறிந்து கொண்டார். இப்படி மொட்டைக் கடிதங்களால் விளைந்த சிக்கல்கள் ஒன்றா? இரண்டா?

கைம்பெண் குடிலைப் பார்ப்பதற்குச் செல்வி இலிஞ்ச், சர் சிவசாமி ஐயர், சர் சதாசிவ ஐயர், இயக்குநர் திரு. ஸ்டோன் முதலிய பெரியோர்களை அடிக்கடி சுபலட்சுமி அழைத்து வருவார். டாக்டர் முத்துலட்சுமி ரெட்டி அம்மையார் வாரம் ஒருமுறை வந்து மாணவியரைப் பார்த்துச் செல்வார். குடில் தொடங்கிய ஓராண்டிலேயே சுபலட்சுமியின் பேருழைப்பால் அது பெரிதாக வளர்ந்தது. மாணவியர் ஒரு குடும்ப உணர் வோடும் ஒற்றுமையோடும் மகிழ்ச்சியோடும் இருந்தனர்.

## மறக்க இயலாத நிகழ்ச்சிகள்

எழும்பூரில் குடியிருந்த டாக்டர் கேசவராவின் மனைவி, பத்தாம் ஆண்டில் கைம்பெண்ணான தன் மாமன் மகள் பவானியைக் கைம்பெண் குடிலில் சேர்த்துவிட்டுச் சென்றாள். அப் பெண்ணின் தாயார், கைம்பெண்ணான மகளைப் பார்க்க மாட்டேன் என்று விடாப்பிடியாய் மறுத்துவிட்டதால் அப் பெண் மிகவும் கலங்கிப் போயிருந்தாள். அக்காள் அன்பைப் பொழிந்து அவளுக்கு ஆறுதல் கூறி வளர்த்தார். விடுமுறையில் கூடத் தாய்வீடு சென்று தாய் முகத்தைக் காண இயலாமல் தவித்தாள்; எழும்பூரில் டாக்டர் கேசவராவ் இல்லத்திற்கு எப்போதாவது சென்று வருவாள்.

திருவனந்தபுரம் இராமசாமி ஐயர் மகள் முத்துலட்சுமி. பதினோராம் அகவையில் திருமணம் ஆகிப் பத்தாம் நாளில், கைம்பெண் ஆனாள். செல்லமாய் வளர்ந்த முத்துலட்சுமியை அவள் அன்புத் தாயார் பார்க்க மறுத்துவிட்டார். அவளுக்கு ஆறுதல் கூற அக்காளும் சீத்தம்மாவும் அரும்பாடுபட்டனர். விடுமுறையின்போதுகூடக் குடிலில்தான் இருக்க வேண்டி யிருந்தது.

முத்துலட்சுமி பள்ளி இறுதித் தேர்வு முடித்து அரசி மேரி கல்லூரியில் இடைநிலைத் (இன்டர்மீடியட்) தேர்விற்குப் படித்துக் கொண்டிருந்தபோது பெற்றோரின் விருப்பத்திற் கிணங்கப் பிரம்மஞான சங்கத்தைச் சார்ந்த இளைஞன் ஒருவனைத் திருமணம் செய்துகொண்டாள். பின்னர்தான் தாய்க்கும் உடம்பில் தெம்பு வந்ததாம்.

கைம்பெண் குடிலில் முதலில் சேர்ந்த சீதாலட்சுமி என்பாள் ஆறு மாதங்களாக எலும்புருக்கி நோயால் துன்புற்று 1915 திசம்பரில் இறந்து போனாள். அவள் பெற்றோர் வைதீகர்களின் சொற்படி நாவிதனை அழைத்து வந்து இறந்து போனவளுக்கு மொட்டையடித்து அதன்பின்னரே சுடுகாட்டிற்கு எடுத்துச் சென்றனர்.

அதனைக் கேட்டு அக்காள் சுபலட்சுமி, 'இறந்த பின்னுமா பெண்களை இப்படி அவமானப்படுத்த வேண்டும்?' என்று வருத்தமும் சினமும் அடைந்தார்.

## அக்காள் பெற்ற பெருமை

துன்பத்திற்குள்ளாகும் கைம்பெண்களைப்பற்றிக் கேள்வி யுற்றவுடன் அவர்தம் துயர் துடைக்கும் பணியில் ஈடுபடச்

சுபலட்சுமி என்றும் தயங்கியதில்லை. எனவே, அவரை அனைவரும் 'கைம்பெண் காவலர்' என்றே சிறப்பித்துப் போற்றினர். அவர்தம் பணியைப் பாராட்டும் வகையில் மன்னர்பிரான் பிறந்த நாளான 1926 நவம்பர் 14ஆம் நாளன்று ஆங்கில அரசால் வெள்ளிப் பதக்கம் அளிக்கப்பட்டது.

## கைம்பெண் மறுமணக் கழகம்

அந்தக் காலத்தில் பஞ்சாபில் இருந்த சர் கங்காராம் என்னும் பெருஞ்செல்வர் 'மறுமணக் கழகம்' அமைத்துத் தம் சொத்தில் பெரும் பகுதியைக் கழகத்திற்குக் கொடுத்துத் தொண்டாற்றினார். அதன் கிளைக் கழகமே சென்னையில் தோன்றிய 'கைம்பெண் மறுமணக் கழகம்.' வீரேசலிங்கம் பந்துலு, டாக்டர் முத்துலட்சுமி ரெட்டி முதலியோர் பொறுப் பேற்று அதனை நடத்தினர்.

வீரேசலிங்கம் பந்துலுவும் அவர்தம் அன்புத் துணைவியாரும் புரசைவாக்கத்தில் தங்கியிருந்து தம்பால் வரும் கைம்பெண் களை எழும்பூர் அரசு பெண் பள்ளியில் படிக்க வைப்பர்; அக்காள் சுபலட்சுமியையும் கைம்பெண் மறுமணக் கழகத்தில் உறுப்பினராகுமாறு கேட்டனர். அதற்கு, 'நான் உறுப்பினராக இல்லாத போதே விண்ணப்பங்கள் வந்து குவிகின்றன. உறுப்பினராகிவிட்டால் நிலைமை மேலும் கெட்டுவிடும். ஆகவே, என்னுடைய வேலை படிக்க வைப்பது மட்டுமே. மறுமணம் செய்துகொள்ள விரும்புவோரை உங்களிடம் அனுப்பிவிடுகின்றேன்' என்று நகைச்சுவையோடு சொல்லி விட்டார்.

## மறுமணம்பற்றிச் சுபலட்சுமி

கைம்பெண்கள் மறுமணம் செய்துகொள்வதை அக்காள் சுபலட்சுமி விரும்பவில்லை. கைம்பெண்கள் கல்வி, மருத்துவம் போன்ற சமுதாயப் பணிகளுக்காகத் தங்கள் வாழ்நாளைச் செலவிட வேண்டுமெனக் கருதினார்.

'சாரதா' கல்வி நிலையத்தைச் சார்ந்த பயிற்சிப் பள்ளியில் பாரதியார் விழா நடந்தபோது வ. ரா. பேசுகையில், 'அக்காள் சுபலட்சுமி மறுமணம் செய்துகொண்டிருந்தால், பல பேருக்கு வழிகாட்டுவதாக இருந்திருக்கும்' என்று கூறினார். அக்காள் சுபலட்சுமி இறுதியில் பேசும்போது 'கைம்பெண் மணத்தை யான் என்றுமே விரும்பவில்லை. காரணம், கைம்பெண்ணை மணந்துகொண்ட கணவன், தான் ஏதோ தியாகம் செய்து

விட்டதாகக் கருதி இறுமாப்படைவதோடு மட்டுமன்றி, சமயம் நேரும் போதெல்லாம் குத்தலாகப் பேசுவான். ஏற்கெனவே கணவனை இழந்து நொந்துபோன கைம்பெண் அத்தகைய இழிசொல்லைக் கேட்டு மேலும் உள்ளம் புண்பட வேண்டாம். ஆண்கள் எத்தனை மணம் வேண்டுமானாலும் செய்துகொள்ள லாம். ஆனால், ஒரு கிழவரை மணந்த இளம்பெண் வாயைத் திறந்து ஒன்றும் சொல்ல முடியாது. ஆகவே, படித்துப் பட்டம் பெற்றுச் சமூகத்திற்குத் தொண்டு செய்து பற்றற்ற வாழ்க்கை நடத்துவதே சிறந்தது' என்று பேசினார். இது கேட்டு அனைவரும் வாயடைத்துப் போயினர்.

## அன்னை முத்துலட்சுமியின் அருள் தொண்டு

டாக்டர் முத்துலட்சுமி அம்மையாரின் முயற்சியால் 1925-ல் 'இந்தியப் பெண்கள் கழகம்' தோற்றுவிக்கப்பட்டது. அதில் அக்காள் சுபலட்சுமியும் உறுப்பினராயிருந்து பணி செய்தார்.

கணிகையர் குலப் பெண்களைக் கோயில்களில் பொட்டுக் கட்டித் தவறான வழியில் செலுத்தாமல் கழகத்தில் சேர்த்துக் கல்வி புகட்டி, மணம்செய்து எல்லாரையும் போல வாழ வைக்க வேண்டும் என்பதுதான் அக் கழகத்தின் நோக்கம். சட்டமன்றத் துணைத் தலைவராக இருந்த டாக்டர் முத்து லட்சுமியின் அரிய முயற்சியால் கோயில்களில் பொட்டுக் கட்டும் வழக்கத்தை நீக்கிச் சட்டமும் செய்யப்பட்டது.

இந்தப் பெண்கள் கழகத்தின் முதலாண்டு விழா 1925 அக்டோபரில் கொண்டாடப்பட்டது. திருமதி சதாசிவ ஐயர் தலைமை தாங்கினார். காலப்போக்கில் ஏனைய ஆதரவற்ற பெண்களும் கழகத்தில் சேர்ந்து படித்தனர். அக் கழகமே பிற்காலத்தில் அவ்வை இல்லமாக அடையாற்றில் ஆல்போல் தழைத்து அறுகுபோல் வேரூன்றி உள்ளது.

## பிற பணிகள்

'நானாத்மா கழகம்' என்னும் பெயரில் 1927-ல் அக்காள் சுபலட்சுமியின் குடும்பக் கழகம் ஒன்று அமைக்கப்பட்டது. அதில் பெண்கள் இருபது அகவைக்கு முன்னும் ஆண்கள் இருபத்தைந்து அகவைக்கு முன்னும் மணம் செய்யக்கூடாது என்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. கழகத்தின் சார்பில் நாடகத் தந்தை சம்பந்த முதலியாரின் 'காதலர் கண்கள்' நாடகம் நடிக்கப்பட்டது.

தம் பள்ளியில் 'சமூகப் பணிக் கழகம்' ஒன்று தொடங்கி ஒவ்வொரு கிழமையும் சமூகப் பணிக் கிழமை (வாரம்) என்று வகுத்துக்கொண்டு மீனவர் குடியிருக்கும் குப்பப் பகுதிக்குச் சென்று ஏழைக் குழந்தைகளுக்கு எழுத்தறிவித்தல் போன்ற பல பணிகளைச் செய்தார்.

## சாரதா கல்வி நிலையம்

சாரதா ஒற்றுமைக் கழகத்தின் பதினைந்தாம் ஆண்டு நிறைவு விழா 1927-ல் டாக்டர் முத்துலட்சுமி அம்மையார் தலைமையில் நடந்தது. ஒற்றுமைக் கழகத்தின் சார்பில் ஒரு கல்வி நிலையமும் தொடங்கப்பட்டது. பதினாறு அகவை முதல் இருபத்தைந்து அகவை வரை உள்ள பெண்களைச் சேர்த்து ஒன்றிரண்டு ஆண்டில் எட்டாம் வகுப்பிற்கு ஆயத்தம் செய்வது என்று முடிவு செய்தனர். இதன்படி 'சாரதா கல்வி நிலையம்' (சாரதா வித்தியாலயம்) தொடங்கப்பட்டது.

சாரதா ஒற்றுமைக் கழகத்தின் வெள்ளி விழாவும் சாரதா கல்வி நிலையத்தின் பத்தாம் ஆண்டு நிறைவும் நடந்தன நபா நாட்டு அரசர் அரசியர், வாழ்த்துத் தந்தியுடன் நன்கொடையும் அனுப்பினர்.

அக்காள் சுபலட்சுமியின் பொன்விழாவினை 1937 சூலை 18-ல் குடும்பத்தினர் கொண்டாடினர். சாரதா கல்வி நிலையத்தைச் சாரதா ஒற்றுமைக் கழகத்தின் ஆதரவிலிருந்து இராம கிருஷ்ணர் தொண்டு நிறுவனத்திற்கு (மிஷன்) மாற்றிவிடுவதென முடிவு செய்து அதன்படியே இணைத்தனர்.

## அக்காளின் நிலக்கொடை

மாம்பலம் கண்ணம்மாள்பேட்டையில் தாம் வாங்கி வைத்திருந்த இருபது மனை நிலத்தையும் 'ஆதாரப் பயிற்சி' முறை நடைமுறைக்கு வந்தபோது தோட்ட வேலைக்கு நிலம் தேவைப்பட்டதால் பயிற்சிப் பள்ளிக்கே கொடையாகச் சுபலட்சுமி தந்துதவினார்.

## படிப்பும் ஆசிரியப் பணியும்

அக்காள் சுபலட்சுமி தமது பன்னிரண்டாம் அகவையில் ஆங்கிலம் படிக்கத் தொடங்கி இருபத்து மூன்றாம் அகவையில் பி.ஏ. முடித்து எழும்பூரில் தாம் படித்த மாநிலப் பயிற்சிப் பள்ளியிலேயே 1911 முதல் பணியிலமர்ந்தார். பின்னர்,

ஆசிரியப் பயிற்சித் (எல். டி.) தேர்வில் வெற்றிபெற்றுத் தலைமையாசிரியராகப் பதவி உயர்வு பெற்றார். சீமாட்டி வெலிங்டன் உயர்நிலைப்பள்ளியிலும், இராசமகேந்திரம் அரசு உயர்நிலைப்பள்ளியிலும் தலைமையாசிரியராகப்பணிபுரிந்தார். பின்னர் இராயப்பேட்டையிலுள்ள 'ஒபார்ட்' அரசு பெண்கள் பயிற்சிப் பள்ளியிலும் கடலூர் அரசு உயர்நிலைப் பள்ளியிலும் தலைமை ஆசிரியராகப் பொறுப்பேற்றுப் பணியாற்றினார். மூன்றாண்டுகள் கடலூரியில் இருந்தபோது ஊர்ப்புறங் களுக்கும் சேரிப்புறங்களுக்கும் சென்று சமூகத் தொண்டாற் றினார்; ஏழைச் சிறுவர்கட்குக் கல்வி கற்பித்தார்; கட்குடியை விடுமாறு கேட்டுக்கொண்டார்; ஏறத்தாழ முப்பதாண்டுகள் கல்விப் பணியாற்றி 1941 ஆண்டு பணியிலிருந்து ஓய்வு பெற்றார். எனினும் அவர் தொண்டு மேலும் தொடர்ந்தது.

## பன்மொழி அறிவு

சுபலட்சுமி இந்தியிலும் தெலுங்கிலும் தேர்ச்சி பெற்றார்; மலையாளம் எழுதப் படிக்கக் கற்றார்; இலத்தீனும் முறையாகப் பயின்றார்; தமிழ்மொழியைக் கல்லூரியில் இரண்டாம் மொழி யாக எடுத்துத் தமிழ்த் தாத்தா உ. வே. சாமிநாதையரிடமே பாடங் கேட்டார்; வடமொழியை இளமை முதலே படித்திருந் தார்.

பர்மா அகதிப் பெண்களுக்கு வேலை தர, நாற்பது இராட்டைகள் வைத்து அவர்களை நூல்நூற்கச் செய்தார். ஆறு மாத காலம் இவ்வாறு தொண்டாற்றினார். அவர்களுள் நாற்பதின்மரைத் திருமதி வேங்கட சுப்பாராவ் 'சேவா சத'னில் சேர்த்துக்கொண்டார்.

அனைத்திந்திய மாதர் கழகத்தின் தலைவராகவும் இருந்து பணியாற்றினார். அவர்தம் அயராத பெரும்பணியைக் கண்டு மகிழ்ந்த ஆளுநர் பிரகாசாவும்,முதல்வர் இராஜாஜியும் அவரைச் சட்ட மேலவையில் உறுப்பினராக அமர்த்தினர். நடுவண் அரசு 'பத்மஸ்ரீ' (தாமரைத்திரு) பட்டமளித்துப் பாராட்டியது. சுபலட்சுமி தியாகராய நகரில் சாரதா ஒற்றுமைக் கழகத்திற்குப் பெருஞ்செலவில் ஒரு கட்டடம் கட்டி அதை இராஜாஜியைக் கொண்டு திறக்கச் செய்தார்.

இராமகிருஷ்ணா உயர்நிலைப் பள்ளியில் பல அமைப்பு களின் சார்பில் அக்காளின் புகைப்படம், முன்னாள் முதல்வர் இராஜாஜியால் திறந்துவைக்கப்பட்டது.

புகழுடம்பு எய்தினார்

வாழ்நாளெல்லாம் கைம்பெண்களின் மறுவாழ்விற்கும் கல்வி வளர்ச்சிக்கும் ஒல்லும் வகையெல்லாம் ஓயாது தொண்டாற்றிய பெருமாட்டி சுபலட்சுமி தம் 82ஆம் அகவையில் 1969 ஆம் ஆண்டு பொன்னுடல் நீத்துப் புகழுடம்பெய்தினார்.

'புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின் சாக்காடு
இரந்துகோள் தக்க துடைத்து.'

# 10. அன்னை முத்துலட்சுமி

'பெண்ணினத்தின் உயர்வில்தான் ஒரு நாட்டின் உயர்வு அடங்கி இருக்கிறது' என்று உணர்ந்து பெண்ணினத்தின் உரிமைக்காகவும் உயர்வுக்காகவும் பாடுபட முன்வந்த பெரு மக்களுள் அன்னை முத்துலட்சுமி, பெருமைக்குரிய இடத்தைப் பெற்றவர் ஆவார்.

## சேற்றில் முளைத்த செந்தாமரை

இத்தகு பெருமை வாய்ந்த அன்னை முத்துலட்சுமி அம்மையார் 1896ஆம் ஆண்டு ஆகஸ்டு 30ஆம் நாள் புதுக் கோட்டையில், இழித்தும் பழித்தும் பேசப்பட்ட பெண்ணினத் திலே 'சேற்றில் முளைத்த செந்தாமரை' எனத் தோன்றினார். புதுக்கோட்டை அரசர் கல்லூரித் தலைவராகவும், கல்வித் துறை இயக்குநராகவும், அரசருக்கு ஆய்வுரை கூறுநராகவும் இருந்த நாராயணசாமி ஐயரே இவர் தந்தை. இளமையும் எழிலும் நல்லொழுக்கமும் வாய்ந்த சந்திரம்மா இவர் தாய். கலப்பு மணம் செய்துகொண்ட இவர்கட்குத் தோன்றிய நான்கு மக்களுள் மூத்த மகளே அன்னை முத்துலட்சுமி என்பார்.

## திண்ணைப் பள்ளியில் கல்வி

தந்தை நாராயணசாமி தம் மகள் முத்துலட்சுமியை நான்காம் அகவையில் ஆடவர் நடத்தும் திண்ணைப் பள்ளிக் கூடத்தில் சேர்த்தார். செல்வி முத்துலட்சுமியைப் பள்ளியில் சேர்த்தபோது அவர் தந்தை ஆசிரியரிடம் 'பால் கணக்கு சலவைக் கணக்கு எழுதும் அளவிற்குக் கற்பித்தால் போதும்' என்று கேட்டுக்கொண்டார். ஆனால் முத்துலட்சுமியோ ஊக்கத்தோடு படித்தார். தந்தைக்குத் தெரியாமலேயே ஆங்கில அரிச்சுவடியைப் படித்து முடித்தார். அவர் ஆங்கில அறிவு மேம்பட்டு வருவதைக் கண்டு ஆசிரியர் பாராட்டி அன்பு செலுத்தினார். மகள் ஆறாம் வகுப்புப் படித்துத் தேர்ச்சி

பெற்றுவிட்ட செய்தி தந்தைக்குப் பெருவியப்பாயிருந்தது. எனினும் மேற்படிப்பிற்குச் செல்லாதவாறு தடுத்துவிட்டார். மேற்கொண்டு உயர்கல்வி பெற இயலாமல் குழம்பினார் முத்துலட்சுமி.

பாடங்கற்பித்த ஆசிரியர் பாலையா, முத்துலட்சுமியின் தாயாரிடம் சென்று முத்துலட்சுமியின் மதிநுட்பத்தையும் நினைவாற்றலையும் எடுத்துரைத்துக் கல்விச் செலவைத் தாம் ஏற்றுக் கொள்வதாகவும், படிப்பை நிறுத்த வேண்டாவெனவும் கேட்டுக்கொண்டார். முத்துலட்சுமியின் அறிவின் கதவு திறக்கப்பட்டுவிட்டது; பெற்றோரின் இசைவால் படிப்புத் தொடர்ந்தது. எட்டாம் வகுப்பு முடிப்பதற்கும், 13ஆம் அகவையில் பருவமடைவதற்கும் சரியாயிருந்தது. அக் காலத்திலே பருவமடைந்த பெண்களைப் பள்ளிக்கு அனுப்புவது மரபில்லை ஆதலின், அவர் பள்ளி செல்ல மீண்டும் தடை போடப்பட்டது.

திவானுக்கும் தமக்கும் ஏற்பட்ட கருத்து வேறுபாட்டின் காரணமாகத் தந்தை பணியிலிருந்து கட்டாய ஓய்வு பெற்றார். முத்துலட்சுமி தம் தந்தையிடமே பாடம் கேட்டார். கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் சரவணப் பிள்ளையும் பேராசிரியர் இராதா கிருஷ்ணரும் தமிழும் அறிவியலும் கற்றுக் கொடுத்து, இடைநிலைத் தேர்வில் சிறப்பான வெற்றிபெற அவருக்கு உதவினர்.

புதுக்கோட்டையிலிருந்து தேர்வுக்குச் சென்ற நூற்றுவருள் பதின்மரே தேர்ச்சி பெற்றனர். அவர்களுள் செல்வி முத்துலட்சுமியும் ஒருவர். ஏனையோர் ஆடவர். முத்துலட்சுமியின் வெற்றிச் செய்தி, செய்தி ஏடுகளில் சிறப்பிடம் பெற்றது. பெற்றோரும் உற்றாரும் பெருமகிழ்ச்சி எய்தினர். அன்னை முத்துலட்சுமியோ, தம் ஆசிரியர் பாலையாவுக்கு உள்ளத்தில் கோயிலெழுப்பி உயர் வணக்கம் செலுத்தினார்.

### கல்லூரி வாழ்க்கை

ஒரு நாள் தந்தை நாராயணசாமி செய்தித்தாள் படித்துக் கொண்டிருந்தபோது, அதில் திருமதி கமலா சத்தியநாதன், அவர் தங்கை கிருஷ்ணம்மா ஆகியோர் படங்கள் பட்டதாரி உடையிலிருந்ததைக் கண்டு, முத்துலட்சுமி தாமும் படித்துப் பட்டம்பெற்று அத்தகைய உடையணிய வேண்டுமென ஆவல் கொண்டார்; தந்தையை வேண்டினார். கல்லூரிக்கு விண்ணப்பம் அனுப்பப்பட்டது. முத்துலட்சுமியின் விண்ணப்பத்

-ைதக் கண்டு கல்லூரி முதல்வர், ஆசிரியர்கள், மாணவர்கள் அனைவரும் மலைத்துப் போயினர். நாராயணசாமி, கல்லூரித் தலைவரை அணுகினார். ஆடவர் கல்லூரியில் பெண்களைச் சேர்க்கக் கூடாதென்ற விதி இருந்ததால் வேண்டுகோள் மறுக்கப்பட்டது.

இந் நிலையில் தந்தை நாராயணசாமி மன்னரை அணுகினார். மன்னர் ஆஸ்திரேலிய மாதை மணந்தவர். ஆதலின் முற்போக்குச் சிந்தனை உடையவராக இருந்தார். எனவே இருவரும் கலந்து பேசி முத்துலட்சுமியைக் கல்லூரியில் சேர்த்துக்கொள்ள இசைவளித்ததோடு ஒரு கட்டுப்பாட்டையும் விதித்தனர். முத்துலட்சுமியை மாணவர்கள் காணாதவகையிலும் ஆசிரியர் மட்டும் காணும் வகையிலும் இடையில் ஒரு திரையிடப்படும் என்பதுதான் அக் கட்டுப்பாடு. முத்துலட்சுமி திரைக்குப் பின்னாலமர்ந்து படித்தார். அவர் வகுப்பறையை விட்டுச் சென்ற பின்னரே வகுப்பு நேரம் முடிந்ததாகக் கருதப்படும். பின்னரே ஆண்பிள்ளைகள் வெளியே போகலாம். அவ்வாண்டு நடந்த தேர்வில் முத்துலட்சுமி பல்கலைக்கழகத்திலேயே முதலாவதாகத் தேறினார் என்ற செய்தியைக் கேட்டு மாணவர்களும் ஆசிரியர்களும் ஒருபுறம் நாணமும், மறுபுறம் வியப்பும் அடைந்தனர். ஆண்களோடு சமமாக அமர்ந்து படிக்கிறாள் என்ற கேலிப் பேச்சும் மொட்டைக் கடிதங்களின் முச்சும் பயனற்றுப் போயின.

மகள் முத்துலட்சுமிக்கு மணமுடிக்கவில்லையே என்ற மனக்கவலை, தாயார் சந்திரம்மாளை நோய்வாயில் தள்ளிப் படுக்கையில் கிடத்திவிட்டது. சமுதாயச் சழக்குகளிலேயும் பழமைப்பிடிப்பிலேயும் மூழ்கிக் கிடந்த அந்தக் காலத்திலே சந்திரம்மாள் கவலைப்பட்டதில் வியப்பில்லை. அதிலும், கலப்புமணம் செய்துகொண்ட சந்திரம்மாளின் கவலை கூடுதலாகவே இருந்ததில் நியாயம் இருந்தது. மருத்துவர் தந்த மருந்து பயனளிக்காமல் தாயார் உடல் மெலிந்தார்; உயிருக்கு மன்றாடினார். தலைமகளோ உளம் மெலிந்தார்; இரவு பகல் ஊணுறக்கமின்றி அன்னையின் அருகிலேயே இருந்து பணிவிடைகள் செய்தார். தாம் மருத்துவம் படித்திருந்தால் தாயாருக்கு எவ்வளவு உதவியாக இருக்கும் என்று எண்ணினார். ஆயுள்வேத, ஆங்கில மருத்துவரெல்லாம் பார்த்துக் கைவிரித்து விட்டனர். இறுதியாக 'வான் ஆலன்' என்ற அமெரிக்க மருத்துவர் கொடுத்த மருந்தால் தாய் உயிர் பிழைத்தார்.

## மருத்துவக் கல்லூரியில்

தாயார் சந்திரம்மாளுக்குத் தம் மகளின் திருமணம்பற்றிய எண்ணம் தலைதூக்கியது. தலைமகள் முத்துலட்சுமிக்கோ தாம் ஒரு மருத்துவராக வேண்டுமென்னும் எண்ணம் தலை தூக்கியது. அதன் பயனாகச் செல்வி முத்துலட்சுமி 1907 ஆம் ஆண்டு மருத்துவக் கல்லூரியில் சேர்க்கப்பட்டார். இவ்வகை யில் சென்னை மருத்துவக் கல்லூரி வரலாற்றிலேயே எம் பி & சி. எம். வகுப்பில் சேர்த்துக்கொள்ளப்பட்ட முதல் தமிழ்ப் பெண்மணியும், ஒவ்வோராண்டும் முதல் தகுதியிலேயே தேர்ச்சி பெற்றுவந்த முதல் பெண்மணியும் முத்துலட்சுமியே ஆவார். பல்கலைக்கழகத்திலேயே முதல் பட்டதாரியாகவும் இந்தியா விலேயே முதல் மருத்துவப் பெண் பட்டதாரியாகவும் இவர் தேர்ச்சி பெற்றார்.

## நெஞ்சை உலுக்கிய துயர நிகழ்ச்சி

மருத்துவக் கல்லூரியில் சேருவதற்காக 1907 ஆம் ஆண்டு செல்வி முத்துலட்சுமி தந்தையோடு சென்னைக்குப் புறப் பட்டார். புறப்படும்போது பெற்றோரையும் கணவரையும் இழந்து. நிறைமாதக் கருவோடு தமது இல்லத்திலே இருந்த சிற்றப்பா மகள் வீரலட்சுமி தம்மிடத்தில் மிகவும் அன் போடிருந்த முத்துலட்சுமியைப் பிரிய இயலாமல் கோவெனக் கதறினார்; தம்மையும் அழைத்துச் சென்று சென்னையைச் சுற்றிக்காட்டுமாறு கெஞ்சினார். அந்த நிறைவயிற்றுப் பெண் ணிற்குக் கலங்கிய கண்களோடு முத்துலட்சுமி ஆறுதல் கூறி விடைபெற்றார். சென்னைப் புரசைவாக்கத்தில் குடியமர்ந்து தந்தையும் மகளும் நூல்கள் வாங்குவதற்காகக் கடைத்தெரு சென்று திரும்பியபோது அவர்கட்காகக் காத்திருந்த தந்தியைப் படித்து அதிர்ச்சி அடைந்தனர். வீரலட்சுமி ஒரு குழந்தையைப் பெற்றுவிட்டு உயிரிழந்தாள் என்று அறிந்து முத்துலட்சுமி ஆற் றொணாத் துயரமடைந்தார்; சில நாள் ஊணுறக்கமின்றித் துயருழந்தார். பின்னர்ச் சில நாள்களில் தம் தாயார், வீரலட்சு மின் குழந்தையோடும் ஏனையோரோடும் சென்னை வந்து சேர்ந்தார். தம்பி இராமையாவைக் கிறித்தவக் கல்லூரியிலும். சுந்தரம்மாள், நல்லமுத்து ஆகிய தங்கையரை எழும்பூர் மாநிலப் பெண்கள் பயிற்சிக் கல்லூரியிலும் சேர்த்தனர். மருத்துவக் கல்விக்காகப் புதுக்கோட்டை அரசு அனுப்பி வந்த உதவித் தொகை ரூ. 180/- இவர்கள் குடும்பத்திற்கு உதவியாய் இருந்தது.

### நாட்டுப் பற்று

முத்துலட்சுமியின் நாட்டுப்பற்று, டாக்டர் நஞ்சுண்ட ராவின் தொடர்பால் கிளர்ந்தெழுந்தது. அவர் வழியாகவே அக்காலத்தில் வாழ்ந்த பெருமக்கள் பலரோடு கலந்துரையாடும் வாய்ப்புக் கிடைத்தது.

1912 ஏப்பிரல் திங்களில் பட்டம் பெற்றவுடன் எழும்பூர் தாய்சேய் நல மருத்துவ மனையில் பணிபுரியும் வாய்ப்புப் பெற்றார். பின்னர், 1917-ல் எழும்பூரில் தனியாகத் தொழில் நடத்தத் தொடங்கினார்.

### மணவாழ்க்கையும் மக்கட்பேறும்

ஆடவர்களால் கொடுமைப்படுத்தப்பட்ட பெண்களின் நிலைமையை நேரில் அறிந்திருந்த முத்துலட்சுமி இளமைக் காலத்தில் திருமணத்தின்மீதே வெறுப்புற்றிருந்தார். பின்னர் மனம்மாறித் தம்மைப்போலவே மருத்துவப் பணி புரிந்து வந்த சுந்தரம் என்பாரைத் தம் வாழ்க்கைத் துணைவராக ஏற்றுக் கொண்டார். இராம்மோகன், கிருஷ்ணமூர்த்தி ஆகிய இரு நன்மக்களை ஈன்று புறந்தந்தனர்.

### புற்றுநோய்க்குத் தீர்வு

முத்துலட்சுமியின் தங்கை சுந்தரம்மாள் ஒருநாள் திடீரென நோய்வாய்ப்பட்டாள். அன்னை முத்துலட்சுமி 1922-ல் தங்கையின் உடல்நிலையை முதன்முறையாக ஆராய்ந்தபோது தம் அன்புத் தங்கை புற்றுநோய்க்கு ஆட்பட்டுவிட்டாள் என்பதறிந்து அதிர்ச்சி அடைந்தார். அதையறிந்த சுந்தரம் மாளும் அமைதியிழந்து பெரிதும் துயருழந்தார். 1922 முதல் 1923 வரை முத்துலட்சுமி தம் தங்கையின் படுக்கை அருகிலேயே இரவு பகல் உடனிருந்து பணிவிடை செய்தும் பயனேற்பட வில்லை. சுந்தரம்மாள் இறந்தாள். தம் அன்புத்தங்கையை எண்ணி எண்ணிக் கண்ணீருகுத்தார் முத்துலட்சுமி. 'புற்று நோய் உற்றார்க்கு விடிவே இல்லையா?' எனப் புலம்பினார். புற்றுநோயை எதிர்த்துப் போராட்டம் தொடங்கினார். அதன் விளைவுதான் இன்றுள்ள அடையாறு புற்றுநோய் ஆராய்ச்சி மருத்துவ மனை.

### வெளிநாட்டுப் பயணம்

முத்துலட்சுமி அரசினரின் உதவியால் தம் கணவருடன் வெளிநாட்டுக்குச் செல்லும் வாய்ப்பைப் பெற்றார். இலண்டன்

மாநகர் சென்று அங்குத் தம் மருத்துவப் பயிற்சியைத் தொடங்கினார். குழந்தைகளுக்கு வரும் நோய்பற்றி அவர் நடத்திய ஆராய்ச்சியைக் கண்டு மேல்நாட்டு மருத்துவ மேதைகள் வியப்படைந்தனர். குழந்தை மருத்துவத்தில் பெரும் திறன் பெற்றார். ஒருமுறை இராயல் புற்றுநோய் மருத்துவ மனையைப் பார்வையிட்டுப் புற்றுநோய் அறுவைமருத்துவம்பற்றிப் பல நுட்பங்களைத் தெரிந்துகொண்டார்.

பாரீஸ் பெருநகரில் நடந்த அனைத்து உலகப் பெண்கள் மாநாட்டில் கலந்துகொண்டு அன்னை முத்துலட்சுமி அரிய தொரு சொற்பெருக்காற்றினார். இந்தியப் பெண்கள் பெற்றிருக்கின்ற - பெறவேண்டிய உரிமைகள்பற்றி விரிவாகப் பேசினார். கீழைநாட்டுப் பெண்களும் மேலைநாட்டுப் பெண்களைப்போல் சிறந்து வாழத் தாம் தொண்டு செய்யப் போவதாக உறுதி கூறினார்.

### தாயகம் திரும்புதல்

அன்னை முத்துலட்சுமி 1926 ஆம் ஆண்டு தாயகம் திரும்பினார். நண்பர்களும் பொதுமக்களும் அவருக்குச் சிறப்பான வரவேற்பளித்தனர். இந்தியப் பெண்கள் கழகத்தின் சார்பில் நடந்த விழாவில் அன்னை முத்துலட்சுமி தம் பயணப் பட்டறிவுபற்றி எடுத்துரைத்தார்.

### இந்தியப் பெண்கள் கழகத்தின் ஏற்றமிகு தோற்றம்

அன்னை முத்துலட்சுமி அவர்கள் பரந்த சமயநோக்குடைய (Theosophist) திருமதி மார்கரெட் இ. கசின்ஸ், திருமதி ஜினராஜதாசா என்ற ஐரோப்பிய மாதருக்கு உறுதுணையாக இருந்து 8-5-1917-ல் அடையாற்றில் இந்தியப் பெண்கள் கழகத்தைத் (Women's Indian Association) தோற்றுவித்தார். தொடக்ககால முதல் அதன் முதல் இந்திய உறுப்பினராகவும், பல்லாண்டுகள் அதன் செயலாளராகவும், பின்னர் வாழ்நாள் தலைவராகவும், அது நடத்திய 'ஸ்திரீ தர்மா' (மாதர் அறம்) என்னும் இதழாசிரியராகவும் இருந்து தொண்டாற்றினார்.

### சட்ட மேலவையில் அன்னை

அன்னை முத்துலட்சுமி சென்னை திரும்பியதும் 'இந்தியப் பெண்கள் கழக'த்தின் வேண்டுகோளுக்கிணங்க மாநில ஆளுநரால் சட்டமன்ற மேலவை உறுப்பினராக நியமனம் செய்யப்பெற்றார்; 1927-ல் மேலவைத் துணைத்தலைவராகவும்

தேர்ந்தெடுக்கப் பெற்றார். உலகத்திலேயே இவ்வாறு தேர்ந் தெடுக்கப்பெற்ற முதல் பெண்மணி அன்னை முத்துலட்சுமியே ஆவார்.

சட்ட மேலவையில் அன்னை முத்துலட்சுமி 27-1-1927-ல் அவைத் தலைவரின் வேண்டுகோட்கிணங்க முதன்முறை யாகத் தலைமையேற்றுப் பேசினார். 'ஒருமுகமாக, முழுமனத் தோடு எனக்களித்த இணையற்ற பெருமைக்கு உளமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன். இப் பதவிக்கு என்னைத் தேர்ந்தெடுத்ததன் வாயிலாக எனக்களித்த பெரு மையைத் தனிப்பட்ட முறையில் எனக்களித்த பெருமையாகக் கருதாமல் இந்தியா முழுவதிலுமுள்ள பெண்களனைவர்க்கும் அளித்த பெருமையாகவே கருதுகிறேன்.

'இந்த மாநிலம், பெண்ணினத்தைப் பொறுத்தவரை இணையற்ற பல பெருமைகளை ஈட்டியிருக்கிறது. முதன்முதல் பெண்ணினத்திற்கு வாக்குரிமை அளித்த பெருமையும், பெண்மணி ஒருத்தி உறுப்பினராய் அமர இடமளித்த பெருமை யும், விழிப்புணர்ச்சியை வெளிக்காட்டும் வகையில் யாரும் கேளாமலும் வேண்டாமலும் இருக்கும்போது ஒப்பிட்டுச் சொல்ல இயலாத வகையில் மேலவைத் துணைத் தலைவராகத் தேர்ந்தெடுத்த பெருமையும் ஆகிய இணையற்ற பெருமைகளை நம் மாநில அரசு பெற்றுத் திகழ்கிறது. இது, பல சீர்திருத்தங் களில் பெண்கள் முன்னேற்றத்தில் வழிகாட்டியாக விளங்கும் என நம்புகிறேன். எப்போதும் உங்கள் ஒத்துழைப்புக் கிடைக்குமெனவும் நம்புகிறேன்' என்று பேசினார்.

அன்னை முத்துலட்சுமியின் இடையறா முயற்சியால் மருத்துவ மனைகளில் முதன்முதலில் சீர்திருத்தங்கள் செய்யப் பட்டன. குழந்தைகட்குத் தனி மருத்துவமனையும் மகப்பேறு மருத்துவ மனையும் ஏற்படுத்தப்பட்டன. ஏழைச் சிறுமியர்க்கு இலவசக் கல்வியும், இளங்கைம்பெண்களுக்குக் கல்விச் சலுகையும், பள்ளிகளில் மருத்துவக் கண்காணிப்பும் ஏற்பாடு செய்யப்பட்டன. மருத்துவ மனைகளில் பெண் மருத்துவர்கள் நியமனம் செய்யப்பட்டனர். குழந்தைமணத் தடுப்பும், கோயில்களில் தேவரடியார் அமைப்புமுறை ஒழிப்பும் கொணரப்பட்டன.

அன்னை முத்துலட்சுமி சட்ட மேலவையில் 1927ஆம் ஆண்டு நவம்பர்த் திங்களில், 'தேவரடியார் அமைப்புமுறை

ஒழிப்பு'த் தீர்மானத்தை முன்மொழிந்து நீண்டதொரு சொற்பொழிவு நிகழ்த்தினார். அவர் பேச்சைக்கேட்டு மேலவையே அசைந்தது; பழமை விரும்பிகளின் பல்வேறு எதிர்ப்புக்கிடையிலும் சட்டம் வெற்றிபெற்றது. அதனைத் தொடர்ந்து அன்னை முத்துலட்சுமியால் இளமைமணத் தடுப்புத் தீர்மானமும் கொணரப்பட்டு வெற்றிபெற்றது.

## காந்தியடிகளைக் காணல்

அண்ணல் காந்தியடிகள் தமிழகத்தில் சுற்றுப்பயணம் செய்தபோது தேசியக் காங்கிரசு தலைவர் திரு. எஸ். சீனிவாச ஐயங்கார் இல்லத்தில்தான் அன்னை முத்துலட்சுமி, அண்ணல் காந்தியடிகளை அன்னை கஸ்தூரிபாவுடன் முதன்முறையாகக் கண்டு பூரிப்பும் பெருமகிழ்வும் எய்தினார். முத்துலட்சுமி அறிமுகப்படுத்தப்பட்டதும் அண்ணல் காந்தியடிகள் அவரை நோக்கி, 'மேலவையில் பொறுப்பேற்றிருப்பதறிந்து மகிழ்கிறேன். நீர் பெண்ணினத்திற்கு எவ்வாறு தொண்டாற்றப் போகிறீர்' என்று கேட்டார். உடனே பெண்கள் முன்னேற்றம் தொடர்பாகத் தீட்டி வைத்திருந்த திட்டங்களையும் தீர்மானங்களையும் அண்ணல் காந்தியடிகளிடம் தந்து ஒத்துழைப்புத் தரக் கேட்டுக்கொண்டார்.

## பதவியைத் துறத்தல்

அண்ணல் காந்தியடிகள தொடங்கிய ஒத்துழையாமை இயக்கம், உறங்கிக்கொண்டிருந்த மக்களைத் தட்டியெழுப்பியது. காந்தியடிகள் தண்டியிலே உப்பெடுத்துச் சிறையில் அடைக்கப்பட்ட செய்தி காட்டுத் தீயைப்போல் பரவியது உதகையிலிருந்த அன்னை முத்துலட்சுமி செய்தி அறிந்த அரைமணி நேரத்தில் சட்ட மேலவைத் துணைத்தலைவர் பதவியைத் துறந்தார். உதகையில் தங்கியிருந்த ஆங்கில ஆளுநருக்குப் பதவி விலகல் கடிதம் எழுதித் தம் கணவர் வழியாக அனுப்பினார்.

அவ்வாறு அன்று பதவியைத் துறந்த முதல் பெண்மணியான முத்துலட்சுமியின் துணிவையும் நாட்டுப்பற்றையும் செய்தி ஏடுகளும் தேசியத் தலைவர்களும் வியந்து பாராட்டினர்

## அண்ணல் காந்திக்கு அரிய வரவேற்பு

தாழ்த்தப்பட்டோர்க்கு இழைக்கப்படும் கொடுமையைக் கண்டித்து அண்ணல் காந்தி எரவாடாச் சிறையில் உண்ணாநோன்பு இருந்து உடலிளைத்தார். அவர் உடல் நலம்பெறக்

கோரி வழிபாடு நடத்தச் சென்னை நகர மாதர் கூட்டத்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. அதற்கு அரசு தடைவிதித்தாலும் அன்னை முத்துலட்சுமி தடையை மீற முடிவு செய்தார். நோய் வாய்ப்பட்டுச் சிறிது மயக்கமுற்ற நிலையிலும் தம் கணவருடன் வந்தார் அன்னை முத்துலட்சுமி.

கூட்டம் கூடவேண்டிய திடலுக்குச் செல்லமுடியாதவாறு காவலர்களால் தடுக்கப்பட்ட மக்கள் ஆயிரக்கணக்கில் ஸ்பர்டாங் சாலையில் அலைகடலெனக் கூடியிருந்தனர். அன்னை முத்துலட்சுமி தடையை மீறி நேரே திடலுக்குள் நுழைந்துசென்று வழிபாட்டுப் பாடலைப் பாடலானார்.

அண்ணல் காந்தியடிகள், தீண்டாமை ஒழிப்புக்காகத் தென்னகத்தில் சுற்றுப்பயணம் செய்தபோது சென்னையில் மாதர் கழகத்தின் சார்பில் வரவேற்பளித்துப் பணமுடிப்பும் வழங்கினார் அன்னை.

அன்னை முத்துலட்சுமி 'ஸ்திரீ தர்மம்' (மகளிர் அறம்) என்னும் பெயரில் இதழ் தொடங்கிப் பெண்கல்வி, நாட்டுரிமை, தீண்டாமை ஒழிப்பு, இளமை மணத்தின் கொடுமைபற்றி யெல்லாம் கனல் தெறிக்கும் கட்டுரைகளை எழுதினார்.

## குழந்தைகளின் அன்புத்தாய்

அன்னை முத்துலட்சுமி குழந்தைகளிடத்தில் அளவற்ற அன்புடையவர். தாம் பிறந்து வளர்ந்த புதுக்கோட்டையில் தம் இல்லத்திற்கு அருகிலிருந்த ஆயர்குடிக் குழந்தைகளை நீரில் குளிப்பாட்டிச் சீவி முடித்து மடியிருத்திக் கொஞ்சி விளையாடிய இளமைக் காலப் பழக்கம் இறுதிவரை தொடர்ந்தது. தம் பிள்ளைகளின் பிறந்த நாள் வரும்போதெல்லாம் குழந்தை இல்லங்களுக்குச் சென்று இனிப்புப் பண்டங்கள் வழங்கி மகிழ்வது அவரது வழக்கமான பணி.

எழும்பூர் மகப்பேறு மருத்துவ மனையில் ஒரே பெண் மருத்துவ அலுவலராகப் பணியேற்றபோதும் அவர் விரும்பி ஏற்றுக்கொண்டது குழந்தைப் பகுதியே.

பாரிசில் கண்ட குழந்தைகள் பாதுகாப்பில்லத்தைப் போலக் குற்றமிழைத்த சிறுவர்கள் திருந்தி நடக்கவும் அன்பும் பிணைப்போடு வளரவும் 'குழந்தைகள் பாதுகாப்பில்லம்' ஒன்றை நிறுவியதோடு அதைச் சீர்திருத்தப் பள்ளியாகவும்

மலரச் செய்தமை அவர் அருள் உள்ளத்திற்கோர் எடுத்துக் காட்டாகும். அதேபோன்று பெண்களுக்காகக் கீழ்ப்பாக்கத்தில் 'திக்கற்ற இளம்பெண்கள் இல்லம்' அமைத்ததும் மறக்க முடியாத தொண்டாகும்.

### அவ்வை இல்லம்

சமுதாயத்தால் புறக்கணிக்கப்பட்ட இளம்பெண்கள் அன்னை முத்துலட்சுமியிடம் அடைக்கலம் வேண்டியபோது அவர் தம் தங்கை நல்லமுத்தோடும் கணவரோடும் கலந்து பேசினார். அன்று இரவே அவ்வை இல்லம் தோற்றமெடுத்தது. திருமதி நல்லமுத்து அதன் முதல் காப்பாளராகப் பொறுப் பேற்றார்.

நேர்மையும் நடுநிலைமையும் அற்ற தன்னலம் மிகுந்த சமுதாயத்திற்கெதிராகச் சூழ்நிலையின் நெருக்குதலாலும், மன எழுச்சியாலும் 1930-ல் தோற்றுவிக்கப்பெற்ற இவ் அவ்வை இல்லம் நானூறுக்கும் மேற்பட்ட குழந்தைகளுக்கும். இளம் பெண்களுக்கும், முதிய மகளிர்க்கும் புகலிடம் தந்து. ஒரு தொழிற்பள்ளி, ஒரு தொடக்கப்பள்ளி, அடிப்படை ஆசிரியர் பயிற்சிப் பள்ளி, ஓர் உயர்நிலைப் பள்ளி எனப் படிப்படியாக வளர்ந்து வலிவோடும் பொலிவோடும் விளங்குகின்றது. புறக் கணிக்கப்பட்ட ஆயிரக்கணக்கானவர் செவிலித்தாயர்களா கவும் மருத்துவர்களாகவும் ஊரகப் பெண் தொண்டராகவும் பயிற்சி பெற்று அவ்வை இல்லத்திலிருந்து ஆண்டுதோறும் வெளிவருகின்றனர்.

### பிற பணிகள்

அவ்வை இல்லத்தைத் தொடர்ந்து அன்னை முத்துலட்சுமி சென்னையில் 'ஒழுக்கந் தவறிய பெண்கள் கண்காணிப்புக் கழகம்' (Vegilance Association) ஒன்றமைத்து முதன்முறையாக அத்தகைய பெண்களுக்குத் தற்காப்பில்லம் ஒன்றும் ஏற்படுத் தினார். குற்றமிழைத்த சிறுவர்களுக்கான உதவி நிறுவனம் (Children Aid Society) ஒன்றை நிறுவி அதன் செயலாளராகப் பணிபுரிந்தார்.

### அம்மா

அவ்வை இல்லத்தைச் சேர்ந்த ஆயிரக்கணக்கான ஆதர விழந்த இளம்பெண்களும் பிறரும் அன்னை முத்துலட்சுமியை 'அம்மா' என்றே அழைத்தனர். அவர் தாம் பெற்ற பிள்ளை

ளுக்குமட்டுமன்றி அனைவருக்கும் 'அம்மா'வாகத் திகழ்ந்த தோடு பெண்கள் சீர்திருத்தத்திலே 'பெரிய அம்மா'வாகவும் (The Great Mother) அவ்வையாகவும் திகழ்ந்தார் எனலாம்.

## புற்றுநோயை எதிர்த்துப் போராட்டம்

புற்றுநோய் தொன்றுதொட்டு, வேதகாலம் முதல் இருந்து வரும் கொடிய நோயாகும். இதைப் பணக்கார நோய் என்றும் தீவினை நோய் என்றும் கூறுவதுண்டு. இதன் கடுமை நோயுற்றார்க்கும், அருகிலிருந்து காண்பவருக்குமே நன்கு தெரியும். தம் அன்புத் தங்கை சுந்தரம்மாளைத் துடிக்கத் துடிக்கத் துன்பத்தில் ஆழ்த்தி அவர் உயிருக்கே உலைவைத்த புற்று நோயின் கடுமையை அருகிலிருந்து கண்ட அன்னை முத்து லட்சுமி புற்றுநோயை அடியோடு ஒழிக்க வழி காண முயற்சி மேற்கொண்டார்.

## அடையாற்றில் புற்றுநோய் ஆராய்ச்சி நிலையம்

இங்கிலாந்து சென்று திரும்பிய அன்னை முத்துலட்சுமி சென்னை மேலவைத் துணைத் தலைவரானதும் சட்ட மேலவையில் சென்னையில் புற்றுநோய் மருத்துவ மனை ஒன்று ஏற்படுத்த வேண்டும் எனப் பேசினார். பெண்களின் கருத்தைக் கேட்க வேண்டும் என்ற ஆங்கில மரபின்படி அன்போடு கேட்டனர். ஆனால் ஒருபயனும் ஏற்படவில்லை.

1935-ல் நடந்த சென்னை மருத்துவக் கல்லூரியின் நூற்றாண்டு விழாவில் இந்தியப் பெண்கள் கழகத்தின் சார்பில் தீர்மானம் நிறைவேற்றினர். தீர்மானத்தை ஐந்தாம் ஜார்ஜ் மன்னரின் நினைவுக்கொடைக் குழுவிடம் அளித்தனர். அதே போன்ற தீர்மானத்தை மேலும் பல பெண்கள் அமைப்புகள் தந்தன. நாடு விடுதலை பெற்றபின் அன்றைய ஆளுநரின் மனைவியும் பவநகர் பேரரசியுமான மாண்புமிகு சாகிபம் தலைமையில் இந்தியப் பெண்கள் கழகத்தின் சார்பில் புற்று நோய்நீக்கச் சேமிப்புக் குழு ஒன்று அமைக்கப்பட்டது.

1951-ல் இந்தியக் குடியரசு தலைவர் மாண்புமிகு இராசேந்திர பிரசாத் புற்றுநோய் ஒழிப்பு நாளைத் தொடங்கி வைத்தார். அடையாறு காந்திநகரில் அரசு வழங்கிய நிலத்தில் 1952-ல் நேரு பெருமகனார் புற்றுநோய் ஆராய்ச்சி நிலையத்திற்கு அடிக்கல் நாட்டினார்.

## பெற்றோர், கணவர் பிரிவு

தம்மைப் பெற்ற அன்பு அன்னை 1919ஆம் ஆண்டிலும், தம் வளர்ச்சிக்கும் வாழ்விற்கும் காரணமான தந்தை 1930 ஆம் ஆண்டிலும், தம் அன்புக் கணவரும் அவ்வை இல்லத்தின் வளர்ச்சிக்கு அரும்பாடுபட்டவருமான மருத்துவர் சுந்தர ரெட்டியார் 1943-லும் இயற்கை எய்தினர்.

## புத்துலகப் பெண்துறவி புகழுடம்பெடுத்தார்

அன்னை முத்துலட்சுமி அம்மையார் எண்பதாம் அகவையில் ஒரு கோயிலெனக் காட்சி தந்தார். அவரை நினைந்தால் கவுந்தியடிகளும் அவ்வைப் பெருமாட்டியும் நம் கண்முன் தோன்றுவர். அவரைக் காண்பதும் அவரோடு பேசுவதும் அவர்தம் உறுதிவாய்ந்த தெளிவான குரலைக் கேட்பதும் யாருக்கும் எழுச்சியூட்டுவனவாகவே இருந்தன.

அத்தகு கீர்த்தி வாய்ந்த சமுதாயச் சீர்திருத்தச் செல்வி அன்னை முத்துலட்சுமி தமது எண்பத்து இரண்டாம் அகவையில் 22-7-1968-ல் தம் பொன்னுடல் நீத்துப் புகழுடம்பு எய்தினார். அவ்வை இல்லமும் புற்றுநோய் ஆராய்ச்சி நிலையமும் அன்னை முத்துலட்சுமியின் அழியாப்புகழை நிலைநாட்டும் நிறுவனங்களாகக் காட்சி தருகின்றன.

'ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லால்
பொன்றாது நிற்பதொன் றில்.'

# 11. டாக்டர் பீமராவ் அம்பேத்கார்

'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்'

என்றார் திருவள்ளுவர். மக்கட் பிறவியில் உயர்வு தாழ்வு இல்லை; ஓடும் குருதியிலும், வழிந்து ஒழுகும் கண்ணீரிலும் வேறுபாடு இல்லை; அவரவர் செயலுக்கு ஏற்பவே வேற்றுமைகள் கற்பிக்கப்படுதல் வேண்டும். ஆனால், ஒருவரைப் பிறவியினாலேயே தாழ்ந்தவராகவும் மற்றொருவரை உயர்ந்தவராகவும் கருதும் பண்பு மனித இனத்தில் எவ்வாறோ தோன்றி விட்டது. இதன் விளைவாக மக்கள் இனத்தில் ஒரு பிரிவினரைத் தீண்டத் தகாதோர் என்றும் பிற்படுத்தப்பட்டோர் என்றும் ஒதுக்கி வைத்தனர். இந்த அநீதியினை எதிர்த்துப் போரிட முதன்முதல் வலுவான குரல் எழுப்பியவர் டாக்டர் பீமராவ் அம்பேத்கார்.

## தோற்றம்

கொங்கணத்தில் இரத்தினகிரி மாவட்டத்து மந்தன்கட்டை யடுத்த அம்பாவடி கிராமத்தில் மகர் என்னும் பிரிவினருள் ஒருவராக விளங்கிய இராம்ஜி சக்பால் என்பவருக்கும் பதினான்காவது குழந்தையாகப் பிறந்தவர் அம்பேத்கார். தாழ்த்தப்பட்ட வகுப்பினரான தந்தையார்க்கு அவர் கடைசி மகனாக 1891ஆம் ஆண்டு ஏப்பிரல் திங்கள் பதினான்காம் நாள் தோன்றினார். தம் ஆறாவது வயதிலேயே தாயார் பீமாபாயை இழந்தார். பலராம், ஆனந்தராவ் என்ற அண்ணன்மாரும், மஞ்சுளா, துளசி என்ற தமக்கைமாரும் அவருக்கு மூத்தவர்கள்; மற்றவர்கள் சிறிய வயதிலேயே இறந்துவிட்டனர்.

## தீண்டாமைக் கொடுமை

சதாராவில் படித்துக் கொண்டிருந்தபோது, சிறுவன் அம்பேத்கார் தம் அண்ணனுடன் கோரேகானுக்கு மாட்டு

வண்டியில் பயணம் செய்தார். சிறிது தூரம் சென்றவுடன் அவர்களைத் தாழ்த்தப்பட்ட இனத்தவர் என்று அறிந்து கொண்ட வண்டிக்காரன் தொடர்ந்து வண்டியை ஓட்ட மறுத்துவிட்டான்; கடுஞ்சொற்களைக் கூறி அவர்களை இறங்கச் சொன்னான். ஆனால், இரட்டிப்புக் கூலி கொடுத்து அதே வண்டியில் அவர்கள் பயணம் செய்து ஒருவழியாக ஊர்போய்ச் சேர்ந்தனர். வழிநெடுக அவர்களுக்குக் குடிநீர் கூடக் கிடைக்கவில்லை. தாழ்த்தப்பட்ட சிறுவர்களுக்கு நீர் தர எவரும் முன்வரவில்லை. இந்த நிகழ்ச்சி அம்பேத்காரின் பிஞ்சு உள்ளத்தில் மாறாத வடுவாகப் பதிந்துவிட்டது.

தீண்டாமைக் கொடுமை இதனோடு நின்றுவிடவில்லை வளர்ந்திருந்த தன் முடியை வெட்டிக்கொள்வதற்காகச் சென்ற இடத்தில் 'அவனைத் தீண்டினால் தீட்டு' என்று சொல்லி நாவிதன் முடிவெட்ட மறுத்துவிட்டான். அப்படி வெட்டினால் அவனிடம் மற்ற எவரும் நெருங்கமாட்டார்கள். அதனால் அம்பேத்காரின் முடியினை அவரது தமக்கையரே வெட்ட நேர்ந்தது. எரியும் நெருப்பில் எண்ணெயாக அவரது நெஞ்சில் கனன்றது இந் நிகழ்ச்சி.

கலைமகள் கொலுவிருக்கும் கல்விச் சாலையிலும் தீண்டாமைப் பேய் தாண்டவமாடியது. மாணவர் பிறரோடு சேர்ந்து படிக்கவோ, விளையாடவோ அம்பேத்காரால் முடியவில்லை. அவருடைய குறிப்பேடுகளை ஆசிரியர்கள் தொடமாட்டார்கள்; அவரைப் பாடச் சொன்னால் பாட்டே தீட்டாகும்; அவரிடம் கேள்வி கேட்டால் அவர் தரும் விடையைக் கேட்பதால் மற்றவர்கள் புனிதத்தன்மை கெட்டுவிடும் என்று கருதினர். தேவமொழி எனக் கூறி வடமொழியை அம்பேத்காருக்குக் கற்பிக்க ஆசிரியர்கள் மறுத்துவிட்டனர். அதனால் அவர் பாரசீக மொழியைக் கற்க வேண்டியிருந்தது. பள்ளியில் மாணவர் பிறரோடு சேர்ந்து உட்காரக் கூடாது; மற்றவர்கள் நீண்ட பலகையில் உட்கார, இவர் வீட்டிலிருந்து கொண்டுசென்ற கோணிப்பை மீதே உட்கார நேர்ந்தது. இந்த நிகழ்ச்சிகள் அம்பேத்காரின் மனத்தைப் புண்ணாக்கின.

மேற்படிப்பிற்காகப் பம்பாய் சென்றபோதும் இந்தக் கொடுமை தொடர்ந்தது. சதாராவில் இருந்த அந்தண ஆசிரியர்கள் ஓரளவிற்கு அம்பேத்காரிடம் பரிவு காட்டினர். குறிப்பாக, அம்பேத்கார் என்ற ஆசிரியர் ஒருவர் இவரை அரவணைத்து அன்பு காட்டினார்; இந்த ஆசிரியரின் அன்பும்

ஆதரவும் அவரைக் கவர்ந்தன. எனவே பின்னர்த் தம் இயற் பெயரான பீமராவ் என்பதோடு அவர் பெயரையும் இணைத்து 'பீமராவ் அம்பேத்கார்' என்று மாற்றிக்கொண்டார். ஆனால், பம்பாயில் ஆசிரியர்கள் பாசம் காட்டவில்லை. ஒருமுறை கரும்பலகையில் இவரை எழுதுமாறு ஆசிரியர் பணித்தார். அதற்குப் பின்னே தம் உணவுப் பெட்டிகளை வைத்திருந்த மற்ற மாணவர்கள் அவர் கரும்பலகை அருகேகூடச் செல்வதை முற்றிலும் வெறுத்தனர். ஆசிரியர்களும் அவர் தாழ்த்தப் பட்டவர் என்பதால் இகழ்ந்து பேசினர்.

## திருமணம்

இத்தகைய இழிவுகளை ஒருவாறு தாங்கிக்கொண்டு மெட்ரிக் தேர்வில் 1907ஆம் ஆண்டு வெற்றி பெற்றார். அதனைப் பாராட்டி வீட்டினர் ஒரு விழா எடுத்தனர். தாழ்த்தப் பட்ட மகர் குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர் மெட்ரிக் படித்துத் தேறியது ஒரு பெரும் சாதனை அன்றோ? அதனால் ஒரு பாராட்டுக் கூட்டமே நடைபெற்றது. மராட்டிய மாவீரன் சிவாஜியின் வாழ்க்கை வரலாற்றை விரிவாக எழுதிய கே. ஏ. கெலுஸ்கர், கௌதம புத்தர்பற்றிய நூல் ஒன்றை அப்போது அவருக்குப் பரிசாக வழங்கிப் பாராட்டினார்.

பீமராவ் அம்பேத்கார் ஐந்தாம் வகுப்பில் படித்துக் கொண்டிருந்தபோது அவருக்கும் இரமாபாய்க்கும் திருமணம் நடந்தது; அப்போது அம்பேத்காருக்கு வயது பதினான்கு; மனைவி ஐந்து வயது இளையவர். மகர் குடும்பத்தைச் சேர்ந்த வர்களாயிற்றே; கலியாண மண்டபமும் சத்திரங்களும் திரு மணத்திற்குக் கிடைக்குமா? சந்தடி மிகுந்த பம்பாயின் பைகுல்லா சந்தையின் ஒரு பகுதியில் இரவு வேளையில் அவர் களின் திருமணம் நடந்தேறியது.

## உயர்படிப்பு

முன்னேற்றக் கருத்துகளைக் கொண்டிருந்த பரோடா மன்னர் சாயாஜிராவ் கெய்க்வார் மாதம் இருபத்தைந்து ரூபா நிதி உதவியதால், அம்பேத்கார் எல்பின்ஸ்டன் கல்லூரியில் உயர்படிப்பிற்காகச் சேர முடிந்தது. கல்லூரி முதல்வர் முல்லர், நூல்களையும் ஆடைகளையும் அளித்து உதவினார். கல்லூரி யிலும் தீண்டாமைக் கொடுமை இருந்தது. இருப்பினும் வழக்கம்போல் அவற்றைப் பொருட்படுத்தாமல் 1912ஆம் ஆண்டு பி.ஏ. பட்டம் பெற்றார்.

### தந்தை பிரிவு

தந்தையார் இரண்டாம திருமணம் செய்துகொண்டபின் அவரை விட்டுப் பிரிந்து வாழ்ந்தார் அம்பேத்கார். அதற்குக் காரணம் புதிதாக வந்த சித்தியை அவர் வெறுத்ததே ஆகும். ஆனால், பி. ஏ. பட்டம் பெற்ற பிறகு பரோடா மன்னரின் படைப்பிரிவில் பணியாற்றிக் கொண்டிருந்தபோது தம் தந்தையை இழந்தார். தாம் கடன் பட்டேனும் மகனைப் படிக்க வைக்கவேண்டும் என்று கருதிச் செலவழித்தவர் இராம்ஜி; அவர் மறைவு அம்பேத்காருக்கு அதிர்ச்சியைத் தந்தது.

### மேனாட்டுக் கல்வி

பரோடா அரசாங்கத்தின் பண உதவியோடு பட்ட மேற் படிப்புக்காக அம்பேத்கார் 1913ஆம் ஆண்டு சூலைத் திங்கள் அமெரிக்க நாட்டுக்குப் பயணமானார்; அங்குக் கொலம்பியாப் பல்கலைக்கழகத்தில் மாணவராகச் சேர்ந்து பொருளாதாரம் பயின்றார். பேராசிரியர் செலிக்மன் என்னும் ஆசிரியரிடம் கல்வி கற்றார். 'பழங்கால இந்திய வாணிகம்' என்னும் ஆய்வுக் கட்டுரை எழுதி 1915ஆம் ஆண்டு எம். ஏ. பட்டம் பெற்றார். 'இந்தியாவிற்கான தேசியப் பங்கு' என்னும் ஆய்விற்காக அவருக்கு 1916ஆம் ஆண்டு பிஎச். டி. பட்டம் தரப்பட்டது. இவ்வாய்வுரை எட்டாண்டுகளுக்குப்பின் நூலாக வெளிவந்தது. பெரிதும் பாராட்டப் பெற்ற நூல் இது.

கொலம்பியாப் பல்கலைக்கழகத்தில் படிப்பை முடித்து விட்டு இலண்டன் பொருளாதாரக் கல்வி நிறுவனத்தில் சேர்ந்தார். பின்னர், சட்டம் பயிலத் தொடங்கினார். ஆனால் பொருளாதாரச் சிக்கல்கள் காரணமாகத் தாயகம் திரும்ப நேர்ந்தது.

மீண்டும் பரோடாவில் படைச் செயலர் பொறுப்பினை ஏற்றார். அங்கு எவரும் அவருக்குத் தகுந்த மதிப்பினை அளிக்கவில்லை. குடிப்பதற்கு நீரோ, இருப்பதற்கு இடமோ எவரும் தரவில்லை. உணவகங்களும் விடுதிகளும் அவரை விரட்டின; அவர் எழுதிய கோப்புகளைப் பிறர் தொடவும் கூசினர்; இவற்றைத் தாங்க முடியாத அம்பேத்கார் திவானுக்கும் மன்னருக்கும் கடிதம் எழுதினார். அவர்களால் எந்த உதவியும் செய்ய இயலவில்லை. எனவே, பரோடா வேலையைக் கைவிட முடிவு செய்தார். 1917ஆம் ஆண்டு பம்பாய் வந்து சேர்ந்தார்.

பம்பாயில் 1918ஆம் ஆண்டு தாழ்த்தப்பட்டோர் மாநாடு ஒன்று பரோடா மன்னர் தலைமையில் நடத்தப்பெற்றது. ஆனால், உயர்சாதி இந்துக்கள் நடத்தும் இம் மாநாட்டினால் நன்மை விளையாது என்று கருதினார் அம்பேத்கார்.

1918-ல் பம்பாய் சைடன்காம் கல்லூரியில் பொருளாதாரப் பேராசிரியராகச் சேர்ந்து இரண்டாண்டுக் காலம் பணியாற்றினார்.

## இதழ் தொடங்குதல்

1920ஆம் ஆண்டு 'மூக் நாயக்' என்ற கிழமை இதழ் ஒன்றை டாக்டர் அம்பேத்கார் தொடங்கினார். 'ஊமையர் தலைவன்' என்னும் பொருள்படும் பெயருள்ள இவ் விதழ் தாழ்த்தப்பட்டோரின் குரலை மக்களிடையே சிறப்பாக எடுத்து வைத்தது. நாகபுரியிலும் கோலாப்பூரிலும் நடைபெற்ற தாழ்த்தப்பட்டோர் மாநாடுகளைக் கண்டித்து எழுதினார் அம்பேத்கார். தாழ்த்தப்பட்டோரால் நடத்தப் பெறாத இம் மாநாடுகள் எந்தப் பயனையும் அவர்களுக்கு விளைவியாது என்று அவர் உறுதியாகக் கூறினார்.

## உயர் பட்டங்கள்

மீண்டும் கல்வித்துறையில் தேர்ச்சிபெற இலண்டன் பயணமானார். 1920 செப்டம்பரில் இலண்டன் சென்ற அம்பேத்கார் பல நூலகங்களில் உறுப்பினராகி இரவும் பகலும் படித்தார். பொழுதுபோக்குகளை முழுவதும் தவிர்த்தார். 1921ஆம் ஆண்டு இலண்டன் பல்கலைக்கழகத்தில் எம். எஸ்சி. பட்டம் பெற்றார்; 1922-ல் பாரிஸ்டர் ஆனார்; 1923-ல் பான் பல்கலைக் கழகத்தில் டி. எஸ்சி. பட்டத்தைப் பொருளாதார ஆய்வுக் கட்டுரைக்காகப் பெற்றார்; ஆராய்ச்சித் துறையில் ஈடு இணையற்றவராகக் கருதப்பட்டார். அவரது ஆய்வுகள் நூல் வடிவில் வந்தபோது அறிஞர்களால் பெரிதும் பாராட்டப்பெற்றன. ஒப்பற்ற பொருளாதாரச் சிந்தனையாளர்களுள் ஒருவராக அம்பேத்கார் கருதப்பட்டார்.

## குடும்பச் சிக்கல்

அம்பேத்காரின் குடும்ப வாழ்வில் பல சிக்கல்களும் தொல்லைகளும் தொடர்ந்து இருந்தன. மூத்த மகன் இரமேஷ் சிறு வயதில் இறந்தான்; இரண்டாவது மகன் கங்காதரனும் அடுத்து மறைந்தான்; இந்து என்னும் பெண். குழந்தை

யிலேயே மாண்டாள்; எஸ்வந்த், எப்போதும் நோயினால் அவதிப்பட்டான்; கடைக்குட்டியாகப் பிறந்த இராசரத்தினம் ஒருவனே தந்தைக்கு மகிழ்ச்சி அளித்த அன்பு மகனாக விளங்கினான்.

வெளிநாட்டில் இருந்தபோது பணச்சிக்கல் ஏற்பட்டது; தம் நகைகளை விற்றேனும் குடும்பத்தைக் கவனித்துக்கொள்ள வேண்டும் என்று அம்பேத்கார் இரமாபாய்க்கு எழுதியிருந்தார். அவர் மனைவியும் பிறர் உதவிசெய்ய முன்வந்தபோது ஏற்றுக் கொள்ளவில்லை.

அம்பேத்கார் தாழ்த்தப்பட்ட இனத்திலிருந்தபடி சமுதாயத்தை உயர்த்தப் பாடுபட்டார்; பொருளாதாரச் சிக்கல்களுக்கிடையே பயின்று பொருளாதாரப் புலமை பெற்றார்; சமநீதி வழங்காத, ஏற்றத்தாழ்வு மிக்க சமுதாயத்தில் தாழ்த்தப்பட்டோரின் உயர்விற்காக நீதித்துறையில் பணியாற்றினார்; உயர்வகுப்பினர், சமுதாயச் சீர்திருத்தப் பணியை ஒரு பொழுதுபோக்குச் செயலாக மேற்கொண்டிருந்தது கண்டு மனம் வெதும்பினார்.

குடும்பச் சிக்கல்களுக்கிடையே தாம் கொண்டிருந்த கொள்கைகளுக்காக அயராது பாடுபட்டார், டாக்டர் அம்பேத்கார்.

## போராட்டம்

1923ஆம் ஆண்டு பம்பாய்ச் சட்டமன்றத்தில் பிராமணர் அல்லாதாரின் தலைவரான எஸ். கே. போல் என்பவர் பொது மருத்துவமனைகள், குளங்கள், கிணறுகள், பள்ளிகள், வீதிகள் ஆகியவற்றைப் பயன்படுத்தத் தாழ்த்தப்பட்டோருக்கு அனுமதி அளிக்கவேண்டும் என்ற தீர்மானத்தை முன் மொழிந்து சட்டமாகவும் ஆக்கினார். இதன் விளைவாக ஆங்காங்கே உயர்சாதி இந்துக்களுக்கும் தாழ்த்தப்பட்டோருக்கும் மோதல்கள் உண்டாயின. இதற்குப் பின்னர் அம்பேத்கார் சத்தியாக்கிரகப் போராட்டத்தைத் தொடங்கினார்.

## மனுநீதி எரிப்பு

1927ஆம் ஆண்டு திசம்பர் மாதம் 25ஆம் நாள் அம்பேத்கார், மனு ஸ்மிருதியை எரிக்கவேண்டும் என்று முடிவு செய்தார். மனுநீதியில் காணப்பெறும் வருணாசிரம முறையே

மனித இனப் பிரிவுகட்கு அடிப்படைக் காரணம். சமுதாயம், பொருளாதாரம், சமயம், அரசியல் ஆகியவற்றில் ஒரு பிரிவினரைத் தீண்டத்தகாதவராக அடிமைப்படுத்துவதை வலியுறுத்துவது மனுநூல். எனவே, அது எரிக்கப்படவேண்டும் என்றார்.

## காங்கிரசோடு மாறுபாடு

நாட்டு விடுதலைக்காகப் பாடுபட்ட பேரியக்கமான காங்கிரசோடு பல நேரங்களில் மாறுபட்டு நின்றார் அம்பேத்கார். தாழ்த்தப்பட்டோர் ஆங்கில ஆட்சிக்கு ஒத்துழைப்புத் தந்து சில சலுகைகளைப் பெற்றனர்; இதனை உயர்வகுப்பினர் எதிர்த்தனர்.

சவுத்பாரோ தலைமையில் வந்த வாக்குரிமைக் குழுவினர் முன் அம்பேத்கார் தாழ்த்தப்பட்டோர் சார்பாகத் தம் கருத்துகளை எடுத்துரைத்தார். ஒதுக்கப்பட்ட இச் சமூகத்தினருக்கு எனத் தனித் தொகுதிகளையும் வாக்காளர் பட்டியலையும் உருவாக்க வேண்டும் என்று அவர்களை அவர் கேட்டுக் கொண்டார்.

1927-ல் சர் ஜான் சைமன் குழுவைக் காங்கிரஸ் ஏற்றுக் கொள்ளாமலே புறக்கணித்தது. ஆனால், அம்பேத்கார் அவர்களைச் சந்தித்தார். பம்பாய் மாநிலக் குழுவின் உறுப்பினரும் ஆனார். அதனால் பம்பாய்ச் சட்டக் கல்லூரியில் அவரது பேச்சை மாணவர்கள் புறக்கணித்தனர். 'ஆங்கிலேயரின் அடிவருடி' என்று அவரை அழைத்தனர்; அம்பேத்கார் கொள்கைக்காக நின்றவர்; ஆகையினால் அதுபற்றிக் கவலைப் படவில்லை.

1930ஆம் ஆண்டு இலண்டனில் வட்டமேசை மாநாடு நடந்தது. அம் மாநாட்டில் காங்கிரஸ் பங்குகொள்ளவில்லை. அம்பேத்காரோ அதில் பங்கெடுத்துக் கொண்டார். அதனால் அவர் பலத்த கண்டனத்துக்கு ஆளானார். இருப்பினும் இலண்டனின் தாழ்த்தப்பட்டோர் உரிமைக்காக உரத்த குரலில் முழக்கமிட்டார். பிரிட்டிஷ் அரசு தீண்டாதோரை முன்னேற்ற என்ன செய்தது என்ற வினாவை அங்கு எழுப்பினார்.

1931ஆம் ஆண்டு நடந்த இரண்டாவது வட்டமேசை மாநாட்டில் தாழ்த்தப்பட்டோருக்குத் தனித் தொகுதிகள்

வேண்டும் என்று மீண்டும் வாதாடினார். இந்த மாநாட்டிற்குப் பின் காந்தியடிகளுக்கும் அம்பேத்காருக்கும் இடையே கருத்து வேறுபாடு வேரூன்றியது.

## சட்டக் கல்லூரியில்

1934ஆம் ஆண்டு பம்பாய்ச் சட்டக் கல்லூரியில் பேராசிரியராகப் பொறுப்பேற்றுச் சிறந்த பணியாற்றினார். அடுத்த ஆண்டில் அம்பேத்கார் இதுகாறும் தம்க்குப் பல வகையிலும் துணையாக இருந்த அன்பு மனைவி இரமாபாயை இழந்தார். அப்போது அவருக்குச் சட்டக் கல்லூரி முதல்வர் பொறுப்புக் கிடைத்தது. சட்டக் கல்லூரியில் சிறந்த பேராசிரியராகவும் முதல்வராகவும் விளங்கிய அம்பேத்கார் தொடர்ந்து நீண்ட நாள்களுக்கு அப்பதவிகளை வகிக்க இயலவில்லை. தாழ்த்தப் பட்ட மக்களுக்கு அவர் தொண்டாற்ற வேண்டியிருந்ததால் அவரது பேராசிரியப் பணி தடைபட்டது.

## புதிய கட்சி

1936ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் திரு. மேத்தா என்பவரோடு சேர்ந்து 'சுதந்தரத் தொழிற்கட்சி' ஒன்றைத் தொடங்கினார் அம்பேத்கார். 1937ஆம் ஆண்டில் நடந்த பம்பாய்த் தேர்தலில் பதினேழு இடங்களில் போட்டியிட்டுப் பதினைந்து இடங்களை இக் கட்சி கைப்பற்றியது. இப் பெருவெற்றியைப் பெற்றபின், காங்கிரசுக்கு எதிர்க்கட்சியாகச் சட்ட மன்றத்தில் பணியாற்றியது. அம்பேத்கார் சட்டமன்றத்தில் சிறந்த உரைகளை நிகழ்த்தினார். ஆனால், அமைப்பு முறையில் இக்கட்சி சரியாக வளர்க்கப்படவில்லை; எனவே, கட்சி நீண்ட நாள் நிலைக்கவில்லை.

## தொழில்துறை உறுப்பினர்

1942 முதல் 1946 வரை டாக்டர் அம்பேத்கார் வைசிராயின் ஆட்சிக் குழுவில் தொழில்துறை உறுப்பினராக விளங்கினார். இந்தப் பொறுப்பு மிக்க குழுவில் முதன்முதலாக இடம்பெற்ற தாழ்த்தப்பட்ட உறுப்பினர் இவரே. தாழ்த்தப்பட்டோர் உரிமை பெற இப் பதவியினால் சிறந்த பணியாற்ற முடியும் என்று அவர் கருதினார். 'இந்தியா விடுதலை அடைந்தால் மட்டும் போதாது; அந்த விடுதலை எவர் கையில் தரப்படுகிறது என்பது முக்கியமானது' என்று அம்பேத்கார் கூறினார்.

## தாழ்த்தப்பட்டோர் இயக்கம்

1945ஆம் ஆண்டு அம்பேத்கார், 'அனைத்து இந்தியத் தாழ்த்தப்பட்டோர் இயக்கம்' ஒன்றைத் தொடங்கினார். திரு. என். சிவராஜ் இதன் தலைவரானார். நாடெங்கணும் சுற்றுப்பயணம் செய்து அம்பேத்கார் சொற்பொழிவு ஆற்றினார். இயக்கம் 1946-ல் தேர்தலில் ஈடுபட்டது. ஆனால் எதிர்பாராத விதமாகப் படுதோல்வியைச் சந்தித்தது.

## சட்ட அமைச்சர்

1947ஆம் ஆண்டு ஆகஸ்டு பதினைந்தில் இந்தியா விடுதலையடைந்த போது பண்டித ஜவகர்லால் நேருவின் தலைமையில் அமைந்த மத்திய அரசில் சட்ட அமைச்சராகப் பதவியேற்றார் டாக்டர் அம்பேத்கார். காங்கிரஸ் மீதும் காந்தியடிகள்மீதும் தாம் கொண்டிருந்த வெறுப்பையும் சினத்தையும் கைவிட்டு, அமைச்சர் பணியைச் செம்மையுறச் செய்தார். தலைமை அமைச்சரான நேருவிற்கும் டாக்டர் அம்பேத்காருக்கும் பல கருத்து வேறுபாடுகள் தோன்றின; அதன் விளைவாக 1951ஆம் ஆண்டு செப்டம்பர் 27ஆம் நாள் மத்திய அமைச்சரவையிலிருந்து விலகிக்கொண்டார். இடையில் 1948ஆம் ஆண்டு ஏப்பிரல் திங்களில் டாக்டர் சாரதா கபீர் என்ற பிராமணப் பெண்ணை மணந்து கொண்டார்.

## அரசியல் அமைப்புச் சட்ட வரைவு

இந்திய அரசியல் அமைப்புச் சட்டம் உருவாக்கப்பட்ட போது அதற்கென ஒரு குழு அமைக்கப்பட்டது. அதில் மிக முக்கியமான பங்கு வகித்தவர் டாக்டர் அம்பேத்கார் ஆவார். நம் அரசியல் அமைப்புச் சட்டத்தின் 'சிற்பி' என்று அவர் போற்றப்பட்டார். குழுவில் இடம் பெற்றவர்களும் பிற தலைவர்களும் அவரது இப் பணியைப் பெரிதும் பாராட்டினர். 'அரசியல்அமைப்புச் சட்டத்தின் அன்னை' என்று அறிஞர்கள் அவரைப் புகழ்ந்தனர். மிகவும் சிக்கலான ஒரு பணியைச் செய்து முடிப்பதில் அவர் காட்டிய ஆர்வம் அனைவருடைய மனத்தையும் நெகிழச் செய்தது. 'புதிய மனு' என்னும் புகழ் மொழி டாக்டர் அம்பேத்காருக்கு அளிக்கப்பெற்றது.

## அம்பேத்காரின் நூல்கள்

டாக்டர் அம்பேத்கார் சிறந்த நூலாசிரியராகவும் திகழ்ந்தார். அறிஞர்கள் பாராட்டும் வண்ணம் உயர்பட்டங்களுக்

காக ஆய்வுக் கட்டுரைகளை வழங்கிய அம்பேத்கார் தாழ்த்தப் பட்டோரின் மேம்பாட்டை மனத்திற்கொண்டு பல அரிய நூல்களைப் படைத்தார். 'ரூபாவின் சிக்கல்,' 'பிரிட்டிஷ் இந்தியாவில் மாநில நிதிப் பிரச்சினை' ஆகிய இரண்டும் இலண்டனில் வெளியான ஆய்வுநூல்கள். 'சூத்திரர்கள் யாவர்?' 'காங்கிரசும் காந்தியடிகளும் தீண்டத் தகாதோருக்குச் செய்த தென்ன?' 'தீண்டத் தகாதோரின் விடுதலை' ஆகியவை தாழ்த்தப்பட்டோரைப் பற்றியவை 'இந்திய மகளிரின் எழுச்சியும் வீழ்ச்சியும்,'' பாக்கிஸ்தான் அல்லது இந்தியாவின் பிரிவினை,' 'புத்தரும் தம்மமும்,' 'மொழிவழி மாநிலச் சிந்தனை கள்' 'மாநிலங்களும் சிறுபான்மையினரும்' ஆகியவற்றையும் அம்பேத்கார் எழுதினார். அவருடைய நூல்கள் பிரச்சினை களை அலசின; ஆதாரங்களோடு உண்மைகள் எடுத்துரைக்கப் பட்டன. அவை வெறும் பொழுதுபோக்குக்காகவோ ஆராய்ச்சி வன்மையைக் காட்டுவதற்காகவோ எழுதப்பட்டவை அல்ல. சமுதாயத்தின் அடித்தளத்தில் உள்ளோரது உயிர்வினை நோக்கமாகக் கொண்டே அவை படைக்கப்பட்டன. எளிமை யும் தெளிவும் அவர்தம் எழுத்தில் உண்டு; மனத்தில் பதியும் வண்ணம் பேசுவதும் எழுதுவதும் அவருக்குக் கைவந்த கலை.

## புத்த சமயப் பற்று

டாக்டர் அம்பேத்கார் நீண்ட காலமாகப் புத்த சமயத்தின் மீது பற்றுதல் கொண்டிருந்தவர்; அச் சமயம் பற்றிய நூல்களையும் கட்டுரைகளையும் எழுதினார். 1956 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 14ஆம் நாள் புத்த மதத்தைத் தழுவினார். அப்போது மாநிலங்கள் அவை உறுப்பினராக இருந்த அவரைப் பின்பற்றிப் பல்லாயிரக் கணக்கானோர் புத்த சமயத்தைத் தழுவினர்; அவர்களுள் பெரும்பாலோர் தாழ்த்தப்பட்டோ ராவர். 1935ஆம் ஆண்டு ஒருமுறை, 'நான் இந்துவாகப் பிறந் தாலும் இந்துவாகச் சாகமாட்டேன்' என்று கூறியிருந்தார்; அஃது இப்போது உண்மையாயிற்று.

## மறைவு

1956 ஆம் ஆண்டு திசம்பர் மாதம் ஆறாம் நாள் உறங்கிக் கொண்டிருந்தவர் விழித்தெழாமல் மீளாத் துயிலில் ஆழ்ந்தார்; தாழ்த்தப்பட்டோரின் எழுச்சிக்காக அரும்பாடுபட்ட மாவீரர் அன்று மரணமடைந்தபோது மக்களனைவரும் கவலைக் கடலில் மூழ்கினர்.

### பண்புகள்

டாக்டர் அம்பேத்கார் நல்ல உயரமும் பருத்த உடலும் கொண்டவர்; அடிக்கடி சினம் அவரை அடைவதுண்டு; அஞ்சா நெஞ்சம் படைத்தவராய் விளங்கினார். அண்ணல் காந்தி யடிகளிடமும் பண்டித நேருவிடமும் கருத்து வேறுபாடுகள் கொண்டு கடிந்து பேசும் பண்புடையவர்; உணர்ச்சி வயப்படு வார்; தாழ்த்தப்பட்ட மக்களுக்காகத் தம் ஆயுள் முழுவதும் பாடுபட்டார்; தீண்டாமையை ஒழிக்கப் பெருமுயற்சி செய்தார்; சமுதாயச் சமத்துவத்திற்காக ஓயாது உழைத்தார்; சிறந்த பொருளாதார வல்லுநராகவும் சட்டப் பேராசிரியராகவும் திகழ்ந்தார்; உறுதி படைத்த உள்ளம் கொண்டவராய் அமைச்சர் பதவியைக்கூடத் துச்சமென விட்டு விலகினார்; மனித நல உரிமைகளுக்காகப் போராடிய ஒப்பற்ற சிந்தனை யாளர்; உயர்ந்த எழுத்தாளர்; இந்திய அரசியல் சட்டம் படைத்த மாமேதை. வாழ்க அம்பேத்கார் புகழ்.

# 12. அறிஞர் அண்ணா

தாழ்ந்து கிடந்த தமிழகத்தைத் தலைநிமிரச் செய்வதற்குப் பாடுபட்ட தனிப்பெருந் தலைவர்களுள் குறிப்பிடத்தக்க பெருமையுடையவர் பேரறிஞர் அண்ணா ஆவார். தம் எழுத்தா லும் பேச்சாலும், தன்னடக்கத்தாலும் தலைமைப் பண்பாலும், நேர்மை உணர்வாலும் நிருவாகத் திறனாலும் ஈடு இணை யற்றவராக விளங்கியவர் அண்ணா. அவர் ஓர் இயக்கத்தை எவ்வாறு நடத்த வேண்டும் என்பதற்கு இலக்கணம் வகுத்தவர். அவர் கட்சி வளர்ப்பதிலும் கலைவளர்ப்பதிலும் தம் ஒப்பற்ற திறமையை வெளிப்படுத்திப் புகழ்பெற்றவர். அண்ணாவின் அரசியல் வாழ்வே - அவர்தம் பணியே அவர் காலத் தமிழகத் தின் வரலாறு என்று சொல்லத்தக்க வகையில் அமைந்தது.

## தோற்றம்

வரலாற்றுப் புகழ்வாய்ந்த காஞ்சிபுரம் அவர் பிறந்த இடம். தந்தை நடராசருக்கும் தாய் பங்காருவிற்கும் மகனாக 1909ஆம் ஆண்டு செப்டம்பர் பதினைந்தாம் நாள் அண்ணா தோன்றினார். பிற்பட்ட வகுப்பைச் சேர்ந்த ஓர் எளிய குடும் பத்தில் பிறந்து வளர்ந்த அண்ணாவிற்குப் பெற்றோர் இட்ட பெயர் அண்ணாதுரை என்பது. ஆனால் அவருடைய அன்பை யும் பண்பையும், திறமையையும் தகுதியையும் உணர்ந்த தமிழகம் அவர் பெயரைச் சுருக்கி 'அண்ணா' என்றே அழைத்தது. சிறிய வயதில் அண்ணாவைப் பாசங்காட்டிப் பரிந்தெடுத்து வளர்த்தவர் அவர்தம் 'தொத்தா' (சிற்றன்னை) இராசாமணி அம்மையாராவார்.

## கல்வி

காஞ்சிபுரம் பச்சையப்பன் உயர்பள்ளியில் அண்ணா கல்வி கற்றார். மிகுந்த நினைவாற்றல் கொண்ட அண்ணா தம் பாடங்களை ஒரிரு முறை பயின்ற அளவிலேயே மனத்தில் பதிய வைத்துக்கொள்வார். அவர் ஆசிரியர்களை மதித்து அன்போடும் பண்போடும் பழகினார்.

தம் குடும்பம் வறுமையில் உழன்றதைக் கண்ட அண்ணா, பள்ளிக் கல்வியை முடித்தவுடன் காஞ்சிபுரம் நகராட்சியில் எழுத்தர் பணியில் அமர்ந்தார். வருவாய் மிகக் குறைவாக இருந்த போதிலும் அவர் வேறு வழியின்றி அதனை மேற் கொள்ள வேண்டியிருந்தது. உலகளாவச் சுற்றிப் பேரும் புகழும் பெற்ற அண்ணா, தம் இளவயதில் ஓர் எழுத்தராகப் பணியாற்றத் தொடங்கினார் என்பது வியப்புக்குரிய ஒன்றே!

கல்வியில் நாட்டமும் அறிவார்வமும் கொண்ட அண்ணா பிற்பட்ட வகுப்பினர் மேற்படிப்புப் பெறுவதற்கு அரசு தந்திருந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொள்ள விரும்பினார். அதன் விளைவாகத் தம் பணியை விட்டுவிட்டுச் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் 'இன்டர்மீடியட்' வகுப்பில் சேர்ந் தார். பேராசிரியர்கள் போற்றும் வண்ணம், அனைவருடைய எண்ணத்தையும் ஈர்க்கும் வகையில் அண்ணா கல்வி பயின்று தேர்வில் முதல் வகுப்பில் வெற்றி பெற்றார். தங்க நகைகளை அவர் படிப்பிற்காக விற்றனர் பெற்றோர். பொருளாதார நிலையில் குடும்பம் உயரவில்லை என்றாலும் தம் படிப்பைக் கைவிட மனமில்லாத அண்ணா பட்டவகுப்பில் பொருளா தாரத்தையே பாடமாகக் கொண்டு கல்வியைத் தொடர்ந்தார்.

கல்லூரி நேரம் போக மற்ற நேரங்களிலும் அறிவைத் தேடும் வேட்கையுடனேயே அவர் இருந்தார். சென்னை யிலிருந்த பல்வேறு நூலகங்களுக்குச் சென்று நூற்றுக்கணக் கான அரிய நூல்களை ஆர்வத்துடன் கற்றார். எப்போதும் நூல்களைப் படிக்கும் இந்த நல்ல பழக்கம் அவரது இறுதிக் காலம் வரை நீடித்தது. பாடம் கற்பித்த ஆசிரியர்களே வியக்கும் வண்ணம் அவர் கல்விநிலை உயர்ந்தது. கல்லூரி அரங்கங்களில் அவர் சிறந்த சொற்பொழிவுகள் ஆற்றினார்; ஆண்டு மலர்களில் எழுச்சிமிக்க கட்டுரைகளைத் தீட்டினார். இந்தப் பருவத்தில் அவர் எழுதிய 'மாஸ்கோ அணிவகுப்பு' என்னும் கட்டுரை அனைவராலும் பாராட்டப்பட்டது.

பட்டிமன்றங்களிலும் கருத்தரங்கங்களிலும் அண்ணாவின் தெளிந்த பேச்சுகள் இடம்பெற்றன. அவருடைய சொற்பொழிவுகள் நறுமணமிக்க மலர்ச்சோலையில் புகுந்து குளிர்ச்சியுடன், மெல்ல மிதந்துவரும் பூந்தென்றலைப் போல அமைந்தன.

கல்லூரி மாணவராயிருந்தபோது அண்ணா பெற்ற கல்வி, கட்டுரை எழுதும் திறம், கவின்மிகப் பேசும் ஆற்றல், விடாது

படிக்கும் பண்பு, மாற்றார் கருத்துகளை நயமாக மறுக்கும் மாண்பு முதலியன அவர் பிற்காலத்தில் தமிழகத்தின் உயர்வுக்கும் எழுச்சிக்கும் பாடுபட்டபோது பெரிதும் பயன்பட்டன; அண்ணாவின் பெரும்புகழ் வாழ்விற்கு அடித்தளமாக அமைந்தவை இவை. 1934ஆம் ஆண்டு அண்ணா எம்.ஏ. பட்டம் பெற்றுச் சிறந்தார்.

### இல்லறம்

1930ஆம் ஆண்டு அண்ணா திருமதி இராணி அம்மையாரைத் திருமணம் செய்துகொண்டார். இரக்கவுணர்வும் தொண்டுள்ளமும் கொண்ட மனைவியார் தம் கணவருக்கு வீட்டைப்பற்றிய கவலைகள் ஏதுமில்லா வகையில் இல்லறம் நடத்தினார். நூறாயிரக்கணக்கான தொண்டர்களைத் தம்பியராக அரவணைத்த அண்ணாவிற்கு மக்கட்பேறு கிடைக்காவிடினும் நால்வரை வளர்த்து மகிழ்வெய்தினார். அண்ணாவின் பல்வேறு இயக்கப் பணிகளுக்கும் அம்மையார் ஒத்துழைப்பு நல்கினார்; இயக்கத்தினரால் 'அண்ணியார்' என்றே அன்புடன் போற்றப் பெற்றார்.

### பொதுப்பணி

ஏதேனும் பணியிலமர்ந்து குடும்ப வறுமையை நீக்கும் பொறுப்புத் தமக்கு இருந்த போதிலும், தமிழகச் சமுதாய நிலைமைகள் அவரைப் பொதுத் தொண்டாற்றும் ஒருவராக ஆக்கிவிட்டன. எங்குப் பார்த்தாலும் மூடநம்பிக்கைகள், மதங்களின் பெயரால் ஏமாற்றுதல்கள், சாதியின் பெயரால் போராட்டங்கள், பொருளாதாரக் கொடுமையால் ஏற்றத் தாழ்வுகள், சமுதாயத்தில் சரிசெய்ய முடியாத மேடுபள்ளங்கள் என்று பலவாறாக நிலவிய சமூகக் கொடுமைகளை நீக்கப் பணிபுரிவது என்று உறுதிகொண்டார் அண்ணா. அவர் குடும்பத்தினரோ நல்ல வேலையிலமர்ந்து பொருளீட்ட வேண்டும் என்று கருதியிருந்தனர். அவர்கள் விருப்பத்திற்கிணங்க நடுத்தரப் பள்ளியொன்றில் ஆசிரியராகச் சில காலம் பணியாற்றிய அண்ணா, பின்னர் அதனை விட்டுப் பொதுப் பணியில் பெரிதும் அக்கறை காட்டினார்.

நானிலம் கேட்டு மகிழும் நாவன்மையும், புதிய சிந்தனைகளை உருவாக்கும் கட்டுரை வன்மையும் கொண்ட அண்ணாவின் இயல்பிற்கு ஆசிரியப் பணி என்னும் சிறிய வட்டம் போதுமானதாக அமையவில்லை. மிகப் பெரிய சமுதாய வளையத்தில் பல போராட்டங்களைச் சந்திக்க முனைந்து வெற்றி காணத் துடித்தார் அண்ணா. இதனால் செட்டிநாட்டரசர் முத்தையா

அவர்கள், தம் அணுக்கச் செயலராகத் திங்கள் ஒன்றுக்கு ரூ. 120 ஊதியத்தில் பணியேற்குமாறு வேண்டியதை அண்ணா அவர்கள் மறுத்துவிட்டார். தம் அறிவும் ஆற்றலும் தனி யொருவர்க்கென்று அமைவதைவிட நாட்டிற்குப் பயன்பட வேண்டும் என்று அவர் பெரிதும் விழைந்தார்.

### பெரியாரும் அண்ணாவும்

கோவை மாவட்டம் திருப்பூரில் நடந்த இளைஞர் மாநாட்டில் அண்ணா பெரியாரைச் சந்தித்து உரையாடினார். பொதுவாழ்வில் தமக்கிருக்கும் நாட்டத்தை அவருக்குத் தெரிவித்தார். அண்ணாவின் எண்ணத்தையும் திறமையையும் உணர்ந்த தந்தை பெரியார் மறுப்பேதும் சொல்லாமல் அதனை ஏற்றுக்கொண்டார். அதன் விளைவாக அண்ணா தமிழகத்து மேடைகளில் பகுத்தறிவுக் கொள்கைகளை முழக்கிவந்தார்; தம் திறமை மிக்க பேச்சாற்றலினால் தமிழகத்தை விழிப்புறச் செய்தார். 'தென்னிந்திய நல உரிமைச் சங்கம்' அவரால் பயன் பெற்றது. தொழிற்சங்கத் தலைவர் பாசுதேவ் உட்படப் பலர் அவர்மீது அன்புகொண்டு அவரைப் பாராட்டிப் போற்றினர்.

1935-ல் நடந்த சென்னை மாநகராட்சி மன்றத் தேர்தலில் அண்ணா ஒரு வேட்பாளராக நின்றார்; ஆனால் வெற்றி வாய்ப்பை இழந்தார். தோல்வியினால் அண்ணா மனம் துவண்டுவிடவில்லை. மேலும் பேரார்வத்துடன் பொதுப்பணி களில் முழுமனத்தோடு செயலாற்ற முற்பட்டார்.

### போராட்டங்கள்

1937ஆம் ஆண்டில் தமிழகப் பள்ளிகளில் இந்திமொழி கட்டாயப் பாடமாகப் புகுத்தப்பட்டது. தமிழர்க்குத் தேவை யில்லாத மொழியைத் தமிழ்நாட்டின் பள்ளிகளில் இளஞ் சிறாருக்குக் கற்பிப்பது முறையாகாது என்றும், வடநாட் டினரின் ஆதிக்க உணர்வே இதற்கு அடிப்படை என்றும் மக்கள் கருதினர். எனவே, இந்தி ஆதிக்கத்திற்கு எதிராக ஒரு மாபெரும் இயக்கம் உருவாயிற்று, 1938ஆம் ஆண்டு நிகழ்ந்த இந்தி ஆதிக்க எதிர்ப்புப் போராட்டத்தில் தமிழறிஞர்களும் தமிழுணர்வுடையவர்களும் இணைந்து நின்றனர். அப் போராட்டத்தில் ஈடுபட்ட அண்ணா அவர்கள் நான்கு திங்கள் சிறைத்தண்டனை பெற்றார். இப் போராட்டத்தின் பயனாக 1940ஆம் ஆண்டு இந்தித் திணிப்புத் தமிழ்நாட்டில் விலக்கப் பட்டது.

1940ஆம் ஆண்டு திருவாரூரில் நடந்த மாநாட்டின் மூலம் 'திராவிடநாடு திராவிடருக்கே' என்னும் கருத்து உருவானது. இந்த உணர்வைத் தமிழரிடையே தட்டி எழுப்பி நாடெங்கும் பரப்பினார் அண்ணா. பெரியார் நடத்திய விடுதலை நாளேட்டில் துணையாசிரியர் பொறுப்பையும் அவர் ஏற்றார். அதில் பல அருமையான அரசியல் கட்டுரைகளைத் தீட்டிப் பெரியாரின் அன்பையும் பெற்றார்; மக்களின் பாராட்டுதலையும் ஈட்டினார்.

இரண்டாம் உலகப்போர் நடந்த காலத்தில் தமிழக ஆளுநருக்கு அளவுகடந்த அதிகாரங்கள் வழங்கப்பட்டிருந்த போதிலும், பின்விளைவுகளைப்பற்றிச் சிறிதும் அஞ்சாமல் அண்ணா தம் கருத்துகளை அரிய கட்டுரைகளாக வெளியிட்டார்.

இந்தித் திணிப்பை எதிர்த்து மீண்டும் 1946ஆம் ஆண்டில் அறப்போர் நடந்தது. இம் முறை அண்ணா, பெரியார் தலைமையில் ஒரு தளபதியாகப் பொறுப்பேற்றுப் போராடினார். இந்தியை எதிர்த்து நாட்டின் பல இடங்களிலும் பேசினார்; கட்டுரைகளை எழுதினார்; எழுச்சியை உண்டாக்கினார்.

1947 ஆகஸ்டு பதினைந்தில் இந்தியாவிற்கு விடுதலை கிடைத்தபோது பெரியார் அதனைத் தமிழருக்குத் 'துக்கநாள்' என்றார். ஆனால் அண்ணாவோ பெரியார் அணியில் இருந்தபடி தமக்கே உரிய அஞ்சாமையுடன் அந்த நாளை மகிழ்ச்சிக்குரிய நாள் என்று வாதிட்டார். இருவருக்கும் கருத்துப் போராட்டம் இதனால் முகிழ்த்தது.

1953ஆம் ஆண்டு தமிழகம் வியப்புறும் வகையில் 'மும்முனைப் போராட்டம்' ஒன்றனை அண்ணா நடத்தினார். தமிழர்களைப்பற்றி அந்நாள் பிரதமர் நேரு கூறிய கடுஞ்சொற்களை எதிர்த்தும், முதல்வர் இராஜாஜியின் குலக்கல்வித் திட்டத்தை எதிர்த்தும், தொடர்வண்டி நிலையங்களிலும் பிற இடங்களிலும் இந்தி திணிக்கப்படுவதை எதிர்த்தும் நடந்த இந்தப் போராட்டங்களில் ஆயிரக்கணக்கானோர் ஈடுபட்டுச் சிறை சென்றனர். அண்ணா இந்தப் போராட்டத்தை நடத்திய திறன் கண்டு அனைவரும் வியந்தனர்.

இங்ஙனம் அண்ணா ஈடுபட்ட போராட்டங்கள் பல; சிறை செல்வதற்குச் சிறிதும் அஞ்சாமல் பன்முறை சிறை சென்றுவந்தார். மொழிக்காகவும் நாட்டிற்காகவும் இனத்திற்காகவும் சிறை செல்வதற்கு அவர் சிறிதும் தயங்கியதில்லை.

## இயக்கம் காணுதல்

தந்தை பெரியாரின் திருமணத்தை எதிர்த்துத் திராவிடர் கழகத்திலிருந்து விலகித் தம் நெருங்கிய தோழர்களுடன் அண்ணா, திராவிட முன்னேற்றக் கழகம் என்னும் புதிய இயக்கத்தினை 1949 செப்டம்பரில் தொடங்கினார். அவர் வாழ்வில் இது புதிய திருப்பமாக அமைந்தது. கட்சியின் தலைமைப் பொறுப்பிலிருந்தபடி மிகுந்த அடக்கத்துடனும் திறமையுடனும் பொறுப்புணர்ச்சியுடனும் அதனை வளர்த்தார். தம் இயக்கத்தினரைத் தம்பி என்றே அழைத்து ஒரு குடும்பப் பாசத்தோடு கழகத்தை நடத்தினார். கடமை, கண்ணியம், கட்டுப்பாடு என்னும் மணிமொழிகளால் அவர்களை ஒன்று படுத்தித் தொண்டாற்றினார். படிப்படியாகக் கழகத்தை வளர்த்து ஆட்சி அமைக்கும் அளவிற்கு அதனை உயர்த்தினார்.

## ஆட்சி மன்றங்களில் அண்ணா

1957ஆம் ஆண்டு நடைபெற்ற பொதுத்தேர்தலில் திராவிட முன்னேற்றக் கழக வேட்பாளராகக் காஞ்சிபுரத்தில் போட்டி யிட்டுச் சட்டமன்ற உறுப்பினராகப் பொறுப்பேற்ற அண்ணா, தம் அறிவார்ந்த பேச்சினாலும், ஆற்றல் மிக்க விவாதத் திறனாலும் சட்டமன்றத் தலைவர் உட்பட அனைவருடைய எண்ணத்தையும் ஈர்த்து, நன்மதிப்பையும் பெற்றார். 1962ஆம் ஆண்டில் நடந்த பொதுத்தேர்தலில் அண்ணா மீண்டும் காஞ்சியில் போட்டியிட்டார்; ஆனால் இந்த முறை வெற்றி வாய்ப்பை இழந்தார். அண்ணாவின் தோல்வி கண்டு நாட்டு மக்கள் கலக்கமுற்றனர். அவரோ அதனைப் புன்னகையுடன் ஏற்றார். தமிழ்நாட்டுச் சட்டமன்றத்தின் இழப்பு, தில்லிப் பாராளுமன்றத்திற்குப் பேறாக முடிந்தது. அண்ணா அடுத்து நடந்த மாநிலங்கள் அவைத் தேர்தலில் வெற்றிபெற்றுப் பாராளுமன்ற உறுப்பினராக ஆனார். அழகுமிகுந்த ஆங்கிலத் தில் ஆணித்தரமாக வாதங்களை யடுக்கி அண்ணா ஆற்றிய பாராளுமன்றச் சொற்பொழிவுகள் அவரை நாடறிந்த பெருந் தலைவராக ஆக்கின. அவரது கூர்த்த அறிவையும் பேச் சாற்றலையும் கண்டு இந்திய நாடே வியந்து போற்றியது.

1967ஆம் ஆண்டில் நடைபெற்ற பொதுத்தேர்தலில் அவர் தலைமையில் தோன்றி வளர்ந்த இயக்கம் பெருவெற்றி பெற்றது. அதன் பயனாக அண்ணா தமிழக முதலமைச்ச ராகப் பொறுப்பேற்றார். நாடு போற்றும் நல்ல திட்டங்களை அண்ணா தீட்டினார். மாற்றாரும் பாராட்டத்தக்க அரிய சாதனைகளைச் செய்து காட்டினார்; குறைந்த விலையில்

ஏழை மக்களுக்கு அரிசி கிடைக்குமாறு செய்தார்; 'சென்னை மாநிலம்' என்ற பெயரை மாற்றித் 'தமிழ்நாடு' என்னும் செவிக்கினிய பெயரைச் சூட்டிப் பெருமையுற்றார்; கல்வித் துறையில் புகுமுக வகுப்புவரை இலவசக் கல்வியைக் கொண்டு வந்தார்; மதுவிலக்கில் தீவிரம் காட்டினார்; கலப்புத் திருமணங் களைப் போற்றும் நோக்கில், 'சுயமரியாதைத் திருமணச் சட்டம்' ஒன்றனைக் கொண்டுவந்து நிறைவேற்றினார்; அவர் ஆட்சிக் காலத்திலேயே இரண்டாவது உலகத் தமிழ் மாநாடு சென்னை நகரில் மிகவும் எழுச்சியுடனும் ஏற்றத்துடனும் நடத் தப்பெற்றது. பல்கலைக்கழகங்களில் திருக்குறள் ஆய்வுக்கு எனத் தனிப் பிரிவுகள் அமைக்கப்பட்டன. அண்ணாவின் ஆட்சிக் காலத்தில் தமிழகம் சிறந்த முறையில் எல்லாத் துறை களிலும் வளர்ச்சி பெற்றது.

### மதுவிலக்கு

அறிஞர் அண்ணா அவர்கள் மேற்கொண்ட சமுதாயச் சீர்திருத்த நடவடிக்கைகளில் மிகவும் குறிப்பிடத்தக்கது மதுவிலக்குப் பற்றியதாகும். தாம் ஆட்சியிலிருந்தபோது ஏழை எளிய மக்கள் மதுவினால் துன்புறக்கூடாது என்பதில் மிகுதியும் அக்கறை காட்டினார். "மதுவிலக்கை ரத்து செய்து விடுவதன் விளைவாகக் கண்ணீர் வடிக்கும் தாய்மார்களின் முகங்களும், அழுது கதறும் குழந்தைகளின் உருவங்களும், நலிந்துவிட்ட குடும்பங்களும் என்னுடைய மனக்கண்முன் காட்சியளித்தன; சிறிது நேரம் சிந்தித்தேன்; மதுவிலக்கை ரத்து செய்வதன் மூலம் கிடைக்கும் வருமானத்தைவிடத் தாய் மார்களின் மகிழ்ச்சி பொருந்திய குடும்பங்கள்தாம் தமிழக அரசுக்கு முக்கியம்; 'இதற்கு எதிராக இந்த வருமானம் எந்த வகையிலும் ஈடன்று' என்று முடிவு கட்டினேன்" என்னும் அண்ணாவின் சொற்கள் மதுவிலக்குக் கொள்கையில் அவர் கொண்டிருந்த அழுத்தமான ஈடுபாட்டை நன்கு விளக்கும்.

### பேச்சாளர் அண்ணா

தமிழக மேடைப் பேச்சிற்கு ஓர் எழிலையும் ஏற்றத்தையும் வழங்கியவர் அண்ணா. ஆற்றொழுக்காகவும் நகைச்சுவை கலந்ததாகவும் கருத்தாழம் மிக்க சொற்பொழிவுகளை அண்ணா நிகழ்த்தினார். கல்லூரி அரங்குகளிலும் பல்கலைக் கழக மண்டபங்களிலும் தமிழ் மாநாடுகளிலும் பொது மேடை களிலும் நடந்த அண்ணாவின் அருவிநடைப் பேச்சைக் கேட்பதற்கு மக்கள் ஆயிரக்கணக்கில் திரண்டனர். பல இடங் களில் பொருள் கொடுத்துச் சீட்டு வாங்கி அவர் மேன்மையான பேச்சை மக்கள் ஆர்வத்துடன் கேட்டனர். எதுகை மோனை

கலந்த அவர் அடுக்குமொழி அனைவரையும் கவர்ந்தது; அவரைப் பின்பற்றிப் பலர் பேசுதற்கு முயன்றனர். 'ஆற்றோரம்,' 'பொருள்,' 'தலைப்பில்லை,' 'உலகம் புதியதும் பழையதும்' முதலிய பல அருந்தலைப்புகளில் அண்ணா ஆற்றிய சொற்பொழிவுகள் கேட்போர்ப் பிணிக்குந் தகையவாய் அமைந்தன.

கல்லூரிகளிலும் ஆட்சி மன்றங்களிலும் வேறு பிற இடங்களிலும் அண்ணா ஆற்றிய ஆங்கில உரைகள் அவர்தம் ஆங்கிலப் புலமைக்குச் சிறந்த சான்றுகளாக விளங்குகின்றன. தமிழில் பேசுவது போலவே எதுகை மோனை நயத்தோடு ஆங்கிலத்திலும் பேச வல்லவர் அண்ணா. சர் ஏ. இராமசாமி முதலான அறிஞர் பலருடைய ஆங்கிலச் சொற்பொழிவுகளைத் தமிழில் மொழிபெயர்த்துப் புகழ்பெற்றவர் அவர்.

**எழுத்தாளர் அண்ணா**

1942ஆம் ஆண்டில் அண்ணா சொந்தமாகத் 'திராவிட நாடு' என்னும் கிழமை இதழொன்றைத் தொடங்கினார். கதை, நாவல், கட்டுரை, கடிதம் என்று பல இலக்கிய வகைகளைப் பயன்படுத்தித் தம் எழுத்தாற்றலால் தமிழரைத் தம்பால் கவர்ந்திழுத்தார் அண்ணா.

ரங்கோன் ராதா, பார்வதி பி.ஏ., கபோதிபுரக் காதல், கலிங்கராணி முதலான பல புதினங்களை அண்ணா எழுதினார்; செவ்வாழை, புலிநகம், பிடி சாம்பல், ராஜபார்ட் ரங்கதுரை முதலான பல சிறுகதைகளை வழங்கினார். 'தம்பிக்கு' என்னும் தலைப்பில் கிழமைதோறும் அரசியல் கடிதங்களைத் தீட்டினார். கடித இலக்கிய வகையில் அண்ணாவின் 'தம்பிக்கு' மிகவும் சிறந்த இடத்தைப் பெற்றது.

'மாஜி கடவுள்கள்,' 'ஆரிய மாயை,' 'குமரிக்கோட்டம்,' 'கம்பரசம்,' 'பணத்தோட்டம்' முதலான பல அரிய ஆய்வு நூல்களையும் அண்ணா படைத்தார்.

'எதையும் தாங்கும் இதயம் வேண்டும்,' 'எங்கிருந்தாலும் வாழ்க,' 'தம்பியுடையான் படைக்கஞ்சான்,' 'மறப்போம் மன்னிப்போம்,' 'வாழ்க வசவாளர்கள்,' 'கிளிக்குப் பச்சை வண்ணம் பூச வேண்டுமா?' 'கோடு உயர்ந்தது குன்றம் தாழ்ந்தது,' 'மாற்றான் தோட்டத்து மல்லிகைக்கும் மண முண்டு,' 'ஏடா தம்பி எடடா பேனா' முதலான அண்ணாவின் தொடர்கள் அவருடைய சிந்தனையாற்றலுக்கு எடுத்துக் காட்டுகளாம்.

அரசியலில் நிறைந்த பணி இருந்ததனால் அண்ணாவால் 'திராவிட நாடு' இதழைத் தொடர்ந்து நடத்த இயலவில்லை. ஆனாலும் சிறந்த இதழாசிரியரான அவர் முற்றிலுமாக அத்துறையைக் கைவிட்டுவிடவில்லை. பின்னர், 'காஞ்சி' என்னும் இதழைச் சிறிது காலம் நடத்தினார்.

ஆங்கிலத்தில் புலமை கொண்டிருந்த அண்ணா "ஹோம்லாண்டு' என்னும் ஆங்கிலக் கிழமை இதழையும் நடத்தினார்.

## நாடக ஆசிரியர் அண்ணா

முத்தமிழில் ஒன்றான நாடகத்துறையினைச் சீரிய முறையில் பயன்படுத்தியவர் அண்ணா. ஏட்டில் எழுதுவதைக் காட்டிலும், மேடையில் பேசுவதைக் காட்டிலும் அரங்கத்தில் நாடக வாயிலாக அரிய கருத்துகளை மக்களிடையே பரப்ப முடியும் என்பதை அவர் கண்டார். அதன் விளைவாகப் பல நாடகங்களைப் படைத்தார். 'சந்திரோதயம்,' 'சந்திரமோகன் அல்லது சிவாஜி கண்ட இந்து சாம்ராஜ்யம்,' 'ஓர் இரவு,' 'வேலைக்காரி,' 'நீதிதேவன் மயக்கம்,' 'காதல் ஜோதி' முதலிய பல அரிய நாடகங்கள் வாயிலாகத் தம் சமுதாயக் கருத்துகளை அண்ணா பரப்பினார். நாடகத் துறையில் அண்ணாவின் நுழைவு ஒரு புதுமையையும் மறுமலர்ச்சியையும் உண்டாக்கிற்று தாம் நாடகம் படைத்ததோடு நில்லாமல் அவற்றில் தாமே முக்கியப் பங்கேற்றும் நடித்தார். அவர் எழுத்தாற்றலைக் கண்டு வியந்தது போலவே அவருடைய நடிப்பாற்றலைக் கண்டும் மக்கள் பெருவியப்புக் கொண்டார்கள்.

## திரைப்படத்துறையில் அண்ணா

அரசியல் பணிகளுக்கிடையில் கலைப்பணி ஆற்றி வந்த அண்ணா, நாடகத்துறையில் வெற்றி பெற்றதை அடுத்துத் திரைப்படத்துறையிலும் இறங்கினார். சென்ற இடத்திலெல்லாம் சிறப்பே பெறும் அண்ணா, 'வேலைக்காரி,' 'ஓர் இரவு' என்னும் ஒப்பற்ற திரைப்படங்களுக்குக் கதையும் உரையாடலும் தீட்டி அவற்றின் வெற்றிக்கு உதவினார். 'சொர்க்க வாசல்' அவருடைய மற்றொரு சிறந்த படமாக வெளிவந்தது. அவரியக்கத்தைச் சேர்ந்தவர் அவருடைய கதைகள் பலவற்றைத் திரைப்படங்களாக ஆக்கினர். அண்ணாவின் உரையாடல் திறன் தமிழக மக்களைப் பெரிதும் கவர்ந்தது. கருத்தாழமும் கவின்மிகு நடையும் மக்களை மயக்கின, நாடகம், திரைப்படம், ஏடுகள் ஆகியவற்றைத் தம் சீர்திருத்தக் கருத்து

களை வெளியிடுவதற்கான திறன் வாய்ந்த கருவிகளாகவே அண்ணா பயன்படுத்திக்கொண்டார். அவரைப் பின்பற்றிப் பலர் நாடகம், திரைக்கதை உரையாடல்களை எழுதிப் பேரும் புகழும் பெற்றனர்.

### டாக்டர் அண்ணா

1968ஆம் ஆண்டில் அமெரிக்க நாட்டு 'எல் பல்கலைக் கழகம்' அவரைச் சொற்பொழிவு ஆற்றுவதற்காக அழைத்தது. 'சப் ஃபெலோஷிப்' என்னும் திட்டத்தின்கீழ் அமெரிக்கா சென்ற அண்ணா அங்கிருந்த ஆசிரியர் மாணாக்கர் ஆகியோரின் நல்லன்பினைப் பெற்றார். திருக்குறளையும் தமிழ்ப் பண்பாட்டையும்பற்றி அங்கு விரிவுரையாற்றித் தமிழுக்கும் தமிழ்நாட்டுக்கும் பெருமை சேர்த்தார்.

அண்ணாவின் பல்துறைப் பணிகளைப் பாராட்டி மகிழும் முறையில் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் 1968ஆம் ஆண்டு அவருக்கு 'டாக்டர்' என்னும் சிறப்புப் பட்டம் வழங்கியது.

### மறைவு

அண்ணாவின் பேரும் புகழும் உச்சநிலை அடைந்த அதே நேரத்தில் அவருடைய உடல்நிலை மிகவும் சீர்குலைந்தது. அமெரிக்காவிற்கு ஒருமுறை சென்று மருத்துவம் பார்த்தும் பயனின்றிச் சென்னை திரும்பிய பின்னர் 1969ஆம் ஆண்டு பிப்பிரவரித் திங்கள் மூன்றாம் நாள் விடியலுக்கு முன்பு அவர் உயிர் பிரிந்தது. தமிழகம் அவரை இழந்து தவித்தது; மக்கள் ஆற்றொணாத் துயரில் ஆழ்ந்தனர்.

### நினைவு

அண்ணா மறைந்த பின்னர்ப் பொறுப்பேற்ற அவருடைய தம்பியர் அவர் நினைவைப் போற்றும் வண்ணம் சென்னையில் 'அண்ணா சதுக்கம்' ஒன்றனைக் கண்டனர்; புகழ்பெற்ற மவுன்ட் ரோட்டிற்கு 'அண்ணா சாலை' என்று பெயரிட்டனர்; மைய அரசின் அஞ்சல் துறை அண்ணாவின் பணியைப் பாராட்டி அஞ்சல் தலையொன்றை வெளியிட்டது. சென்னையிலிருந்த தொழில்நுட்பக் கல்லூரியை அரசு 'பேரறிஞர் அண்ணா தொழில்நுட்பப் பல்கலைக்கழக'மாக மாற்றியது.

தமிழினப் பெருந் தளபதியாக விளங்கிய பேரறிஞர் அண்ணாவின் நினைவு தமிழ் மக்கள் நெஞ்சில் என்றும் நிலைத்து நிற்பதாகும்.

## கட்டுரைப் பயிற்சி

1. தந்தை பெரியாரின் இளமையும் துறவும்.
2. தந்தை பெரியாரின் பகுத்தறிவியக்கமும் ஆற்றிய சமுதாயப் பணிகளும்.
3. மூதறிஞர் இராஜாஜியின் இளமையும் கல்வியும்.
4. இராஜாஜியும் சமுதாயப் பணிகளும்.
5. இராம் மோகன்ராயின் இளமைக்காலமும் முற்போக்கு எண்ணமும்.
6. இராஜா ராம்மோகன்ராய் ஆற்றிய சமுதாயத்தொண்டுகள்.
7. தயானந்தரின் ஞானவேட்கைப் பயணம்.
8. தயானந்தரின் சீர்திருத்தக் கொள்கைகள்.
9. இங்கிலாந்தில் அன்னி பெசண்ட் அம்மையாரின் தொண்டு.
10. அன்னி பெசன்ட் அம்மையார் இந்தியாவில் ஆற்றிய சமுதாயப் பணிகள்.
11. வீரேசலிங்கம் ஆற்றிய சமுதாயச் சீர்திருத்தப் பணிகள்.
12. வீரேசலிங்கத்தின் இலக்கியப் பணி.
13. கோகலேவின் அரசியல் ஈடுபாடு.
14. கோகலேவின் பண்புகளும் சமுதாயப் பணிகளும்.
15. அண்ணல் காந்தியடிகளின் இளமையும் கல்வியும்.
16. இந்திய விடுதலைக்காகக் காந்தியடிகள் மேற்கொண்ட அன்பு நெறியும் அரும்பணியும்.
17. அக்காள் சுபலட்சுமியின் இளமையும் கல்வியும்.
18. கைம்பெண்களுக்காக அக்காள் சுபலட்சுமி ஆற்றிய அரும்பணிகள்.
19. அன்னை முத்துலட்சுமியின் இளமையும் கல்வியும்.
20. பெண்ணினத்திற்காக அன்னை முத்துலட்சுமி ஆற்றிய அரும்பணிகள்.
21. அம்பேத்கார் அனுபவித்த தீண்டாமைக் கொடுமைகள்.
22. கல்வி, சட்டம், அரசியல், சமயம் ஆகிய துறைகளில் அம்பேத்கார் ஆற்றிய அருந்தொண்டுகள்.
23. அறிஞர் அண்ணாவின் இளமைப் பருவம்.
24. அண்ணாவின் பல்துறைச் சமுதாயப் பணிகள்.

